# வல்லாள மகாராசன் கதை



பதிப்பாசிரியர்
சு. தாமரைபாண்டியன்

# வல்லாள மகாராசன் கதை

## (நாட்டார் கதைப் பாடல்)

பதிப்பாசிரியர்
சு. தாமரைப்பாண்டியன்

கே. சண்முகம்
(நூல் வெளியிடுவோர் & விற்பனையாளர்)
எண் : 142, பிள்ளையார் கோவில் தெரு,
ஜாபர்கான்பேட்டை, சென்னை - 600 083.
பேசி : 97890 72478

# வல்லாள
# மகாராசன் கதை
## [நாட்டார் கதைப் பாடல்]

வெளியீடு : 2013

பக்கம் : 160

விலை : ரூ. 100.

அச்சிட்டோர் : ஸ்ரீ அய்யனார் பிரிண்டர்ஸ்
சென்னை - 94.
போன் : 9941163085

# உள்ளே...

பேரா. **கி. நாச்சிமுத்து** எம்.ஏ., பிஎச்.டி.

*தமிழ்த்துறைத் தலைவர்*
*கேரளப் பல்கலைக்கழகம்*
*காரியவட்டம் - 695581.*
*திருவனந்தபுரம்*

*23.10.2006*

# வாழ்த்துரை

கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையில் பேராசிரியர் முனைவர் பீ. டாக்டர் நசீம்தீன் அவர்களிடம் முனைவர் பட்டத்திற்கு, குடிப் பெயர்வுகள் பற்றிய நாட்டார் வழக்காறுகள் என்ற பொருளில் ஆராய்ச்சி செய்து முனைவர் பட்ட ஆய்வேடு சமர்ப்பித்துள்ள ஆராய்ச்சி மாணவர் திரு. தாமரை பாண்டியன் வாழ்த்துரை வேண்டும் என்று சொல்லி வல்லாள மகாராசன் கதைப்பாடல் என்ற அச்சுப்படியை எடுத்துத் தந்தார்.

இவர் இதற்கு முன்பு 'கட்டறுந்த சலனங்கள்' என்ற கவிதைத் தொகுப்பு, நாட்டார் வழக்காறுகளில் மக்கள் இடம் பெயர்வும் வரலாறும் எனும் நூல்களை வெளியிட்டுள்ளார். இன்னும் சில நாட்டுப்புறக் கதைப்பாடல் ஏட்டுச்சுவடிகளையும் பதிப்பிக்கத் திட்டமிட்டிருக்கிறார்.

வல்லாள மகாராசன் கதை தமிழில் யட்சகானமாகவும் பிறவாறும் புகழ்பெற்று விளங்குவதாகும். திருவண்ணாமலையை மையமாகக் கொண்டு கதை நடக்கும். திருவண்ணா

மலைத் தலபுராணம் போன்றவற்றில் இதைப்பற்றிய குறிப்புகளைக் காணலாம்.

இந்தக் கதையின் வரலாறு மட்டுமல்ல அதன் சமூக மானிடவியல் அடிப்படைகளும் சிறப்புக் கவனம் பெறுபவை. எனவே இதைப்பற்றி மேலாராய்ச்சி செய்பவர்க்கு இச்சுவடிப் பதிப்பு, துணை செய்யும் என்பதில் ஐயமில்லை.

திரு. தாமரை பாண்டியன் இத்துறையில் இன்னும் கவனம் செலுத்திச் சுவடிகளைச் சேகரித்து அவற்றை நன்முறையில் பதிப்பித்து வெளியிட வேண்டும். அதற்கு அவர் கேரளப் பல்கலைக் கழகத்தில் பெற்ற கல்வியும் பயிற்சியும் துணை நிற்கும் என்பதில் ஐயமில்லை.

அவர் கல்வித்துறையிலும் ஆராய்ச்சித் துறையிலும் பதிப்புத் துறையிலும் மேன்மேலும் சிறந்தோங்கி வாழ்விலும் வளம் பெற்று வாழ வாழ்த்துகிறேன்.

# அணிந்துரை

**முனைவர். பீ. டாக்டர் நசீம்தீன்**
*பேராசிரியர், தமிழ்த்துறை,*
*கேரளப் பல்கலைக் கழகம்.*

தமிழகத்தின் தென் பகுதியில் பலநூறு ஓலைச்சுவடிகள் பதிப்பிக்கப்படாமல் அழிந்து கொண்டிருக்கின்றன எனும் கூற்று ஒலிக்கத் தொடங்கிப் பல ஆண்டுகள் ஆகின்றன. அவற்றைத் தேடிக் கண்டுபிடித்துப் பதிப்பிக்கும் முயற்சியில் நிறுவனங்கள் குறைந்த கவனம் செலுத்தி வருகின்றன. இந்நிலையில் தாமரை பாண்டியன் போன்ற தனி ஆர்வலர்கள் சில ஏட்டுச்சுவடிகளைப் பலவித இன்னல்களுக்கும் இடையில் பதிப்பிக்க முயன்று வருவது பாராட்டுக்குரியதாகும். 'வல்லாள மகாராசன் கதை' எனும் வில்லுப்பாட்டு இங்கு அச்சேறுகிறது.

வல்லாள மகாராசன் என்பவன் வரலாற்றில் இருந்தவனா? அல்லது கற்பனைப் பாத்திரமா? அல்லது பெயர் மறைக்கப்பட்ட புனைபெயரா? - என்பதெல்லாம் வரலாற்றை மீட்டுருவாக்கி உணரப்பட்டிருக்கிறது. ஹொய்சாள பரம்பரையைச் சார்ந்த மூன்றாம் வல்லாளன், சுந்தரபாண்டியனது காலம் எனக் கணக்கிடுகின்றார்.

அரசர்களின் மனைவியருக்குக் குழந்தையில்லாமல் ஆகுதலும் அதற்காகத் தவமிருத்தல், அல்லது இறைவனை வேண்டுதலும் நாட்டுப்புறக் கதைகளிலும், கதைப்பாடல்களிலும் ஒரு பொது மரபாகக் காணப்படுகிறது.

குழந்தையில்லாத நிலையில் 'தத்து' எடுக்கும் மரபும் வழக்கத்தில் இருந்திருக்கிறது. இவ்வில்லுப்பாட்டின் கதை 'அருணாசல புராண'த்திலிருந்து எடுக்கப்பட்டிருக்கிறது.

திருவண்ணாமலைப் பகுதியில் நிகழ்ந்ததாகக் கருதப்படும் இவ்வரலாறு தமிழகத்தின் தென்பகுதியில் வழங்கிடக் காரணத்தையும் காணுகிறார் தாமரை பாண்டியன்.

மக்களை மகிழ்விக்கவும், சிவ புராணங்களை—மக்கள் மத்தியில் பரப்பும் நோக்கிலும் இது போன்ற கதைகள் மக்களிடையே நிகழ்த்தப்பட்டுள்ளன. சிவபெருமானின் திருவிளையாடல்கள் நாட்டுப்புறக் கதை மரபில் பல வடிவங்கள் பெற்றிருக்கின்றன.

குழந்தையில்லாத நிலைக்கு அரசனிடம் அரசிகள் முறையிடுவதும், பெண் தேடி வந்த ஆண்டவருக்குப் பெண்டாகிப்போக ஓர் அரசி முன்வருவதும் உளவியல் கோட்பாட்டடிப்படையில் ஆராயத்தக்கனவாகும். எனினும் பெண்டாகச் சம்மதித்த அரசிக்கே குழந்தையாக வந்து அருள்பாலித்த இறைவனின் பெருமை பேசப்படுகிறது.

சமயத் தத்துவ நோக்கில் பார்க்கும்போது இறைவனிடம் முழுச் சரணாகதியடைதல் என்ற தத்துவத்தின் நிலையில் நாட்டுப்புற மக்களின் மனவெளிப்பாடாகவும் இக்கதை நிகழ்வைக் கொள்ளலாம்.

வில்லுப்பாட்டு வடிவில் பாடப்பட்டுள்ள இக்கதைப் பாடல் கவிதை அழகு பெற்றிருப்பதனையும் தாமரை பாண்டியன் சுட்டிக் காட்டியிருக்கிறார். இக்கதையின் வேறுபல வடிவங்களையும் தேடிக் கதை வேறுபாடுகள், வடிவ வேறுபாடுகள் ஆகியவற்றைத் தொடர் ஆய்வாக மேற் கொள்வார் என எதிர்பார்ப்போம். திரு. தாமரை பாண்டியனின் இவ் அரியபணி மேலும் சிறக்க வாழ்த்துக்கள்.

# என்னுரை

நாட்டார் கதைப்பாடல்கள் நாட்டாரின மக்களின் கலை இலக்கிய வகைகளில் ஒன்று. இக்கலை இலக்கியம் மக்களின் மரபுசார்ந்த வாய்மொழிவழி பாதுகாக்கப்பட்டு வருகிறது.

நாட்டார் கதைப்பாடல்கள் மக்கள் வரலாற்றையும், வாழ்வியல் கூறுகளையும் தன்னுள் கொண்டுள்ளன. எனவே நாட்டார் கதைப்பாடல்களை ஆய்வுக்குட்படுத்துவதன் மூலம் குடிமக்கள் வரலாறு தெளிவுபெறும்.

நாட்டார் கதைப்பாடல்களை வரலாற்றுக் கதைப்பாடல்கள், புராணக் கதைப்பாடல்கள், நாட்டார் தெய்வக் கதைப்பாடல்கள் என்று வரையறுக்கலாம்.

பதிப்பிக்கப்பெறும் இந்த வல்லாள மகாராஜன் கதை ஒரு வரலாற்றுப் புராணக் கதைப்பாடல் எனும் நிலையில் அமைகிறது. காரணம், தமிழகத்தில் கி.பி. 1317 ஆம் ஆண்டு காலகட்டத்தில் திருவண்ணாமலைப் பகுதியை ஆண்ட கன்னட ஹொய்சள மன்னன் வல்லாள மகாராஜன் ஆவான். அவன் சிறந்த சிவபக்தன். அவன் திருவண்ணாமலை கோவிலுக்குப் பல நன்கொடைகளை வழங்கியுள்ளான். அதனைத் தெளிவுபடுத்தும் கல்வெட்டுக்களும் கிடைத்துள்ளன. வல்லாள மகாராஜனின் வாழ்வுச் சிறப்பினையும், பக்தி நெறியினையும் வெளிப்படுத்தும் வண்ணம் இக்கதைப்பாடல் அமைவதால் இதனை வரலாற்றுப் புராணக் கதைப்பாடல் எனலாம்.

இக்கதைப்பாடல் பிற நாட்டார் கதைப்பாடல்களிலிருந்து முற்றிலும் வேறுபட்ட கதைக் கருவினை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளது. குழந்தைப் பேறு வேண்டித் தான, தர்மம் செய்யும் நிலைப்பாடு பெரும்பாலும் அனைத்துக் கதைப்பாடல்களிலும் காணப்பெறும் ஒரு கூறுபாடு ஆகும். ஆனால் வல்லாள மகாராஜன் கதைப்பாடலில் குழந்தைப் பேறு வேண்டி தலைவன் மற்றும் தலைவிகள் படும் வேதனை; குழந்தைப்பேறு வேண்டி செய்யும் முப்பத்திரண்டு தானதர்மங்கள்; இதனைக் கண்ட இந்திரனுக்குத் தனது பதவி பறி போகுமோ என்ற அச்சம்; நாரதர் தான தர்மத்தைக்

குலைக்கச் சதி செய்தல்; முடியாமல் சிவபெருமானைத் தூண்டிவிடல்; சிவன் தானதர்மத்தைச் சோதித்து இறுதியில் அவரே குழந்தையாக மாறுதல்; அதன்பின் வல்லாள மகாராசனையும் அவனது தேவியரையும் சிவன் ஆசீர்வதித்து அருள்புரிதல்; மேலும் சிவனே குழந்தையாக இருந்து வல்லாளனுக்கும் அவனுடைய தேவியருக்கும் இறுதியில் இறப்புச் சடங்குகள் செய்ததாகவும் கதைவழி அறியமுடிகின்றது.

இக்கதைப்பாடல் அருணாச்சல புராணம் எனும் நூலை அடியொற்றி எழுதப்பட்டுள்ளது. இக்கதைப்பாடல் அடித்தள மக்களுக்கு அருணாச்சல புராணத்தை அறிமுகம் செய்யும் நோக்கில் படைக்கப்பட்டுள்ளது என்றும் கொள்ளலாம். எனவே அடித்தட்டு மக்களின் கலைப் பொக்கிஷங்களில் ஒன்றான இக்கதைப்பாடலை அழியாமல் காப்பதுடன், ஆய்வாளர்களுக்கு அறிமுகம் செய்யும் நோக்கிலும் பதிப்பிக்கப்பெறுகிறது.

இந்நூலுக்கு வாழ்த்துரை வழங்கிய கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர் பேரா. கி. நாச்சிமுத்து அவர்களுக்கும், அணிந்துரை நல்கிய பேரா. டாக்டர் நசீம்தீன் அவர்களுக்கும் முதற்கண் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்து, எனது வளர்ச்சியில் பேரின்பம் கொள்ளும் இமயம் கலை அறிவியல் கல்லூரி முதல்வர் திரு. பிரபு அவர்களுக்கும், திரு. வெள்ளையாம்பட்டு சுந்தரம் அவர்களுக்கும் எனது மேலான நன்றி உரியதாகும்.

நாககன்னி கதை எனும் கதைப்பாடல் சிறியதாயிருப்பதால் இந்நூலில் இணைத்திடலானேன். இந்நூலைப் பதிப்பிக்கத் தூண்டியதோடு மட்டுமில்லாமல் பல நிலைகளில் உதவிபுரிந்த திரு. தி. இராஜரெத்தினம் எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி., அவர்களுக்கும் என்னுடைய சிறப்பான நன்றியினைச் சமர்ப்பிக்கிறேன். மேலும் திரு. காசி (ஆய்வாளர்), செந்தில் நாராயணன் (ஆய்வாளர்), தே. கிரிஜா, திரு. உடையார் புலவர் (திருமலாபுரம்), புலவர் திரு. அப்பாவு நாடார் (சிவசுப்பிரமணியபுரம்) ஆகியோருக்கும் எனது நன்றி. எல்லாவற்றிற்கும் மேலாக எனது தந்தை சுப்பிரமணியன் அவர்களுக்கும், தாயார் அன்னபாக்கியம் அவர்களுக்கும் என்னுடைய நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**சு. தாமரை பாண்டியன்** எம்.ஏ., பிஎச்.டி.,
விரிவுரையாளர்
பி.ஜி.பி. கலை அறிவியல் கல்லூரி
நாமக்கல் - 637206

# ஆய்வு முன்னுரை

பாமர மக்களின் இலக்கியச் செல்வங்களில் ஒன்று கதைப்பாடல் ஆகும். இவை வில்லுப்பாட்டு வடிவங்களில் தமிழகத்தின் தென்பகுதிகளில் வழங்கி வருகின்றன. இன்று இக்கதைப்பாடல்கள் அழிந்து வருகின்றன. இறந்தவரோடு சேர்த்து எரித்தும். தீயிலிட்டு விறகுக்குப் பதிலாய் எரித்தும் அழித்த கதை உ.வே.சா.வுக்கு மட்டும் கிடைத்த கதை அல்ல. சுவடி சேகரிப்பில் இறங்கியுள்ள அனைவருக்கும் கிடைக்கும் வேதனை தரும் செய்திதான். அழிந்தவை போக எஞ்சியுள்ள கதைப் பாடல்களையாவது காக்க வேண்டும்.

அறியாமை இருள்பட்டுக் காலனுக்கு இரையாகும் கதைப்பாடல்களைக் கண்டுபிடித்து அறிஞர் பலர் பதிப்பித்து வருகின்றனர். 'வல்லாள மகாராசன் கதை' ஏட்டைப் பல இடையூறுகளுக்கிடையே கண்டுபிடித்துப் பதிப்பிக்க முயற்சி மேற்கொள்ளப்பட்டது. 'வல்லாள மகாராசன் கதை' என்னும் இக் கதைப்பாடல் பதிப்பானது, கதைப்பாடல் - பதிப்பித்தல் என்னும் தொடர் நிகழ்ச்சியின் ஒரு பகுதியாகும்.

**வல்லாள மகாராசன் கதை - கதைப்பாடல்**

'வல்லாள மகாராசன் கதை' என்று ஒரு கதைப்பாடல் சிவசுப்பிரமணியபுரம் (இராதாபுரம் வட்டம்) ஐ. அப்பாவு நாடார் என்ற வில்லிசைக் கலைஞரிடம் இருந்தது. வழக்கமாகக் காணப்படும் கதைப்பாடல் தலைப்புகளில் இருந்து இது வேறுபட்டதாகத் தெரியவே, அதை அவரிடமிருந்து படியெடுத்துக் கொண்டுவந்து, வாசித்தபோது, அது வித்தியாசமான ஒரு கதையாகப்பட்டது.

கதைப்பாடல்களின் பாடு பொருளானது பெரும்பாலும் அடித்தள மக்கள் வழிபடு தெய்வங்களையோ, வாதைகளையோ, குறிப்பிட்ட தென்தமிழகப் பகுதியோடு தொடர்புடைய செய்தி

கலைளயோ குறித்து அமைகின்றன. ஆனால் இது ஒரு வரலாற்றுக் கதாபாத்திரத்தைச் சார்ந்து கற்பனை கலந்து பாடிய கதைப் பாடலாகும். திருவண்ணாமலையை ஆண்ட வல்லாள மகாராஜன் என்ற மன்னனைப் பற்றியது இக்கதைப் பாடல் ஆகும்.

**மூன்றாம் வல்லாள மகாராசன்**

தமிழ் மன்னர்களின் ஆளுகைக்கு உட்பட்டு, திருவண்ணா மலைப் பகுதி இருந்தாலும் கர்நாடகத்தைச் சேர்ந்த ஹொய்சாள மன்னர்களின் வருகையும் இங்கு நிகழ்ந்தது. இவர்களின் வருகை மற்றும் திருப்பணி பற்றிய குறிப்புகள் கி.பி. 1292ஆம் வருடத்திலிருந்து கி.பி. 1343வரை ஒன்பது கல்வெட்டுக்களில் காணக் கிடைக்கின்றன.

ஹொய்சாள பரம்பரையைச் சேர்ந்த மன்னர்கள் பத்தாம் நூற்றாண்டிலிருந்தே தமிழ்நாட்டுடன் தொடர்பு கொண்டிருந்தனர். திருவண்ணாமலையைப் பொறுத்தவரை ஹொய்சாள அரசர்களில் முக்கியமானவன் மூன்றாம் வல்லாள மகாராஜன். இவன் சுந்தர பாண்டியனோடு அணிசேர்ந்து தொண்டை மண்டலத்தின் சில பகுதிகளைத் தன்னுடைய ஆட்சியின் கீழ்க் கொண்டுவந்தான். இதில் திருவண்ணாமலையும் அதைச் சுற்றியிருந்த பகுதிகளும் அடங்கும். இதனைத் திருவண்ணாமலையில் கிடைத்த கி.பி. 1317ஆம் ஆண்டுக் கல்வெட்டின் மூலம் அறிகின்றோம்.

மூன்றாவது வல்லாள மகாராஜனுக்கு வீர வைபோக வல்லாள மகாராஜன் என்ற பெயருண்டு. திருவண்ணாமலை ஆலயங்களில் உள்ள கல்வெட்டுக்கள் முழுதும் இவன் காலத்தில் ஏற்பட்டவையே. இவை மூன்றாவது பிரகார மதிற் சுவரிலும் செதுக்கப்பட்டுள்ளன.

முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டியது என்னவென்றால் அவன் கட்டிய வல்லாள இராஜ கோபுரத்தைப் பற்றி எந்த விவரமும் இக்கல்வெட்டுகளில் இல்லை. இது பரம்பரையாக வல்லாள கோபுரம் என்று அழைக்கப்பட்டாலும் அவன் கட்டியதற்கு ஆதாரமாக இந்தக் கோயிலில் உள்ள ஐந்நூறு கல்வெட்டுகளிலும் ஒன்றைத்தவிர வேறு எதிலும் குறிப்பு இல்லை.

ஒரே ஒரு கல்வெட்டு மட்டும்தான் இதை வல்லாள கோபுரம் என்று குறிப்பிடுவதாக அறியப்படுகிறது. மேலும் இக்கல்வெட்டுக்

களிலிருந்து மூன்றாவது பிரகாரமும் கிழக்குக் கோபுரமும் கி.பி. 1317ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது என்றும் கல்வெட்டு ஒன்று கூறுகிறது. இந்தக் குறிப்பிட்ட கல்வெட்டு மிக முக்கியமான செய்தியை நமக்குக் கூறுகின்றது. இது தேவநாகரியிலும் கிரந்தங்களிலும், தமிழிலும் வடிவமைக்கப்பட்டுள்ளது.

இந்தக் கல்வெட்டுக்களில் இரண்டு தேதிகள் குறிக்கப் பட்டுள்ளன. ஒன்று கிறித்தவ ஆண்டு பிப்ரவரி 15ஆம் தேதி 1317ஆம் வருடம். மற்றொன்று ஆகஸ்ட் 5, 1317. இந்த இரு தினங்களிலும் இந்தக் கல்வெட்டு பொறிக்கப்பட்டதாக ஓர் அறிவிப்பு கூறுகின்றது.

- வல்லாள மகாராஜன் திருவண்ணாமலைக்கு வந்தபொழுது அவன் செய்த நன்கொடைகளைப் பற்றிக் கூறுகிறது. இக் கல்வெட்டில் திருவண்ணாமலையை அருணசமுத்ர வல்லாள பட்டணம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் இந்தப் பகுதி ஹொய்சாள மண்டலத்தின் தலைநகரமாக விளங்கியது என்றும் கூறப்படுகிறது.

நிலவரி, கடைகள் வரி முதலியவற்றிலிருந்து கிடைத்த தொகையை அரசன் (மூன்றாம் வல்லாள மகாராஜா) அண்ணாமலை ஆலயத்திற்குத் தினமும் மூன்று வேளை வழிபாட்டிற்கும் பஞ்ச பருவச்செலவை. அதாவது பிரதோஷம். அமாவாசை, பௌர்ணமி (தீபப் பெருவிழா) முதலிய பண்டிகைகளுக்கு ஆகும் செலவை இதிலிருந்து எடுத்துக் கொள்ளும்படிப் பணித்தான். இந்தச் செய்திகள் வட மொழியில் பொறிக்கப்பட்டுள்ளன.

தமிழ்ப் பகுதியில் இவ்வரசன் அண்ணாமலையார் வழி பாட்டிற்காகவும் மேலும் விழாக்களுக்காகவும் 10,000 பொன் நன்கொடையாக அளித்ததாகவும் கூறப்படுகிறது. இக்காலத்தில் தான் மூன்றாவது பிரகாரமும் கிழக்குக் கோபுரமும் கட்டப்பட்டிருக்க வேண்டும். ஏனெனில் அறுபது ஆண்டுகளுக்குப் பிறகு செதுக்கப் பட்ட கல்வெட்டில் இந்தக் கோபுரத்தை வீர வல்லாள திருவாசல் என்று குறிப்பிட்டிருப்பது காணக்கிடைக்கிறது.

மேலும், இங்குள்ள கல்வெட்டுகளில் நிலங்களின் நன்கொடையும், சிவாச்சாரியார்களுக்கு அளித்த தானமும்

கூறப்பட்டுள்ளன. இக்காலத்தில்தான் நான்காவது பிரகார மதிற்சுவரும் கட்டப்பட்டது.

வல்லாள மகாராஜன் முப்பத்து மூன்றாயிரம் பொன் ஆலயத்திற்காகக் கொடுத்ததை மற்றொரு கல்வெட்டு கூறுகிறது. இதுவே தனி அரசன் ஒருவன் கொடுத்த தொகையில் மிக அதிகமாகும். (ஸ்ரீ அருணாசலேசுவரர் திருக்கோவில் மஹா கும்பாபிஷேக மலர், 2002, மற்றும் முனைவர் ச. மெய்யப்பன், 'திருவண்ணாமலை,' - மணிவாசகர் பதிப்பகம்)

மேற்கண்ட செய்திகளிலிருந்து வல்லாள மகாராஜா திருவண்ணாமலைப் பகுதியை ஆண்ட கன்னட ஹொய்சாள மன்னன் என்பதை அறிகிறோம்.

**அருணாசலப் புராணம்**

இப் புராணம் திருவண்ணாமலையோடு தொடர்புடைய நூல் ஆகும். இதில் வல்லாள மகாராஜன் கதை பாடப்பட்டு உள்ளது. இந்நூலில் கூறப்படும் கதை கற்பனைக் கதையே ஆகும். அபிதான சிந்தாமணியில் இக்கதை பதிவு செய்யப்பட்டுள்ளது.

'வல்லாளன் விஜய நகரத்து அரசரில் ஒருவன். இவன் புத்திரப் பேறு வேண்டிச் சிவன் அடியவர்க்குத் தானஞ் செய்து வருகையில் சிவ மூர்த்தி இவனிடம் ஒரு சங்கமராய் வந்து பெண் போகம் விரும்பினார். அரசன் சங்கமர்க்கு அவ்வாறு செய்விக்க எண்ணிக் குறித்த தினத்தில் தன் ஊர் முழுவதும் தாசிகளைத் தேடி அழைத்து வருமாறு ஏவலாளரை ஏவினார்: ஏவலாளர் சென்று தேடியபோது ஒவ்வொருவர் வீட்டிலும் ஒரு நாயகன் இருக்கக் கண்டு தம் இயலாமையை அரசனுக்குக் கூறினர்.

'இதை அறிந்த அரசன் தன் தேவியரில் ஒருத்தியை இசைவித்துப் பஞ்சணையில் படுத்துறங்கும் சங்கமரிடம் ஏவினான். அவள் சென்று மஞ்சத்தில் நித்திரை பூண்டிருந்த சங்கமரைக் கண்டு அவரை அணைக்க, சங்கமர் குழந்தை உருவாய் அரசன் அவாக்கெட இருந்து அநுக்கிரகித்துச் சென்றார். சிலநாள் இருந்து அரசன் திருக்கயிலை அடையச் சிவமூர்த்தி அரசருக்குத் தாமே கர்மாதிகளைச் செய்தார் என்பர்.' (அபிதான சிந்தாமணி)

அருணாசலப் புராணத்தில் கூறப்படும் மேற்கண்ட கதையினை வல்லாள மகாராசன் கதை என்ற பெயரில் கதைப் பாடலாக்கி யுள்ளார் ஆசிரியர். நாட்டுப்புற மக்களுக்குத் தேவையான செய்திகளை இணைத்தும், அறக்கருத்துக்கள் பலவற்றைச் சேர்த்தும் ஒரு கதை சொல்லியாக இக்கதை ஆசிரியர் விளக்கி உள்ளார்.

**வல்லாள மகாராசன் கதை – கதைச் சுருக்கம்**

அருணையம்பதியை ஆண்டு வருபவன் வல்லாளன். அவனுக்கு மல்லம்மா, சல்லம்மா என்று இரு மனைவியர். இவர்களுக்குக் குழந்தை இல்லை. எனவே, தான தருமங்கள் செய்து இறைவனை மனம் மகிழச் செய்து தங்கள் ஆசையை நிறைவேற்றிக் கொள்ள முடிவு செய்கின்றனர். முப்பத்திரண்டு தான தருமங்கள் செய்து வருகிறார்கள். அதன்படி, யார் வந்து எது கேட்டாலும் கொடுக்க வேண்டும். இல்லை என்று சொல்லிவிட்டால் அவன் விரதம் அழிந்து விடும்.

வல்லாளன் செய்யும் தானதர்மம் பற்றிய செய்தி தேவர்கள் மூலம் விண்ணுலகை எட்டுகிறது. தேவேந்திரனிடம், வல்லாளனால் அவன் பதவிக்கே ஆபத்து என்று உபதேசிக்கிறார்கள் தேவர்கள். ஏனெனில், பூமியில் தான தர்மம் தவறாது செய்பவர் விண்ணவர் தலைவனாகலாம் என்பது பொதுவிதி. எனவே, வல்லாளனின் விரதத்தைக் கெடுக்க நாரதர் பூமிக்கு வந்து வல்லாளனைச் சோதித்துப் பார்க்கின்றார்; தோல்வியடைகின்றார். இறுதியாகச் சிவனிடம் செய்தி செல்கின்றது. ஈஸ்வரனே வல்லாளனைச் சோதிக்க முடிவு செய்கிறார்.

அடியார்கள் பெண் தானம் கேட்டால் கொடுப்பதற்கு. நாட்டிலுள்ள விலைமாதர்கள் அனைவரையும் வரவழைத்து, அவர்களுக்கு வீடும் கொடுத்துப் பாதுகாக்கிறான் வல்லாளன். இதையறிந்த இறைவன், எல்லா விலைமாதர் வீட்டிலும் மாறுவேடத்தில் தேவர்களைப் புகச் செய்துவிட்டு, தான் மாறுவேடத்தில் அரண்மனை போய் பெண்தானம் கேட்கிறார். மன்னன் ஏவலர்களை அனுப்பிப் பெண்ணை ஏற்பாடு செய்யச் சொல்கிறார். ஆனால், ஏவலர் ஏமாற்றத்தோடு திரும்பவே, தானே நேரிற் சென்று எல்லா வீட்டுக் கதவையும் தட்டிக் கேட்கிறார். ஒருவருடன் ஒரு விலைமாது இருக்கச் சம்மதித்து விட்டால், பிறகு யார் வந்து கேட்டாலும் தம்நிலை

மாறக் கூடாது என்பது விலைமாதர் இலக்கணம். அதைக் கூறி அப் பெண்கள் மறுத்து விடவே, மன்னர் ஏமாற்றத்தோடு திரும்புகிறார். இறைவனோ பெண்ணுக்கு வேண்டி ஊருக்கு வெளியே காத்திருக்கிறார்.

அரண்மனையில் சோகமுடன் இருந்த மன்னனைக் கண்ட அவன் தேவியரில் ஒருத்தி பெண் தானமாகப் போகச் சம்மதிக்கிறாள். அரசனும் மகிழ்ந்து அனுப்பி வைக்கிறான்.

அரசி வந்து பார்க்கும்போது இறைவன் துயில்வது போன்று நடித்தார். அவள் திரும்பிப்போகாது இறைவனை அணைத்தாள். இறைவன் அவர்களின் நீண்டநாள் இலட்சியமான குழந்தையாய் உருமாறினார். இதுவும் தெய்வச் செயலோ என்று மகிழ்ந்து குழந் தையை யாவரும் கண்ணுற்று நிற்க, இறைவனாகிய குழந்தை மறைந்து விடுகிறது. பின் இறைவன் இவர்களுக்குக் காட்சி கொடுத்து "அம்மா, அப்பா" எனக் கூப்பிட்டு "இன்றோடு உங்கள் கவலை ஒழிந்தது. உங்கள் அந்தியக் கால ஈமச் சடங்குகளை நானே முடிப்பேன். அதுவரை இந்த அருணயம்பதியை ஆண்டு வாருங்கள். பின் நீங்கள் சொர்க்கலோகம் அடையலாம்" என்று கூறி மறைகிறார். அதுவரை இந்த அருணையம்பதியை ஆண்டு வாருங்கள். பின் நீங்கள் சொர்க்கலோகம் அடையலாம்" என்று கூறி மறைகிறார்.

**நாட்டுப்புறவியல் கூறுகள்**

வில்லுப்பாட்டு பாடுவது போன்று பாட்டும் உரையுமாக மாறிமாறிக் கதைப்பாடல் அமைந்துள்ளது. உரைப் பகுதியில் தற்காலச் செய்திகள்கூட இடம் பெற்றுள்ளன. ஆங்கிலச் சொற்கள் சில இடம்பெற்றுள்ளன. சான்று, ஸ்பீக்கர்.

குழந்தையில்லை என்று அரசி ஒருத்தி கணவனிடம் புலம்பி அழும்போது,

*"திண்ணையிலே மகனை வைத்து*
*சிறுகலத்தில் சோறூட்டி*
.....................................
*வேறொருவர் பிள்ளையிடம்*
*மகன் விளையாடப் போனயிடத்தில்*
*உன் மகன் அடித்தான் என்று*
*ஒருத்தி வரக் காணேனே"* (8)

மேற்கண்ட பாடலில் நாட்டுப்புறச் செய்திகள் இரண்டு உள்ளன.

1) திண்ணை என்ற சொல்; திண்ணை கிராம வீடுகளில் வெளி வாயிலுக்கு இரு பக்கங்களிலும் 'திண்டு' போல் அமைந்த பகுதி. அதில் காற்றோட்டமாக அமர்வதும், ஓய்வெடுப்பதும் உண்டு. வல்லாளன் அரண்மனையில் ஏது திண்ணை?

2) கிராமத்தில் வளரும் குழந்தைகள் சேர்ந்து விளையாடும்; சண்டையிடும்: பின் தாயிடம் போய்ச் சொல்லும். மன்னன் மகன் வெளியே தெருவில் விளையாடப் போவானா? அப்படியே போய் அடித்தாலும் அதை அரசியிடம் போய் யார் சொல்வது?

மேற்கண்டவற்றிலிருந்து பாடுவது அரசனைப்பற்றிய புராணக் கதையாக இருந்தாலும். அதைக் கேட்கின்ற மக்களுக்குச் சுவை பயக்கும் வண்ணம். அவர்கள் வாழ்வோடு இயைந்த நிகழ்ச்சி களை. சிறு சிறு பகுதிகளிலும்கூட அமைத்துப் பாடும் மரபைப் பின்பற்றி வருகின்றனர். நாட்டுப்புறக் கதை ஒன்றையும் இடையே பொருள் கூறும்போது கிளைக்கதை போல் இணைத்துள்ளார்.

**புராணக் கதைகளை எடுத்தாளுதல்**

பல இடங்களில் புராணச் செய்திகளை எடுத்தாண்டுள்ளார். குழந்தை இல்லாக் கவலையில் ஆழ்ந்து இருந்த மன்னனிடம் மந்திரிகள். "உலகில் பிறந்தால் தேவர்கள்கூடக் கவலையில்லாமல் வாழ்ந்ததில்லை" என்று கூறிவிட்டு. அதற்கு உதாரணமாக,

*"சந்திரனுக்குடல் உருக்கம் தன*
*தனுக்கோர் கண் ஊனம் கருவிநிழல்*
*இந்திரனுக்கோர் அவக்குறியாம்*
*யெமனுக்கோர் புழுக்காலாம் இரவியீன்ற*
*மைந்தனுக்கோர் கால்முடமாம்*
*.................................................................."* **(5)**

என்று அடுக்கிக் கூறிப் பொருளும் கூறி உள்ளார். இது போன்று பல பகுதிகள் அமைந்துள்ளன.

**மேற்கோள் பாடல்கள்**

பாடல்களுக்குப் பொருள் கூறும்போது திருக்குறள், ஔவையார் (நல்வழி), விவேக சிந்தாமணி மற்றும் பிற்காலத்

தனிப்பாடல்கள் ஆகிய நூல்களிலிருந்து மேற்கோள்களை எடுத்தாண்டுள்ளார்.

1) *சாதி இரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்*
*நீதிவழுவா நெறிமுறையில் - மேதினியில்*
*இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தார்*
*பட்டாங்கில் உள்ள படி (நல்வழி 2)*

2) *எல்லோர்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்*
*செல்வர்க்கே செல்வம் தகைத்து (திருக்குறள் 125)*

3) *தீயினாற் சுட்டபுண் உள்ளாறும்; ஆறாதே*
*நாவினாற் சுட்ட வடு (குறள் 129)*

இதுபோன்று இன்னும் பல மேற்கோள்கள் இக்கதைப்பாடலில் இடம் பெற்றுள்ளன. சில மேற்கோள்கள் எங்கிருந்து பெறப்பட்டன என்ற தெளிவில்லை.

**வடசொற்கள்**

இக்கதைப் பாடலில் நிறைய வட சொற்கள் பயின்று வந்துள்ளன. அருணாசலப் புராணத்தில்கூட இத்தனை வட சொற்கள் வந்துள்ளனவா என்பது ஆராயத்தக்கது. நாட்டார் மக்களிடம் கதை சொல்லும்போது புலவர்கள் இவ்வட சொற்களுக்கும் பொருள் சொல்லியே செல்வர். இவ்வட சொற்கள் 'கலைச் சொற்கள்' (Technical Terms) போன்றே விளங்கி வருகின்றன. சான்று: 1) பாதார விந்தம் (பாடல்: 13). 2) ஆஸ்தி (14). 3)ஆசாரம் (23) போன்றவை.

பாட்டுக்களில் வடசொற்கள் குறைவு. வசனம் எழுதும் போதுதான் அதிகமான வடசொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**படைப்பு - படைப்போர் - படிப்போர்**

மேற்கண்ட மூன்று சொற்களும் தம்முள் ஒரு சங்கிலித் தொடர்போல் தொடர்புடையவை. இம்மூன்றும் சேர்ந்ததே நல்ல இலக்கியமாக அறியப்படும். படைப்போர் தம் படைப்பைப் படிப்போரை நோக்கியே அமைக்கின்றார். ஆனால் இன்று படைப்போர் சிலர் படிப்போரைப் பற்றிய அக்கறையின்றித் தம் படைப்பைப் படைக்கின்றனர். வேறு சிலரோ, படிப்போரின் கீழ்த்தரமான உணர்ச்சிகளுக்குத் தீனி போடும் விதமாகப் படைக்கின்றனர். இரண்டுமே பயன் அற்றவை.

படைக்கப்பட்டவை படிப்போரை அடைய வேண்டும். படைப்போரும் படிப்போரும் எண்ணத்தால் ஒன்றுதல் வேண்டும். இவர்களிடையே நிலவும் அந்நியமாதல் தவிர்க்கப்பட வேண்டும். படைப்போர் - படிப்போர் இடையேயான எண்ணத் தொடர்புக்கு நிகழ்கலைகள் பாலமாக விளங்கி உள்ளன.

நாட்டார் கதை சொல்லிகள் விரைவில் மக்களைச் சென்றடை வதற்கு நாட்டார் நிகழ்கலைகள் மிகுந்த உதவி செய்கின்றன. வல்லாள மகாராசன் கதை - என்ற கதைப்பாடல் தென்னக மக்களிடம் சென்று சேர்வதற்கு நாட்டார் நிகழ்கலையான வில்லுப் பாட்டே மூலக்காரணியாகியிருக்கிறது. திருவண்ணாமலையை ஆண்ட வல்லாள மகாராசன் கதை திருநெல்வேலிக்கு வந்து சாதாரண மக்கள் மனங்களில் குடியேறிய மந்திரசக்தி இதுதான். எனவே இன்றைய கலைஞர்களின். கவிஞர்களின் படைப்புகளும் நிகழ்கலை வழியேதான் மக்களிடம் சென்று சேர முடியும். அது இன்றைய அறிவியல் சார்ந்த உத்திகளோடும் சேர்ந்தே நிகழலாம்.

**இப்பதிப்பு பற்றி...**

சிவசுப்பிரமணியபுரம் அ. அப்பாவு நாடார் சுவடியைக் கொண்டே இப்பதிப்பு செய்யப்பட்டு உள்ளது. இது ஒரு காகிதப் பிரதி ஆகும். இது சு. ஆதிப்பாண்டி என்பவர் பிரதி எடுத்து, வேல்க் கனி - தர்மக்கனி சகோதரிகள் (வில்லுப்பாட்டு கலைஞர்கள்) நாசரேத் சமீபம் பாடி வருகிற சுவடியிலிருந்து பிரதி செய்யப் பட்டதாகும். சுவடியில் உள்ளவாறே பாட்டும் வசனமுமாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. கதைப் பாடல்களுக்கே உரிய சில பொதுப் பிழைகள் களையப்பட்டுள்ளன. சான்று: 'வாள்ந்து' - என்பது வாழ்ந்து என்று திருத்தப்பட்டுள்ளது. 'எதர்கு' எ்தற்கு என்று திருத்தப்பட்டுள்ளது. மொழியியல் மாற்றங்கள், வட்டார வழக்குச் சொற்கள் போன்றவை அப்படியே கொடுக்கப்பட்டுள்ளன. மொழியியல் நோக்கில் ஆய்வாளர்க்கு அது பயன்படும்.

'பாட்டு' என்ற பகுதியில் உள்ள சில முக்கியக் கலைச் சொற் களுக்குப் பொருளும், வசனப் பகுதியில் வரும் மேற்கோள் பாடல் களுக்கு இடமும் அப்பகுதியிலேயே அடிக்குறிப்புமாகக் கொடுக்கப் பட்டுள்ளன. 'பாட்டு' என்பது கதைப்பாடல் யாப்பில் அமைந்துள் ளது. ஆனால், செய்யுள் என்றும் உபசெய்யுள் என்றும் சில

இடங்களில் சில செய்யுட்களைப் பயன்படுத்தி உள்ளார். உபசெய்யுள் என்பது கதைத் தொடர்பில்லாது பொருள் விளக்கமாக வந்த பிற இலக்கிய மேற்கோள் பாடல்கள் ஆகும். ஆனால், செய்யுள் என்பது கதைத் தொடர்போடு வருகிற யாப்போடு அமைந்த பாடல்கள் ஆகும். அருணாசலப் புராணத்தையும் இக்கதைப் பாடலையும் ஒப்பிட்டு ஆய்வோர்க்குப் பல செய்திகள் இதிலிருந்து ஆராயக் கிடைக்கக்கூடும்.

பதிப்பின் இறுதியில் சொல்லடைவு ஒன்று கொடுக்கப் பட்டுள்ளது. மேற்கோள் பாடல்களின் அகரவரிசை ஒன்றும் இணைக்கப்பட்டு உள்ளது.

**ஆசிரியர்**

இக்கதைப் பாடலை எழுதிய ஆசிரியர் யார் என்ற குறிப்பு கதைப் பாடலில் இல்லை. இவ்வாசிரியர், வல்லாளன் வரலாற்றையும், அருணாசலப் புராணத்தையும் நன்கு அறிந்திருக்கிறார். மேலும் திருக்குறள் முதலான இலக்கியங்களையும் அறிந்திருக்கிறார். நாட்டுப்புறக் கதைப்பாடல் புனையும் ஆசிரியர்களுக்கு நேரடியாக நல்ல ஆசிரியரிடம் படிக்க வசதி ஏற்பட வில்லை என்பதற்கு இக்கதைப் பாடலிலும் ஒரு சான்று உள்ளது.

"மக்கள் மெய்தீண்ட உடலுக்கின்பம் மற்றவர்சொல் செவிக்கின்பம்" - (குறள் - 65) இக் குறளிலுள்ள தவறுகள் ஒரு பக்கம்; இக்குறளுக்கு விளக்கம் தரும்போது 'மற்றவர்' என்பதை 'மற்று அவர்' என்று பிரிக்காமல் **மற்றவர் - அடுத்தவர்** என்று கொண்டு தவறான விளக்கம் தருகிறார். இது அவருடைய புலமைக் குறைபாடு மட்டுமல்ல. கற்றல் குறைபாடும் ஆகும். ஆனாலும், அவர்களின் பணி பாராட்டற்குரியது. எழுத்தை - படைப்பை இவ்வுலகில் விட்டு விட்டு, தன்னை மறைத்துக்கொண்ட இக்கதைப் பாடலாசிரியர்களின் பணி மகத்தானது.

சில ஆங்கிலச் சொற்கள் வசனப்பகுதியில் வருவதனால் மிகப் பிற்காலத்திற்கும் ஆசிரியர் வரலாற்றைக் கொண்டு வரலாம். ஆனால், அவை இடைச் செருகலாகவும் இருக்கலாம். நிகழ்கலை நிகழ்த்தும் இடம், காலம், சூழல், நிகழ்த்துநர் எனும் இவற்றை முன்னிட்டுப் பனுவலில் இடைச் செருகல் நிகழ வாய்ப்புண்டு.

# வல்லாள மகாராசன் கதை

## வில்லுப்பாட்டு

பாட்டு

*நாடான தொரு நாடதிலே*
*வளம் பொருந்தும் நகர் ஆனதிலே*
*தேசமான தொரு தேசத்திலே*
*சிறந்த அருணையம்பதி தனிலே'*
*மாதம் மூன்று மழை பொழியும்*
*வருடம் மூன்று பூவிளையும்*
*அப்பழுக் கற்ற நகர்தனிலே*
*ஆண்டு வருகிறார் வல்லாளன்*
*மல்லம்மா சல்லம்மா தேவி என்று*
*மாதர் இருபேரை மணம் முடித்தார்*
*மாலை மணமது தான் முடித்து*
*வாழ்ந்து வருகிற காலமதில்* (1)

(வசனம்)

*நீர்வளம் நிலவளம் போர்வளம் சொர்ணவளம் இன்னும் அநேக வளங்கள் பொருந்தியது அருணையம்பதி. இந்த அருணையம்பதியில் அரசு பரிபாலனம் செய்து வருகிறார் வல்லாள மகாராஜன். அவர் அரசு செய்து வருகிறபோது, அந்நாட்டில் மாதம் மூன்று மழை பொழியும்; வருடம் மூன்று பூ விரியும். அப்பேர்ப்பட்ட நகரில் வாழ்ந்து வருகிறபோது, மல்லம்மா தேவி, சல்லம்மா தேவி என்று இரண்டு பெண்களைக் கல்யாணம் செய்து இருந்தார். அப்படி கல்யாணம் செய்து வாழ்ந்து வருகிறபோது, அவர் நீதி எப்படி இருக்கிறது என்றால்...*

*(அ-கு) 1.* திருவண்ணாமலை

(செய்யுள்)

நீதியாய் புலியும் பசுவும் நெருங்கிய
ஓர்துறையில் புனலுண்டு வசிக்கும்
போதனை அருளும் வேதியர் மறையை
புகன்றிட யாபரும் கேள்ப்பார்
ஆதியாம் கடவுள் அருட்பெரும் நகரை
அலங்கரித்தற்புதம் செய்வார்
வீதியில் புனலைத் தெளித்து மின்னார்கள்
மேம்படு கோலமும் இடுவார் (2)

(வசனம்)

நீதியாய் புலியும் பசுவும் நெருங்கியே ஓர் துறையில் புனலுண்டு வசிக்கும் - புலியும் பசுவும் ரொம்ப விரோதிகள். அப்படி விரோதிகளான புலியும் பசுவும் ஒரு சுனையில் ஒன்றுபோல் தண்ணீர் குடிக்கும். அப்படித் தண்ணீர் குடிக்கிறபோது புலி பசுவை முறைத்துப் பார்த்தால் அரசன் ஆக்ஞர் சக்கரம் புலியின் சிரசை அறுத்து விடும். மேலும் போதனை அருளும் வேதியர் மறையைப் புகன்றிட யாவரும் கேள்ப்பார். அந்நாட்டில் வசிக்கக்கூடிய பிராமணர்கள் ரிக்கு, யசூர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களைப் பாராயணம் செய்வார்கள். அதை அந்த நகரத்தார் கேட்டு மகிழ்வார்கள். அப்பேர்ப்பட்ட நகரில் ஆதியாம் கடவுள் அருட்பெரும் நகரை அலங்கரித்தற்புதம் செய்வார் - ஆதியாம் என் பெருமான் எழுந்தருளக் கூடிய அந்நகரை எப்பொழுது பார்த்தாலும் அலங்காரம் செய்து மகிழ்வார்கள்.

வீதியில் புனலைத் தெளித்து, மின்னார்கள் மேம்படு கோலமும் இடுவார் - அந்த நகரத்துப் பெண்கள் காலையில் துயின்று எழுந்தவுடன் வீதியாகிய தெருக்களைப் பெருக்கிச் சுத்தம் செய்து அதில் நன்றாகக் கோலம் போட்டு அலங்காரம் செய்வார்கள். அப்பேர்ப்பட்ட நகரை அரசாட்சி செய்து வருகிறார் வல்லாள மகாராசன்.

(பாட்டு)

ஆண்டு வரும் நாளையிலே
அரசன் வல்லாள மகாராஜன்

நீதிநெறி பிசகாமல்
நேர்மையுடன் அரசாண்டார்
ஆண்டு வரும் நாளையிலே
அரசன் வல்லாள மகாராஜன் (3)

(வசனம்)

இப்படியே வல்லாள மகாராஜன் நீதி தவறாதபடிக்கு உலகத்தை அரசாட்சி செய்து வருகிறபோது, ஒரு நாள் தருணத்தில் அரச சபையை விட்டு எழுந்து தன் அரண்மனையில் சென்று அமர்ந்தார். எப்படி...

(பாட்டு)

தாம்பூலம் தானருந்தி
தானிருந்தார் அரண்மனையில்
மன்னவரும் தானிருக்க
மங்கையர்கள் இருபேரும்
அரசருட முன்னே வந்து
அடிபணிந்து தெண்டனிட்டார். (4)

(வசனம்)

இப்படியே வல்லாள மகாராஜன் கொலுக் கூட்டம் கலைந்து தன் அரண்மனையில் வந்து தாகசாந்தி அருந்தி தன் ஏதர்ஸ்த்தானத்தில் வந்து அமர்ந்தார். அப்படி அமர்ந்து இருக்கிறபோது மல்லம்மா தேவி, செல்லம்மா தேவி இரு பெண்களும் தன் நாதன் பக்கத்தில் வந்து அமர்ந்தார்கள். அமர்ந்து தன் நாதனுக்கு செய்ய வேண்டிய கிரிகைகளை செய்து முடித்து, தன் நாதனைப் பார்த்து கேள்க்கிறார் எப்படி என்றால், "நாதா! எங்களைப் பாருங்க நாங்கள் எப்படி இருக்கிறோம் என்று...

(பாட்டு)

உலகத்திலே உள்ள முறை
ஒரு(த்)தி அல்லோ மலடிருப்பாள்
இருபேரும் மலடியிருக்க
ஈசனுடை சோதனையோ
முன்னால் செய்த பழவினையோ
மூவர்க்கள்' சோதனையோ

என்ன பாவம் செய்தோமையா
இருபேருக்கும் குழந்தை இல்(லை) (5)

(வசனம்)

இரண்டு பெண்மணிகளும் நாதன் அருகில் சென்று அமர்ந்தார்கள். அமர்ந்து தன் நாதனைப் பார்த்து கேள்கிறார். "நாதா! எங்களைப் பாருங்கள். எங்களைப் பற்றி உங்களுக்குக் கொஞ்சமேனும் கவலையே கிடையாது. உங்களுக்கு உங்கள் அரசு, மந்திரிமார்கள். குடிபடைகள் இதைத்தான் கவனிக்கிறீர்களே தவிர எங்களைப் பற்றி நினைக்கிறதே கிடையாது. ஏன் அப்படிச் சொல்லுகிறோம் என்றால் எங்களை நீங்கள்...

(அ-கு) 1 - முன்னோர்

(பாட்டு)

பதினாறு திருவயதில்
பாரி[1] என்று கைபிடித்தீர்
இருபத்திரண்டு திருவயதில்
இரா மலடாய் ஆகியிருந்தோம்
முப்பித்திரண்டு வயதளவும்
முழுமலடாய் ஆனோமே - ஒரு
மன்னனுக்கு கைகொடுத்து
மலடாக இருந்துவிட்டோம் (6)

(வசனம்)

வல்லாள மகாராஜன் பக்கத்தில் அமர்ந்து தன் நாதன் பாதத்தை வருடி இரண்டு பெண்களும் சொல்லுகிறார். "நாதா! உலகத்தில் ஒரு ஆடவன் ஒரு பெண்ணை கல்யாணம் செய்வான். நீங்கள், அக்கா தங்கை இரண்டு பேரைக் கல்யாணம் செய்தீர்கள். அதைப்பற்றி எங்கள் இருபேருக்கும் ரொம்ப சந்தோசம். ஆனால் ஒரே ஒரு கவலை. எங்களை நீங்கள் கல்யாணம் செய்கிறபோது ஒரு சுமார் பதினாறு பதினேழு வயது இருக்கும். இப்பொழுது முப்பத்திரண்டு வயது ஆகிறது. வயதைப்பற்றி நாங்கள் கவலைப்படவில்லை. எங்களைப் போன்ற பெண்கள் எங்களைப் பார்த்து என்ன சொல்லுகிறார் என்றால்..."

(அ-கு) 1. மனைவி (மலையாளச் சொல்)

(பாட்டு)

மலடி மலடி என்று
மானிலத்தோர் பேசுகிறார்
இருள்சி இருள்சி[1] என்று
என்தரத்தோர் பேசுகிறார்
மலடி என்று சொல்லும்போது
மாளுதையா என் உடம்பு
இருள்சி என்று சொல்லும்போது
ஏங்குதையா என் மனது (7)

(வசனம்)

இரண்டு பெண்களும் நாதனைப் பார்த்து கேள்கிறார். "நாதா நாங்கள் இரண்டு பேரும் தெருவில் செல்லுகிறபோது மற்ற பெண்கள் எங்களைப் பார்த்து மலடி என்றும் இருள்சி என்றும் பேசுகிறார்கள். நாதா! எங்களுக்கு ஒரு குழந்தை இருந்தால் அவனை எப்படி வளர்ப்போம் என்றால்...

(அ-கு) 1. இருளாயி, இருள்சி - பாண்டிய நாட்டிலுள்ள ஒரு சூத்திர தேவதை (அபிதான சிந்தாமணி)

(பாட்டு)

திண்ணையிலே மகனை வைத்து
சிலகலத்தில் சோறூட்டி
உண்ணு உண்ணு மகனே என்று
ஊட்டேனோ பாலகனுக்கு
வேறொருவர் பிள்ளையிடம்
மகன் விளையாட போனயிடத்தில்
உன் மகன் அடித்தான் என்று
ஒருத்தி வரக் காணேனே (8)

(வசனம்)

எங்களுக்கு ஒரு குழந்தை இருக்கிறதாய் இருந்தால் அந்த குழந்தையை எடுத்துத் திண்ணையில் அமர்த்தி, சிறுகலத்தில் சாதம் வைத்து, அவன் வாயில் சாதத்தை ஊட்ட, அவன் வேண்டாம் என்று மறுக்க, ஏண்டா, என் கண்ணு சாப்பிடடா

என்று நான் சொல்ல, நாதா குழந்தையும் நானும் இப்படி விளையாடினால் எப்படி இருக்கும். மேலும் என் குழந்தை தெருவில் விளையாடப் போன இடத்தில் என் மகன் வேறொரு பையனை அடிக்க, அவன் தாய் என்னிடம் வந்து, உன் மகன் என் மகனை அடித்தான் என்று சொல்ல, எனக்குக் கோபம் உண்டாகி, உன்னை மாற்றால்[1] அடிப்பேன் என்று சொல்லி இரண்டு பேரும் சண்டை போட, அதை மற்ற பேர்கள் பார்த்து, சிறு பிள்ளைகளுக்காக வேண்டி ஏன் சண்டை போடுகிறீர்கள் என்று கேள்க்க, என்ன ஆனந்தமாய் இருக்கும். மேலும் நமக்கு அந்திய காலம் ஆகிறபோது...

(அ-கு) 1. விளக்குமாறு

(பாட்டு)

நீர்க்குடமும் தலையில் வைத்து
நெட்டோலம் விட்டழுது
கோர்க்கு முன்னே அனல் மூட்டி
கொள்ளிவைக்க மகன் வேண்டாமோ
வேண்டாமோ என் கணவா
மேதினியோர் தங்கள் முன்னே (9)

(வசனம்)

நாதா! நாம் இந்த உலகத்தில் இருந்து வாழ்ந்து பின்னால் படுத்து அந்திய காலம் ஆகிறபோது ஒரு குழந்தை இருந்தால் நீர்க்குடத்தை தலையில் வைத்து, நமக்கு முன்னால் சென்று "அம்மா" அல்லது "அப்பா" என்று சத்தம் போட்டு, நம்மை வைக்கிற இடத்தில் அவன் தலையில் வைத்து இருக்கும் கொள்ளிக் குடத்தைப் போட்டு உடைப்பான். அப்படிக் கொள்ளிக்குடம் உடைக்கவில்லை என்றால் புத்தென்னும்[1] நரகத்தில் விழுவார்கள். அப்படி புத்தென்னும் நரகத்தில் விழாதபடி காத்தபடியால் பிள்ளைகளுக்கு புத்திரன் என்று பெயர். அப்படி இருந்தும்...

(அ-கு) 1. புத் - பூமியில் புத்திரப் பேறு இல்லாதவர் அடையும் நரகம்.

(பாட்டு)

*பிள்ளை இல்லா பாவி என்று*
*பெருமான் நம்மை வகுத்தானோ*
*மதலை இல்லா பாவி என்று*
*மகாதேவன் வகுத்தானோ*
*பிள்ளை இல்லா வாழ்வதுதான்*
*பெருவாழ்வு வாழுவாமோ*
*மதலை இல்லாவாழ்வதுதான்*
*வாழ்ந்தாலும் வாழ்வல்லவே* (10)

(வசனம்)

"நாதா! எங்களைப் படைக்கிறபோதே ஈசன் குழந்தை இல்லை என்று படைத்து விட்டாரா? **குழல் இனிது யாழ் இனிது என்ப தம் மக்கள் மழலைச் சொல் கேளாதவர்**[1]. சில பேர்கள் புல்லாங்குழல் இசை பெரிதென்றும் யாழாகிய வீணையின் இசை பெரிதென்றும் சொல்லுவார்கள். அவர்கள் எப்படிப்பட்டவர் என்றால் தன் மக்கள் மழலை சொல் கேளாதவர். தான் பெற்று வளர்த்த குழந்தைகள் இல்லாதவர்கள்தான் அப்படிப் பேசுவார்கள். **மக்கள் மெய்தீண்டல் உடலுக்கின்பம் மற்றவர் சொல் செவிக்கின்பம்.**[2] தான் பெற்றெடுத்த குழந்தைகள் அப்பா அம்மா என்று நம் திரேகத்தில் கை வைத்தால் நம் உடலுக்கு இன்பம் உண்டாகிறது. **மற்றவர்கள்** சொல்லும் வார்த்தை செவிக்கு இன்பம் உண்டாக்கும். ஆகையால் நமக்கு எப்படியும் ஒரு குழந்தை வேண்டும் என்றார்கள் மனைவிமார் இரண்டு பேர்களும். பார்த்தார் வல்லாளன்...

*(அ-கு) 1. திருக்குறள் - 66. 2. திருக்குறள் - 65*

(பாட்டு)

*மங்கையர்கள் முகம் பார்த்து*
*மன்னவனும் ஏது சொல்வார்*
*வாருமம்மா பெண்கொடியே*
*வார்த்தை சொல்லக் கேளுமம்மா*
*ஈஸ்பரனை அல்லாது*
*எள்ளளவும் முடியாது*

*மகாதேவன் அருளிருந்தால்*
*மதலையது தான் கிடைக்கும்.* (11)

(வசனம்)

பெண்கள் இரண்டு பேரும் நாதனைப் பார்த்துக் குழந்தை இல்லை என்று அழுது புலம்புகிறபோது, வல்லாள மகாராஜன் பெண்களைப் பார்த்துச் சொல்லுகிறார். "அம்மா நீங்கள் நினைக்கிற மாதிரி உடனே குழந்தை கிடைத்து விடாது. என் பெருமான் **அனுக்கிரகம்**[1] இருந்தால் நமக்கு குழந்தை கிடைக்கும் வாருங்கள்" என்று அரண்மனையில் சென்று கால், கை சுத்தம் செய்து **தாகசாந்தி**[2] முடித்து பெண்கள் இரண்டு பேர்களையும் அமர்த்தி...

**(அ-கு) 1. அருள், 2. தாகம் தீர்த்தல்**

(பாட்டு)

*மன்னருட சபைதனிலே*
*மன்னன் வல்லாளன் போயமர்ந்தார்*
*மந்திரிமார் புடைசூழ*
*மன்னவனும் அரசிருந்தார்*
*தேசராஜர் புடை சூழ*
*தேசவிசாரணை செய்யுகிறார்.* (12)

(வசனம்)

அரசன் தன் இரண்டு மனைவிமார்களையும் அரண்மனையில் அமர்த்தி வைத்துவிட்டு, வல்லாள மகாராஜன் அரச சிம்மாதனத்தில் வந்து அமர்ந்தார். மந்திரிமார்கள், குடிபடைகள் மற்றும் சேனை வீரர்கள் எல்லோரும் புடைசூழ, தக்கதாக மன்னன் தேச விசாரணை செய்தார். அப்பொழுதும் வல்லாள மகாராஜனுக்கு முகத்தில் சந்தோஷம் என்கிறதே கிடையாது. அதைப் பார்த்த மந்திரிமார்கள் அரசனைப் பார்த்துக் கேள்க்கிறார்கள் - எப்படி என்றால், "அரசே இன்றைக்கு உங்களை பார்க்கும்போது...

(பாட்டு)

*வாடாத திருமுகந்தான்*
*வாடி முகம் இருப்பதென்ன*

*கோடாத மதிமுகந்தான்*
*கோடி[1] முகம் இருப்பதென்ன*
*மனக்கவலை வருவதென்ன*
*மன்னவரே சொல்லவேணும்*
*என்ன என்ன விபரம் என்று*
*எங்களிடம் சொல்லவேணும்* (13)

(வசனம்)

*அரசன் முகம் வாட்டமாக இருப்பதைப் பார்த்தார் மந்திரிமார்கள். உடனே எழுந்து அரசன் **பாதாரவிந்தத்தில்**[2] வீழ்ந்து அடிபணிந்து கேள்க்கிறார். "அரசே எப்பொழுது பார்த்தாலும் சிரித்த முகத்தோடு இருக்கக்கூடிய நீங்கள் இன்றைக்கு முகத்தில் சந்தோசம் இல்லாதபடி, ரொம்ப கவலையோடு அமர்ந்திருக்கிறீர்கள். அது என்ன கவலை. அதை எங்களுக்கும் சொல்ல வேண்டும் அரசே" என்று வணங்கினார். உடனே அரசன் சொல்லுகிறார்...*

*(அ-கு) 1. கோணுதல், "உள்ளமும் கோடிய கொடியாள்" (கம்ப); 2. பாதங்களில்.*

(பாட்டு)

*மந்திரிமார் முகம் பார்த்து*
*மன்னவரும் ஏது சொல்வார்*
*வாருமையா மந்திரிகளே*
*வார்த்தை சொல்லக் கேளுமையா*
*இரண்டு பெண்ணை மணமுடித்தும்*
*எடுத்தணைக்கப் பாலன் இல்லை*
*பிள்ளை இல்லாக் கவலையது*
*பெருங்கவலை உண்டாச்சி* (14)

(வசனம்)

*"ஐயா! மந்திரிமார்கள், உங்களுக்கு என்ன கவலை, என்று கேள்க்கின்றீர்கள். உண்மைதான் எனக்குப் பொன், பொருள் **ஆஸ்த்தி**, மந்திரி, பிரதானிகள், குடிபடைகள் யாபேரும் இருக்கிறார்கள். ஆகையால் எனக்கு ஒரு குறைவும் கிடையாது. மந்திரிகள்! எனக்கு ஒரே ஒரு குறை மட்டும் இருக்கிறது. அதை யாரிடத்தில் சொன்னாலும் அந்தக் குறை*

நீங்கவே நீங்காது. அந்தக் குறையைப் பற்றி நீங்கள் கேட்டால் மனவேதனை அதிகம் உண்டாகுமே தவிர ஒரு நாளும் குறையாது" என்றார் அரசன்.

உடனே மந்திரிமார்கள் சொல்லுகிறார்கள். "அரசே! உலகத்தில் மானிடர்களாகப் பிறந்தால் கவலை இல்லாமல் எவரும் இருக்க முடியாது. தேவர்களாகப் பிறந்த பேர்களும் கவலை இல்லாமல் இருந்தது இல்லை. எப்படி என்றால்...

(செய்யுள்)

*சந்திரனுக்குடல் உருக்கம் தன*
*தனுக்கோர் கண் ஊனம் தருவி நிழல்*
*இந்திரனுக்கோர் அவக்குறியாம் டிய*
*மனுக்கோர் புழுக்காலாம் இரவிஈன்ற*
*மைந்தனுக்கோர் கால்முடமாம்*
*வனதனுக்கோர் தலைகுறைய வாழ்வாராகில்*
*பந்தமுள்ள மானிடரை விதிவிடுமோ*
*ஆலவாய் பதியுள்ளானேன்* (15)

(பொருள்)

சந்திரனுக்குடல் உருக்கம் - இரவில் இருளை விலக்கி ஒளிவீசக்கூடிய சந்திரனுக்கு உடல் உருக்கம். சந்திரனுடைய உடல் பதினைந்து நாள் வளர்ந்தும் பதினைந்து நாள் தேய்ந்தும் வருகிறான். ஏன் என்றால் அது **தர்க்கனுடைய சாபம்!**

தர்க்கன் ஏன் சாபம் விட்டான் என்றால், இந்தத் தர்க்கனுக்கு தொண்ணூறு பெண் குழந்தைகள். இதில் இருபத்தேழு பெண் குழந்தைகளை சந்திரனுக்குக் கல்யாணம் செய்து கொடுத்தான்., அவன் கல்யாணம் செய்து கொடுக்கிற போது என் பெண்கள் இருபத்தேழு பேர் இடத்திலும் ஒன்று போல் நடக்க வேண்டும் என்று சொல்லி இருந்தான்.

இந்தச் சந்திரன் இந்த இருபத்தேழு பெண்களிலும் எல்லோருக்கும் இளையவள் இடத்தில் ரொம்ப அன்பாக இருந்தான். இதை மற்ற பெண்கள் தகப்பன் தர்க்கராஜன் இடத்தில் சென்று முறையிட்டார். உடனே தர்க்கனுக்குக் கோபம் உண்டாகி, உன் உடல் குறைந்து போகக் கடவது

என்று சபித்தான். இதை அறிந்த சந்திரன் ஓடோடியும் சென்று பரமனுடை பாதத்தில் வீழ்ந்து வணங்கினான். பார்த்தார் பரமன். சந்திரனை எடுத்து அவர் **அளகாபாரத்தில்**[1] அணிந்து கொண்டார். "அப்பா! சந்திரா! தர்க்கன் கொடுத்த சாபம் சாபம்தான். என்னிடம் அடைக்கலமாய் வந்தபடியால் உன் உடல் பதினைந்து நாள் வளர்ந்தும் பதினைந்து நாள் தேய்ந்தும் வருவாய்" என்று மறுசாபம் கொடுத்து, பரமன் அடைக்கலமாய் வைத்துக் கொண்டார். அதுதான் சந்திரனுக்குடல் உருக்கம்.

தனதனுக்கோர் கண் ஊனம்[2] - தனம் என்றால் பொருள். இந்தப் பொருளுக்கு அதிபதியாய் இருக்கிறான் குபேரன். அந்தக் குபேரனுக்கு ஒரு கண்ணில் இருந்து சீழ் வடிந்து கொண்டு இருக்கிறது. அது அவன் ஊழ்வினை.

தருவி நிழல் **இந்திரனுக்கோர் அவக்குறியாம்**[3] - கர்ப்பகத் தரு நிழலில் அமர்ந்திருக்கக் கூடிய இந்திரனுக்கு திரேகமெல்லாம் ஆயிரம் கண்கள். அது கௌதமருடைய சாபம். கௌதமருடைய மனைவி அகலியைக் கண்டு ஆசைபட்ட தினால், அந்த சாபம் கிடைத்தது. இது அவன் ஊள்வினை. யெமனுக்கோர் புழுக்காலாம் - எல்லா உயிர்களையும் பிடிக்க கூடிய எமனுக்கு, ஒரு காலில் இருந்து எப்பொழுதும் புழு சொரிந்து கொண்டே இருக்கிறது இது அவன் கிரகம்.

**இரவி ஈன்ற மைந்தனுக்கோர் கால் முடமாம்**[4] - இரவி என்றால் சூரியன். சூரியன் மகன் சனி ஈஸ்பரன். இந்த சனி ஈஸ்பரனுக்கு ஒரு கால் நொண்டி. அது அவன் **பராரதத்துவம்.** **வனதனுக்கோர் தலை குறைய வாழ்வாராகில்**[5] - வனதன் என்றால் பிரமதேவன்.

இந்த பிரம்ம தேவனுக்கு முன்னால் சிரம் ஐந்து. இப்பொழுது நான்கு சிரம். பரமன் ஒரு சிரசைக் கிள்ளி எடுத்துவிட்டார். அது அவர் ஊள்வினை.

இவர்கள் எல்லாம் இப்படி இருக்க, பந்தமுள்ள மானிடரை விதி விடுமோ. ஆலவாய்பதி உள்ளானோன். இப்பேர்ப்பட்ட தேவாள்களை விதிவிடவில்லை என்றால், நம்

போன்ற பந்த பாச அழலிலே அகப்பட்டுத் தத்தளிக்கக்கூடிய நம்மை ஒருபோதும் விதி விடாது ஆகையால் அரசே...

(அ-கு) 1. சடாமுடி, 2. காசிக் காண்டம், 3. கம்ப ராமாயணம். 4. அபி. சிந்தாமணி 578, 5. பிரம புராணம்.

(பாட்டு)

என்ன என்ன கவலை என்று
எங்களிடம் சொல்ல வேணும்
மனக்கவலை வருவதென்ன
மன்னவரே சொல்ல வேணும்
மந்திரிமார் கேள்க்கும் போது
மன்னவரும் ஏது சொல்வார் (16)

(வசனம்)

"அரசே! உங்களுக்கு எந்த விதமான கவலை இருந்த போதிலும் எங்கள் இடத்தில் சொல்லுங்கள். நாங்களும் எங்களால் ஏன்ற முயற்சி செய்து பார்க்கிறோம்" என்றார் மந்திரிகள்; அரசனும் ஒருவாறு மனம் தேறி, மந்திரிகளை பார்த்துச் சொல்லுகிறார். "ஐயா! மந்திரிகள்! எனக்கு வந்த கவலை என்ன தெரியுமா?...

(பாட்டு)

பிள்ளையில்லா கவலையது
பெருங்கவலை உண்டாச்சி
மதலை இல்லா குறைவதுதான்
மன்னனுக்கு உண்டாச்சி
நாட்டை அரசாள்வதற்கு
நல்மகன்தான் வேண்டாமோ
குழந்தையது இல்லாமல்
கொற்றவனும் வாழலாமோ. (17)

(வசனம்)

"அப்பா மந்திரிகள்! ஒரு மன்னன் ஒரு நாட்டை ஆண்டால் அவனுக்குப் பின்னால் அந்த நாட்டை அரசாட்சி செய்ய ஒரு பிள்ளை இருக்க வேண்டாமா? அந்தக் குழந்தை கிடையாது. இரண்டு பெண்களைக் கல்யாணம் செய்தும்

எனக்கு இன்னும் குழந்தைப் பேர் கிடையாது. மந்திரிகள்! நான் ஏதாவது குற்றம் செய்திருப்பேனா அல்லது என் செங்கோல் ஆட்சி பிசகிவிட்டதா அல்லது ஏழைகட்குதான் தர்மம் செய்யவில்லையா, எனக்கு ஒன்றுமே தெரியவில்லை.

என் அரண்மனைக்குச் சென்றால், என் இரண்டு மனைவிகளும் என் பக்கத்தில் அமர்ந்து, நாதா! குழந்தை இல்லை! குழந்தை இல்லை! என்று ஒரே புலம்பல். எனக்கு மன நிம்மதியே இல்லை" என்றார் அரசர். பார்த்தார்கள் மந்திரிமார்கள். "அரசே! இதற்குத் தானா இவ்வளவு கவலை. நாங்கள் சொல்லுவதைக் கேளுங்கள். இன்றையில் இருந்து கவலையை விடுங்கள். நாங்கள் சொல்வதைக் கேளுங்கள். எப்படி என்றால்...

(பாட்டு)

தான தர்மம் செய்து வந்தால்
சந்ததிதான் கிடைக்குமையா
அறமது தான் செய்து வந்தால்
ஆண் குழந்தைக் கிடைக்குமையா
முப்பத்திரண்டு தானதர்மம்
முறைப்படியே செய்து வந்தால்
ஈசனுடை அருளாலே
இளமதலை கிடைக்குமையா (18)

(வசனம்)

"அரசே! உலகத்தில் எவர்களாவது தானதர்மம் செய்தால் எந்தப் பொருளும் கைகூடும் என்பார்கள். அதே மாதிரி நீங்களும் முப்பத்திரண்டு தான தர்மம் இடைவிடாது செய்து வந்தால் பரம என்பெருமான் அனுக்கிரகத்தால் உங்களுக்கு கட்டாயம் ஒரு ஆண் குழந்தை கிடைக்கும். எப்படி என்றால் உலகத்தில் **சாதி இரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால் மேதினியில் இட்டார் பெரியோர். இடாதார் இழிகுலத்தார் பட்டாங்கில் உள்ளபடி.**[1]

சாதி இரண்டொழிய வேறில்லை - உலகத்தில் சாதியை பார்த்தால் இரண்டு சாதி. ஆண் பெண் இரண்டே சாதி. குலத்தைப் பார்த்தால் இரண்டே குலம். எப்படி என்றால்

இம்மேதினியில் இட்டார் பெரியோர் (தர்மம் செய்கிறவர்கள் பெரிய குலத்தவர்கள்). இடாதார் இழிகுலத்தார் பட்டாங்கில் உள்ளபடி. (தர்மம் செய்யாதவர்கள் குறைந்த குலத்தவர்கள்) என்று ஆன்றோர்கள் சொல்லி இருக்கிறார்கள். அதேமாதிரி நீங்களும் முப்பத்திரண்டு தானதர்மம் செய்து வந்தால் ஈஸ்பரன் அனுக்கிரகத்தால் எப்படியும் குழந்தை கிடைக்கும் என்றார்கள். உடனே அரசன் சொல்லுகிறார்...

(அ-கு) 1. ஔவையார், நல்வழி.

(பாட்டு)

*மந்திரிமார்முகம் பார்த்து*
*மன்னவனும் ஏது சொல்வார்*
*வாருமையா மந்திரியே*
*சந்ததிதான் கிடைக்குமென்றால்*
*தான தர்மம் செய்திடுவோம்*
*என்ன என்ன தான தர்மம்*
*எந்தனிடம் சொல்ல வேணும்* (19)

(வசனம்)

"ஐயா! மந்திரிமார்கள், எனக்கு ஒரு குழந்தை மட்டும் கிடைக்கிறதாய் இருந்தால், முப்பத்திரண்டு தான தர்மம்[1] என்ன அறுபத்து நான்கு தானதர்மமும் செய்வேன். அதிருக்கட்டும் மந்திரிகள், முப்பத்திரண்டு தான தர்மம் என்றால், என்ன தர்மம் எல்லாம் செய்ய வேண்டும்" என்று அரசன் கேள்க்கிறபோது, மந்திரிமார்கள் சொல்லுகிறார். "அரசே. .

(அ-கு) 1. அபிதான சிந்தாமணியில் 42 தானதர்மங்கள் கூறப்பட்டுள்ளன.

(பாட்டு)

*மாதானம் கோதானம்*
*மன்னவரே செய்ய வேண்டும்*
*அன்னதானம் சொர்ணதானம்*
*அரசே நாம் செய்ய வேணும்*
*எந்த பொருள் கேட்டாலும்*
*இல்லை என்காமல் கொடுக்க வேணும்* (20)

(வசனம்)

அரசே! முப்பத்திரண்டு தர்மம் என்றால் மாதானம் கோதானம் வஸ்த்திரதானம் சொர்ணதானம் இன்னும் அனேக தான தர்மங்கள்; பொதுவாக எவர் எவர் வந்து எந்தப் பொருள் கேட்டாலும் இல்லை என்று சொல்லாமல் கொடுக்க வேண்டும். அப்படிச் செய்து வந்தால், கைலையங்கிரி வாசனாகிய சிவ என்பெருமான் அனுக்கிரகத்தால் கட்டாயம் உங்களுக்கு ஆண் குழந்தை நிச்சயமாக கிடைக்கும்" என்றார்கள் மந்திரிகள். குழந்தை கிடைக்கும் என்றதுதான் அரசன் எப்படி இருக்கிறான் என்றால்,

(பாட்டு)

ஆனந்தம் பெரிதாகி
அமர்ந்திருந்தார் வல்லாளன்
சந்தோசம் பெரிதாகி
தானிருந்தார் சிம்மாதனம்
மந்திரியை அருகழைத்து
மன்னவனும் ஏது சொல்வார்
எனதருமை மந்திரியே
என் வார்த்தை கேளுமையா. (21)

(வசனம்)

தர்மம் செய்தால் குழந்தை கிடைக்கும் என்றதுதான் அரசனுக்கு வந்த சந்தோசத்திற்கு ஒரு அளவே கிடையாது. கலகல என்று சிரித்து மந்திரிகளைப் பார்த்துச் சொல்லுகிறார். "ஐயா! மந்திரிகள்! தர்மம் செய்து எனக்கு ஒரு குழந்தை கிடைக்கிறதாய் இருந்தால் நீங்கள் இன்றைக்கே இப்பொழுதே தர்மத்தை செய்யுங்கள். தர்மம் எப்படிச் செய்ய வேண்டும் தெரியுமா...

(செய்யுள்)

சுந்தர அருணைநாதர் துலங்கும் இந் நகரினுள்ளே
வந்தவர் எது கேட்டாலும் வழங்குவோம் என்பதாக
அந்தரமளாவ நீங்கள் அழகிய துவசம் நாட்டி
எந்தனர் பெயர் விளங்க எழில் முரசறையும் என்றார் (22)

(பொருள்)

சுந்தர அருணைநாதர் துலங்கும் இந் நகரினுள்ளே - அருணாசல ஈஸ்பரர் எழுந்தருளி இருக்கப்பட்ட இந்த அருணயம்பதியில் வந்தவர் எது கேட்டாலும் வழங்குவோம் என்பதாக - வந்தவர் எவர் எவர் வந்து எந்தப் பொருளைக் கேட்டாலும் இல்லை என்று சொல்லாமல் கொடுப்போம் என்பதாக. அந்தரமளாவ நீங்கள் அழகிய துவம்சம் நாட்டி - ஆகாயம் பரியந்தமும் ஒரு அழகிய ஸ்தம்பம் ஒன்று நாட்டி அதில் ஒரு கொடியும் கட்டி, எந்தனர் பெயர் விளங்க எழில் முரசறையும் என்றார்.

அருணயம்பதிக்கு அரசனான வல்லாள மகாராஜன், "எவர் வந்து வந்து என்ன பொருள் கேட்டாலும் இல்லை என்று சொல்லாமல் கொடுக்கிறார் என்று என் பெயர் விளங்க எழில் முரசறையும் என்றார். ஒரு பேரிகையும் அடியுங்கள்" என்றார் அரசன் வல்லாளன்.

(பாட்டு)

*அரசருட சொல் கேட்டு*
*அமைச்சர்களும் ஏது செய்தார்*
*தருமக்கொடி எடுத்து*
*தலைவாசலிலே கட்டுவாராம்*
*அன்னக்கொடி எடுத்து*
*அரண்மனையில் கட்டுவாராம்* (23)

(வசனம்)

அரசன் தர்மக் கொடியை கட்டுங்கள் என்று சொன்னவுடன் மந்திரிகள் அரசனுடைய **ஆசாரவாசலில்** தர்மக்கொடியை எடுத்துக் கட்டினார்கள். அன்றையில் இருந்து தருமம் நடந்து கொண்டு இருக்கிறது. ஒரு ஊரில் ஒருவர் தருமம் செய்கிறார் என்றால் கூட்டத்திற்குச் சொல்லவா வேண்டும். வருவாரும் போவாரும் தர்மம் வாங்கு வாராம். இப்படியே தர்மம் நடந்து கொண்டு இருக்கிறது.

ஒருநாள் தருணத்தில் அரசன் மந்திரிகளைப் பார்த்து, "நாம் நடத்தும் தர்மத்தில் ஏதாவது குற்றம் குறை இருந்தால்

பார்த்துச் சொல்லுங்கள்" என்றார் அரசன். மந்திரிகளும் ஆலோசனை செய்து நீண்ட நேரத்திற்கு பிறகு அரசனை பார்த்து சொல்கிறார்.

(பாட்டு)

*மன்னருடமுகம் பார்த்து*
*மந்திரிகள் ஏது சொல்வார்*
*அரசனுட முகம் பார்த்து*
*அமச்சர்களும் ஏது சொல்வார்*
*உலகமரசாளு மன்னா*
*ஒருகுறைதான் இருக்குதையா*
*என்ன என்ன குற்றமென்று*
*எடுத்துரைத்தார் மந்திரிமார்* (24)

(வசனம்)

அரசனை வணங்கிச் சொல்லுகிறார்கள். "அரசே நாம் செய்து வரும் தர்மத்தில் ஒரு குற்றம் ஒன்று இருக்கிறது. எப்படி என்றால், ஒருவர் வந்து பொன் கேட்டால் கொடுப்பீர்கள், ஆடுமாடு மனை வீடு ஏன் உங்கள் உயிரைக் கேட்டாலும் கொடுப்பீர்கள், ஒருவன் ஒரு காமுகன் வந்து அரசே ஒரு பெண் கொடும் என்றால் எந்தப் பெண்ணை கொடுப்பீர்கள்? பெண் இல்லை என்று சொல்வோம். இல்லை என்று சொன்னால் இதற்கு முன்னால் நாம் செய்த தர்மம் அழிந்துவிடும். அதற்காக வேண்டி நாம் என்ன செய்ய வேண்டும் என்றால், பதினாயிரம் கணிகை பெண்களை கொண்டு வந்து பதினாயிரம் வீடு ஒரே வருசையில் கட்டிக் கொடுத்து பதினாயிரம் விலைமாதரை பதினாயிரம் வீடுகளிலும் அமர்த்தி, விலைமாதரிடம் சொல்லுகிறார்.

எப்படி என்றால் "விலைமாதர்கள்! உங்களுக்கு ஒரு கட்டளை. எப்படி என்றால் உங்களிடம் ஒரு ஆடவன் வருகிறதாய் இருந்தால், நீங்கள் அவரிடம் ஆயிரம் பொன் வாங்க வேண்டும். ஒருவரிடம் ஆயிரம் பொன் வாங்கின பிறகு இன்னும் ஒருவன் வந்து ஆயிரத்து ஐந்து பொன் தருகிறேன் என்றால் நீங்கள் கை நீட்டி வாங்கக் கூடாது. அரசே! ஒருவனுக்கு ஆயிரம் பொன் கொடுக்க முடியாவிட்டால் நம்

இடத்தில் வந்து ஆயிரம் பொன் வாங்கி அந்த விலைமாதரிடம் கொடுக்கட்டுமே. அதும் தர்ம வழிக்கே செல்லும். மேலும் ஒருவன் வந்து ஒரு பெண்ணை கல்யாணம் செய்து வையுங்கள் என்றால் அதில் ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்து வைத்துவிடலாம்" என்று யோசனை செய்து, அப்படியே விலைமாதரையும் அமர்த்தி, தர்மம் நடந்து கொண்டு வருகிறது.

(பாட்டு)

தானதர்மம் செய்து வாறார்
தார் வேந்தன் வல்லாளன்
எந்த பொருள் கேட்டாலும்
இல்லை என்று சொல்லாமல்
வந்து கேட்ட பேருக்கெல்லாம்
வழங்குகிறார் தான தர்மம்
ஆண்டி பரதேசிகட்கு
அன்னதானம் செய்யுகிறார். (25)

(வசனம்)

இப்படியே ஏற்படுத்தி வல்லாள மகாராஜன் தர்மம் நடத்தி வருகிறார். இதைக் கேள்வியுற்று மற்ற தேசத்திலும் இருந்து ஏழைகள் வந்து குவிந்து கொண்டிருக்கிறார்கள். வல்லாள மகாராஜன் காலையில் கண்விழித்து எழுந்தவுடன், கால் கை சுத்தம் செய்து, தாக சாந்தி முடித்து, தனது சிம்மாதனத்தில் வந்து அமர்ந்து கொள்வார். மந்திரி பிரதானிகளும் அவரைச் சுற்றிலும் அமர்ந்திருப்பார்கள். அங்கே ஆராச்சி மணி அடிபடும். அந்த நேரத்தில் இருந்து தர்மம் செய்ய ஆரம்பித்து விடுவார்கள்.

முதலாவது ஒருவர் வந்து அரசனை வணங்கிச் சொல்லுகிறான். எப்படி என்றால்...

(பாட்டு)

அருணையம் பதிவாழும்
அரசே நீர் கேளுமையா
தர்மமது வாங்க வென்று
தார் வேந்தா இங்கு வந்தேன்

*கேட்ட பொருள் தரவேண்டும்*
*கிருபையுள்ள மன்னவரே.* (26)

(வசனம்)

ஆராச்சி மணி அடிபடவும் ஒருவர் வந்து அரசனை வணங்கினார். உடனே அரசர் கேள்க்கிறார். "ஐயா! வாருங்கள். உங்களுக்கு என்ன பொருள் தேவை சொல்லுங்கள்" என்றார் அரசர். உடனே சொல்லுகிறார். "ஐயா! எனக்கு பூணூல் சடங்கு செய்ய வேண்டியது இருக்கிறது. அதற்காகக் கொஞ்சம் பொன் வேண்டும்" என்றார். உடனே அரசன் மந்திரிகளைப் பார்த்து "ஐயா! மந்திரிகள், இந்த வேதியருக்கு நன்றாகச் சாப்பாடு கொடுத்து முன்னூறு பொன்னும் கொடுத்து அனுப்புங்கள்" என்றார். உடனே மந்திரிகளும் அவ்வாறே செய்தார். இன்னும் ஒருவர் வந்து, "அரசே எனக்கு இரண்டு **வஸ்த்திரம்** வேண்டும்" என்றார். அதும் கொடுத்து அனுப்பினார். மீண்டும் என்ன செய்கிறார் என்றால்...

(பாட்டு)

*வாரி வாரி வழங்குகிறார்*
*வல்லாள மகாராஜன்*
*வாறபேர்க்கும் போறபேர்க்கும்*
*வழங்குகிறார் தானதர்மம்*
*இல்லை என்று சொல்லாமல்*
*இயங்குகிறார் தானதர்மம்* (27)

(வசனம்)

இப்படியே அரசன் தானதர்மம் செய்கிறார். அப்படி தர்மம் நடக்கிறபோது சிலர் வந்து பொன் கேள்ப்பார்கள், சிலர் வஸ்திரம், சிலர் ஆடு, மாடு, பூமி, வீடு எதைக் கேட்டாலும் இல்லை என்று சொல்லாமல் அரசன் தர்மம் கொடுத்துக் கொண்டே இருக்கிறார். இப்படி, தர்மம் நடக்கிறபோது தர்மம் வாங்க வருகிறதும் போகிறதும் இப்படியே நடந்து கொண்டு இருக்கிறது.

இப்படி தர்மம் வாங்க வருகிறவர்களும் போகிறவர்களும் எப்படி பேசுகிறார்கள் என்றால், அரசன்

வல்லாள மகாராஜன் முப்பத்திரண்டு தர்மம் முறைப்படியே செய்கிறபடியால் "இவர்களுக்கு தேவலோகப் பட்டம் கூடிய சீக்கிரம் கிடைக்கும்" என்று பேசிக்கொண்டே செல்வார்கள்.

அதைத் தேவர்கள் அறிந்து ஓடோடியும் வந்து இந்திரனை வணங்கி சொல்கிறார், எப்படி என்றால்...

(பாட்டு)

அமரேசன் பாத மதில்
அடிபணிந்துத் தெண்டனிட்டு
தேவலோகம் அரசாளும்
தேவர்கோனே கேளுமையா
அருணையம்பதி ஆளும்
அரசன் வல்லாள மகாராஜன்
முப்பத்திரண்டுத் தருமமது
முறைப்படியே செய்து வாறான் (28)

(வசனம்)

இப்படியே இவர்கள் பேசுகிற வார்த்தையைக் கேட்ட தேவர்கள் மதிமயங்கி இந்திரன் இடத்தில் வந்து அவர் பாதத்தில் வணங்கிச் சொல்லுகிறார்கள். "அமரேசராகிய இந்திரப் பிரபுவே! நாங்கள் சொல்லுவதைக் கேளுங்கள். எப்படி என்றால்...

(பாட்டு)

அருணையம் பதிதனிலே
அரசன் வல்லாள மகாராஜன்
ஆண்டு குழந்தை இல்லை என்று
அறமதுதான் செய்யுகிறார்
முப்பத்திரண்டு தானதர்மம்
முறைப்படியே செய்துவாறார்
சந்ததிதான் வேண்டுமென்று
தானதர்மம் செய்து வாறார் (29)

(வசனம்)

உடனே தேவர்கள் பயந்து ஓடோடியும் சென்று இந்திரன் பாதத்தில் வணங்கிச் சொல்லுகிறார்கள். "அரசே! வல்லாள

மகாராஜன் அருணையம்பதியில் அரசு பரிபாலனம் செய்து வருகிறார். அவர் இரண்டு பெண்களைக் கல்யாணம் செய்தும் புத்திரன் கிடையாது. ஆகையால் முப்பத்திரண்டு விதமான தான தர்மம் செய்கிறார். அவர் தர்மம் செய்கிறதை வாங்கிப் போகிற பேரும், தர்மம் வாங்க வருகிற பேரும், எப்படிப் பேசுகிறார் என்றால், "இப்படித் தர்மம் செய்கிற வல்லாள மகாராஜனுக்குக் கூடிய சீக்கிரம் இந்திரலோகமும் இந்திர பதவியும் கிடைக்கும் என்று சொல்லுகிறார்கள். அதைக் கேள்விப்பட்டு உங்களிடம் சொல்ல வந்தோம்" என்றார்கள் தேவர்கள். அதைப் பார்த்த இந்திரன் எப்படி இருக்கிறான் என்றால்...

(பாட்டு)

மனக் கவலை பெரிதாகி
மன்னனான இந்திரனும்
எண்ணாத எண்ணமெல்லாம்
எண்ணுகிறான் தன்மனதில்
தேவர்கள் முகம் பார்த்து
தேவர் கோமான் ஏது சொல்வான்
வாரும். எந்தன் அடியவரே
வார்த்தை சொல்லக் கேளுமையா (30)

(வசனம்)

தேவர்கள் சொன்ன வார்த்தையைக் கேட்ட இந்திரன் மனங்கலங்கி தேவர்களை கூப்பிட்டுச் சொல்லுகிறான். "ஐயா! தேவர்கள் நம் பதவியாகிய இந்திரபட்டம் பறி போனால் நானும் என் அடியவராகிய நீங்களும் எங்கு போகிறது. எந்த இடத்தில் சென்று அமர முடியும்" என்று மனம் கலங்கி அமர்ந்திருக்கிறார். இந்திரனும் அவர் அடியவராகிய தேவர்களும் இவர்கள் இப்படி இருக்க, நாரதர் தெரியுமா? அந்த நாரதரானவர் பிரம்ம லோகம், சத்திய லோகம், வைகுந்த லோகம் எல்லாம் சுற்றி எங்கே வருகிறார் என்றால்...

(பாட்டு)

தேவலோகம் போகவென்று
சிவமுனிவர் நாரதரும்
அமரர்லோகம் போகவென்று

அருமுனிவர்தான் வாறார்
தெய்வேந்திரன் சபைதனிலே
சிவமுனியும் வந்து சேர்ந்தார்
அமரேசன் சபைதனிலே
அருமுனியும் வந்து சேர்ந்தார் (31)

(வசனம்)

இப்படி இந்திரன் கவலையோடு அமர்ந்திருக்கிறபோது, நாரதரானவர் மற்ற இடங்கள் எல்லாம் சுற்றிப் பார்த்து, இனிமேல் இந்திர சபைக்குச் சென்று வருவோம் என்று ஆகாயமார்க்கமாக கெவுணோடி அமரேசன் சபையில் வந்தார். பார்த்தார் இந்திரன். நாரதரைக் கண்ட உடன் ஆசனத்தை விட்டு எழுந்து உடனே வணங்குகிறான்.

(பாட்டு)

அண்டர் தொழும் மாமுனியைக் கண்டவுடனே தான்
ஆசனத்தை விட்டெழுந்து அடிபணிவாராம்
பண்டு முனியே உமக்கு தெண்டம் ஐயனே!
யத்குமுத்தி உள்ள நாரத மாமுனிவரே
ஏழைக் குடிலுக் கெழுந்த காரணமென்ன
அஸ்ற்றாங்க திருஸ்ற்றாங்க' தெண்டம் ஐயனே (32)

(வசனம்)

நாரதரைக் கண்டவுடன் ஆசனத்தை விட்டு எழுந்து, அவர் பாதத்தில் வீழ்ந்து வணங்கி, "ஐயா! நாரத மகாமுனிவர் நல்ல சமயத்தில் வந்தீர்கள். அதோ அந்த ஆசனத்தில் சென்று அமருங்கள்" என்று ஒரு தர்ப்பாசனத்தில் அமரும்படியாகச் செய்து, சொல்லுகிறான் இந்திரன். "ஐயா நாரதர்! உங்களைப் பார்த்து ரெம்ப நாளாகி விட்டது. எப்போ வருவீர்கள் என்று எதிர்பார்த்து இருந்தேன். நல்ல நேரத்தில் வந்தீர்கள்" என்று சேம நலங்களை விசாரித்து, அவன் ஆசனத்தில் சென்று அமர்ந்தான்.

உடனே நாரதர் கேள்க்கிறார். "நாராயணா! அமரேசா, நான் உன்னையும் உன் சபையையும் பார்த்து ரொம்ப நாள் ஆகிவிட்டது. பார்த்துப் போகலாம் என்று வந்தேன். இந்திரா! நீங்கள் எல்லோரும் நல்ல சுகம்தானா? நாராயணா! உன்

மனைவி இந்திராணி எப்படி இருக்கிறாள். பரவாயில்லை. இந்திரா இன்றைக்கு உன் சபையைப் பார்க்கிறபோது எப்படி இருக்கிறதென்றால்...

(அ-கு) 1. எட்டு அங்க நமஸ்காரம், மூன்று அங்க நமஸ்காரம்.

(பாட்டு)

*அலை ஓய்ந்த சமுத்திரம் போல்*
*அரசே உன் சபைதான் இருக்குதையா*
*மௌனமாக இருப்பதென்ன*
*மன்னவனே இந்திரனே*
*என்ன என்ன விபரம் என்று*
*எனக்கறியச் சொல்லவேணும்*
*நாரதரும் இவையுரைக்க*
*நவுலுகிறார் இந்திரனும்* (33)

(வசனம்)

தேவ சபையைப் பார்த்து, "அப்பா! இந்திரா, நான் எப்பொழுது வந்து உன் சபையைப் பார்த்தாலும், ரொம்பக் கலகலப்பாகவும் ரொம்ப சந்தோசமாகவும் அமர்ந்திருக்கக் கூடிய நீங்கள், இன்றைக்கு அலை ஓய்ந்த சமுத்திரம் மாதிரி ஒருவர் முகத்திலும் சந்தோசம் இல்லாமல் அமர்ந் திருக்கிறீர்கள். அது என்னப்பா விசயம்" என்றார் நாரதர். உடனே இந்திரன் சொல்லுகிறான். "ஐயா! நாரதர், எங்களுக்கு இப்பக் கொஞ்ச நாளாய் ஒரு கவலை உண்டாகிக் கொண்டே இருக்கிறது. அது என்னக் கவலை தெரியுமா...

(பாட்டு)

*அருணயம் பதிவாசன்*
*அரசன் வல்லாள மகாராஜன்*
*இரண்டு பெண்ணை மணமுடித்தும்*
*இளமதலை இல்லாமல்*
*முப்பத்திரண்டு தான தர்மம்*
*முறைப்படியே செய்து வாறான்* (34)

(வசனம்)

"ஐயா! நாரதர், அருணயம் பதியில் அரசு செய்து வரும் வல்லாள மகாராஜன் இரண்டு பெண்களைக் கல்யாணம் செய்தும் குழந்தை இல்லாதபடிக்கு முப்பத்திரண்டு விதமான தானதர்மம் செய்து வருகிறான்," என்றார் இந்திரன். பார்த்தார் நாரதர். "நாராயணா அப்பா! இந்திரா, அந்த வல்லாள மகாராஜன் தானதர்மம் செய்தால், அதைப் பற்றி உனக்கென்னப்பா இவ்வளவு பொறாமை. அவன் பொருளை அவன் செலவழிக்கிறான். அதைப் பற்றி நமக்கென்ன கவலை. ஆமாம் அதைப் பற்றி உனக்கு ஏதாவது இடஞ்சல்கள் இருக்கிறதோ? நாராயணா! இருந்தால் சொல்லு, நான் கவனித்து கொள்கிறேன்" என்றார் நாரதர்.

உடனே இந்திரன் ரொம்பக் கவலையோடு சொல்லுகிறான். "ஐயா! நாரதர்...

(பாட்டு)

நாரதர் தன் முகம் பார்த்து
நலமுடனே ஏது சொல்வான்
வாருமையா நாரதரே
வார்த்தை சொல்லக் கேளுமையா
தர்மமது நடத்திவந்த
தார்வேந்தன் ஆனவர்க்கு
அமரேசப் பதவியது
அரசனுக்கு கிடைக்குமென்றார் (35)

(வசனம்)

"ஐயா! மகதியாள்வார், அப்படித் தர்மம் செய்கிறதை பற்றி எனக்கு பொறாமையோ வஞ்சகமோ கிடையாது. எனக்கு என்ன பயம் என்றால், இப்படி முப்பத்திரண்டு விதமான தான தர்மம் செய்கிற பேர்க்குத் தெய்வலோகப் பதவி -கூடிய சீக்கிரம் கிடைக்கும் என்பதாகச் சொல்லுகிறார்கள். என் இந்திர பதவியும் இந்திரப்பட்டமும் அந்த அரசனுக்குக் கிடைத்து விட்டால், நானும் என் அடியவராகிய தேவர்களும் எங்கு போகிறது? - என்ற ஒரே கவலைதான். வேறு எனக்கு பொறாமையோ வஞ்சகமோ

கிடையாது" என்றார் இந்திரன்.

இதைக் கேட்டுக் கொண்டே இருந்த நாரதர் உடனே **தர்ப்பாசனத்தை** விட்டு எழுந்தார். "நாராயணா! இந்திரா, இதைப்பற்றிதானா கவலை...

(பாட்டு)

**அஞ்ச வேண்டாம் பதற வேண்டாம்**
**அமரர்லோகம் ஆளும் மன்னா**
**ஒன்றுக்கும் அஞ்ச வேண்டாம்**
**உலகமாளும் இந்திரனே!**
**மனமதில் கவலை வேண்டாம்**
**மன்னரான அமரேசா!** (36)

(வசனம்)

அமரேசன் சொன்ன வார்த்தைகளைக் கேட்ட நாரதர் சொல்லுகிறார்.

"இந்திரா! ஏனப்பா இவ்வளவு கவலை? ஒருவனுக்கு ஒரு குழந்தை இல்லை என்றால் ஏதோ பரமனை நோக்கித் தவம் செய்வார்கள் அல்லது ஏதோ நாலைந்து பரதேசிக்கு ஒருநாள் அல்லது இரண்டு நாள் படி அமுது கொடுப்பார். இதுதான் உலகத்தில் உள்ள முறை. நானும் கேள்விபட்டு இருக்கிறேன். இப்படியா முப்பத்திரண்டு தர்மம் செய்வார்கள். பார்த்தாயா? இவனுக்கு எவ்வளவு திமிர். எவ்வளவு மமதை. உலகத்தில் இவனிடத்தில் தானா பொருள் இருக்கிறது. இவன் எப்படிபட்டவன் தெரியுமா? நான்தான் பெரிய குபேரன். என்னிடம்தான் ரொம்ப பொருள் இருக்கிறது என்று, ஏதோ மூன்றிரண்டு தர்மத்தைச் செய்து உலகத்தை ஏமாற்றுகிறான். இப்படிப்பட்ட பயல்கள்தான் நமக்குப் பிடிக்காது. சரி! நாராயணா, இந்திரா, நான் இப்பொழுது எங்கே புறப்பட்டு இருக்கிறேன் தெரியுமா? பூலோகத்திலே சென்று...

(பாட்டு)

**தருமக்கொடி அறுத்து**
**சணப்பொழுதில் நான் வருவேன்**
**அன்னக்கொடி அறுத்து**

அரசேணத்தில்' நான் வருவேன்
அஞ்சவேண்டாம் பதற வேண்டாம்
அமரர்க்கெல்லாம் அதிபதியே
என்று சொல்லி நாரதரும்
எழுந்திருந்து அவர் வாறார் (37)

(வசனம்)

"தேவர்க்கெல்லாம் அதிபதியாகிய இந்திரா! நான் சொல்வதைக் கேள். நான் இப்பொழுதே பூலோகம் சென்று, வல்லாள மகாராஜன் கட்டி இருக்கும் தருமக் கொடியை அறுத்து அவன் செய்து வரும் தருமத்தையும் சின்னா பின்னம் செய்து வருகிறேன். அவன் தர்மக் கொடியை அறுக்கவில்லை என்றால் என் பெயர் நாரதர் இல்லை" என்று ரொம்பக் கோபத்தோடு இந்திரன் சபையை விட்டு எழுந்தார்.

"இந்திரன்! நான் சென்று வருகிறேன். கவலையை விடு. ரொம்ப சந்தோசமாய் இருங்கள்," என்று சபையைவிட்டு எழுந்தார்.

"சரி! நான் சென்று வரட்டுமா? நாராயணா" என்று நாரதர் வருகிறார் எப்படி என்றால்...

(அ-கு) 1. அரை கணப் பொழுதில்.

(பாட்டு)

தேவலோகம் தான் கடந்து
சிவமுனிவர்தான் வாறார்
அமரர்லோகம் தான் கடந்து
அருமுனிவர் தான் வாறார்
பூலோகம் போகவென்று
புறப்பட்டல்லோ அவர்வறார்
அருணயம்பதி நோக்கி
அருமுனிவர்தான் வாறார் (38)

(வசனம்)

நாரதரானவர் இந்திரனிடத்தில் சபதம் சொல்லிவிட்டு இந்திர லோகத்தைக் கடந்து பூலோகம் வந்து கொண்டு இருக்கிறார். பூலோகத்தில் அருணயம்பதி நகருக்குப் பக்கத்தில்

வந்து கொண்டு இருக்கிறார் நாரதர். இப்படியே இவர் வந்து கொண்டு இருக்கிறபோது வல்லாள பூமானிடத்தில் தர்மம் வாங்க வருகிறவர்கள், வாங்கி போகிற பேர்கள் கூட்டத்தையும் பார்த்தார். உடனே மெய்மறந்தார்.

"ஆகா என்னா கூட்டம்! நாம் ஏனோதானோ என்று இந்திரனிடம் சபதம் செய்தோம். ஏது! ஏது!! நம் தந்திரம் இங்கு பலிக்காது போலிருக்கிறதே. எதற்கும் முயற்சி செய்து பார்ப்போம். **முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார்** முயற்சி உடையவர்கள் ஒருநாளும் இகழ்ச்சி அடைய மாட்டார். அதே மாதிரி நாமும் பின்வாங்கக் கூடாது" என்று நாரதர் வந்து கொண்டு இருக்கிறார்.

அப்படி வருகிறபோது, ஒரு வேதியர் அரசன் இடத்தில் கொஞ்சம் பொன் தர்மமாக வாங்கி, அதை ஒரு மூட்டையாகக் கட்டித் தலையில் சுமந்து வந்து கொண்டு இருக்கிறார். அதைக் கண்டார் நாரதர். அந்த பிராமணாளை பார்த்து கேள்க்கிறார்.

"ஐயா பிராமணாள், கொஞ்சம் நில்லுங்கள். இது என்னையா சுமை?" என்று கேட்டார் நாரதர். உடனே வேதியர் சொல்லுகிறார். "ஐயா...

**(அ-கு) 1. பழமொழி**

(பாட்டு)

*அருணையம் பதிதனிலே*
*அரசன் வல்லாள மகாராஜன்*
*தானதர்மம் செய்யுகிறார்*
*தாரரசர் வல்லாளன்*
*எந்தப் பொருள் கேட்டாலும்*
*இல்லை என்று சொல்வதில்லை* (39)

(வசனம்)

"ஐயா! முனிவர், எங்கள் அரசன் வல்லாள மகாராஜன் முப்பத்திரண்டு தான தர்மம் செய்கிறார். நான் அவரிடத்தில் சென்று, ஐயா! எனக்குப் பூனூல் சடங்கு செய்ய வேண்டும். அதற்கு முன்னூறு பொன் தர்மமாகத் தாருங்கள் என்று

கேட்டேன். உடனே, எங்கள் அரசன் எனக்கு நன்றாகச் சாப்பாடு கொடுத்து, முன்னூறு பொன்னும் தந்து ஒரு தங்கப் பூனூலும் தந்து அனுப்பினார்கள். வாங்கி வருகிறேன்" என்றார் வேதியர்.

பார்த்தார் நாரதர். "சரி! அப்படியானால் சென்று வாருங்கள்," என்று அதைத் தாண்டி வருகிறபோது, இன்னுமொரு ஆடவன் பசு ஒன்றைக் கையில் பிடித்து வருகிறான். அதைப்பாத்து நாரதர் கேள்கிறார் எப்படி என்றால்...

(பாட்டு)

**ஊர்தான் என்ன பேர்தான் என்ன**
**உன்னுடைய நாமம் என்ன**
**இங்கு வந்த விபரமதை**
**எனக்கறியச் சொல்ல வேணும்**
**நாரதரும் இவையுரைக்க**
**நலமுடனே ஏது சொல்வான்** (40)

(வசனம்)

இந்த நாரதர் பசுமாடு பிடித்து வருபவரைச் சென்று மறித்தார். "ஐயா! கொஞ்சம் நில்லுங்கள். இந்தப் பசுமாடு ஒரு சுமார் எவ்வளவு கிரையம் கொடுத்து இருப்பீர் அல்லது எங்காவது களவு, திருடு செய்திருப்பீரோ. மாடு நல்ல மாடுதான்" என்றார்.

களவு திருடு என்ற வார்த்தையைக் கேட்டான். ரொம்ப கோபம்.

"ஓய் முனிவர்! என்னய்யா சொன்னீர். இது களவுமில்லை காசு கொடுத்து வாங்கவும் இல்லை. எங்கள் அரசன் வல்லாள பூபதி இடத்தில் சென்று, ஐயா! எனக்கு ஒரு பசு கொடுங்கள் என்று கேட்டேன். அவர் எனக்கு இந்த பசுமாடும் கொடுத்து, அதை வளர்ப்பதற்குக் கொஞ்சம் பொருளும் கொடுத்தார். வாங்கி வருகிறேன்" என்றார்.

அதையும் பார்த்தார் நாரதர். "சரி! போவோம்" என்று நகண்டு[1] வருகிறார். அங்கும் சிலபேர்கள் தர்மம் வாங்கி

வருகிற பேரும் போகிற பேர்களையும் பார்த்தார் நாரதர். மனதில் நினைக்கிறார் எப்படி என்றால்...

(அ-கு) 1. நகர்ந்து

(பாட்டு)

எண்ணாத எண்ணமெல்லாம்
எண்ணி மனம் வாடுகிறார்
அரசனையும் பார்ப்போ மென்று
அருமுனிவர் தான்வாரார்
வல்லாளன் மனைதனிலே
வந்தாரே நாரதரும்
ஆசார வாசலிலே
அருமுனியும் வந்து சேர்ந்தார் (41)

(வசனம்)

நாரதர் மனம் கலங்கி, "இனிமேல் அரசனைச் சென்று பார்ப்போம்" என்று அரசன் ஆசாரவாசலில் வந்து ஆராச்சி மணியை அடித்தார்.

அதை அறிந்த வல்லாள மகாராஜன் மந்திரியை அழைத்து, "யாரோ ஒருவர் ஆராச்சி மணி அடிக்கிறார்கள். சென்று அழைத்து வாருங்கள்" என்று சொல்லவும், உடனே மந்திரிகள் சென்று நாரதரை அழைத்து அரசன் முன்பில் கொண்டு விட்டார்கள்.

நாரதரை கண்ட உடன் அரசன் வல்லாள மகாராஜன் எழுந்து வணங்கினார்...

(பாட்டு)

அருமுனியை கண்டபோது
அரசன் வல்லாளன் வணங்குகிறார்
மாமுனிவர் பாதமதில்
மலர்பாதம் வணங்குகிறார்
அடிபணிந்து வல்லாளன்
ஆசனத்தில் அமரச் செய்தான்
மாமுனிவர் முகம் பார்த்து
மன்னவரும் ஏது சொல்வார் (42)

(வசனம்)

உடனே மந்திரிமார்கள் நாரதரை அழைத்து அரசன் வல்லாள மகாராசன் முன்பில் கொண்டு விட்டார்கள்.

நாரதரைக் கண்ட உடன் வல்லாள மகாராஜன் ஆசனத்தைவிட்டு எழுந்து முனிவர் பாதத்தில் வீழ்ந்து பணிந்து, "ஐயா! நாரத மகாமுனியே வாருங்கள். இதோ இந்த ஆசனத்தில் அமருங்கள்" என்று ஒரு தர்ப்பாசனம் கொடுத்து அதில் அமர்ந்திருக்கும்படி செய்து, "ஐயா! நாரதர் நீங்கள்...

(பாட்டு)

*என்னுடைய மாளிகைக்கு*
*எழுந்தருளும் காரணமேன்*
*வந்ததொரு விபரமதை*
*வாய்திறந்து சொல்லவேணும்*
**என்று கேள்க்க வல்லாளன்**
*ஏது சொல்வார் மாமுனிவர்*
*மன்னரான வல்லாளா*
*வார்த்தை சொல்லக் கேளுமையா* (43)

(வசனம்)

அரசன் நாரதரைப் பார்த்துக் கேள்கிறார். "ஐயா! தவமுனிவரே, உங்களைப் பார்த்து ரெம்ப நாள் ஆகிவிட்டது. திடீர் என்று வரமாட்டீர்கள். நீங்கள் எங்கள் சபைக்கு வருகிறதாய் இருந்தால் நாங்கள் எவ்வளவு புண்ணியம் செய்து இருக்க வேண்டும். ஐயா! முனிவர்! நீங்கள் நல்ல சவுக்கியமாக இருக்கின்றீர்களா?" என்றார் வல்லாளன்.

உடனே நாரதர் சொல்லுகிறார். "அரசே! வல்லாளா, நான் சொல்வதைக் கேள். எப்படி என்றால்...

(உப செய்யுள்)

**"எல்லாருக்கும் நன்றாம் பணிதல் அவருள்**
**செல்வர்க்கே செல்வம் தகைத்து"**[1] என்றார் வள்ளுவர். அதேமாதிரி ஒருவரை வணங்கிறது எல்லாருக்கும் நன்றுதான் இருந்த போதிலும் செல்வர்க்கே செல்வம் தகைத்து. வல்லாள மகாராஜா, நான் சொல்வதை கேள்...

*(அ-கு) 1. திருக்குறள் - 125*

(பாட்டு)

*தான தர்மம் செய்வதென்ன*
*தார்வேந்தா வல்லாளா*
*தர்மம் செய்யும் விபரமதை*
*தார்வேந்தா சொல்லவேணும்*
*முப்பத்து ரெண்டு தானதர்மம்*
*முறைப்படியே செய்வதென்ன*
*என்ன என்ன விபரம் என்று*
*எனக்கறியச் சொல்லவேணும்* (44)

(வசனம்)

"அரசே! வல்லாள பூபதி! என்னப்பா நல்ல சவுக்கியம் தானா! உன் அரசும் உன் மந்திரிமார்களும் உன்குடி படைகளும் யாபேரும் சவுக்கியமாக இருக்கிறீர்களா? அது சரி! உன் மனைவிமார்கள் எங்கே?" என்றார் நாரதர்.

"ஐயா! கொஞ்சம் பொறுங்கள். இதோ அழைத்து வரச் சொல்லுகிறேன். யாரங்கே, இங்கே வாருங்கள். நான் சொன்னதாக என் மனைவிமார் இரண்டு பேரையும் அழைத்து வாருங்கள்" என்றார்.

உடனே மந்திரி சென்று மல்லம்மா தேவி, செல்லம்மா தேவி இருபேரையும் அழைத்து அரசன் முன்பில் கொண்டுவிட்டார்கள். இரண்டு பெண்களும் அரசர் சபையில் வந்து பார்த்தார்கள். கண்டார் நாரதரை. உடனே என்ன செய்கிறார்கள் என்றால்...

(பாட்டு)

*நாரதர் பாதமதில்*
*நலமுடனே வணங்குகிறார்*
*மாமுனிவர் பாதமதில்*
*மங்கையர்கள் வணங்குகிறார்*
*பார்த்தாரே நாரதரும்*
*பாவையர்கள் இருபேரையும்*
*ஆயிழைமார் முகம் பார்த்து*
*அருமுனியும் ஏது சொல்வார்* (45)

(வசனம்)

இரண்டு பெண்களும் நாரதர் பாதத்தில் வீழ்ந்து வணங்கினார்கள். பார்த்தார் நாரதர். "அம்மா! உங்கள் பெயர் என்ன?" என்றார். உடனே பெண்கள் சொல்லுகிறார்கள். "ஐயா! என் பெயர் மல்லம்மா தேவி. அவள் பெயர் சல்லம்மா தேவி. நாங்கள் இரண்டு பேர்களும் ஒரே சகோதரிகள்தான்" என்று வணங்கினார் பெண்மணிகள்.

உடனே நாரதர் சொல்லுகிறார். "அம்மா உங்கள் மாங்கல்யம் நீடூழி வாழ்க! தீர்க்க சுமங்கல்யமாய் இருப்பீர்கள். சரி! இப்படி அமருங்கள். நாராயணா! வல்லாள மகாராஜன்! ஏனப்பா இப்படி தர்மம் செய்கிறாய். முப்பத்திரண்டு தான தர்மம் செய்கிறதாகக் கேள்விப்பட்டேன். அது உண்மைதானா? அரசே முப்பத்திரண்டு தர்மம் செய்கிறதாய் இருந்தால் ரொம்ப பொருள் செலவாகும். ஏன் இப்படிச் செய்கிறாய்" என்றார் நாரதர்.

உடனே வல்லாள மகாராஜன் சொல்லுகிறார். "ஐயா! நான் இரண்டு பெண்களைக் கல்யாணம் செய்தும் எனக்கு ஒரு கவலை உண்டாகி விட்டது. ஏன் தெரியுமா...

(பாட்டு)

*கொள்ளி வைத்து குடம் உடைக்க*
*குழந்தையது கிடையாது*
*தானதர்மம் செய்ததுண்டால்*
*சந்ததிதான் கிடைக்குமென்று*
*அருமுனியே நாரதரே*
*அறமதுதான் செய்து வாறேன்*
*பரமனுட அருளாலே*
*பாலகன் கிடைப்பான் என்று.* (46)

(வசனம்)

"ஐயா! நாரத மகா முனிவரே! இரண்டு பெண்களைக் கல்யாணம் செய்தும் பிள்ளைப் பேறு கிடையாது. ஆகையால், தான தர்மம் செய்தால், அதன்பலனாகப் பரமன் நமக்கு ஒரு குழந்தை அருள் செய்ய மாட்டாரா, என்று நினைத்துத்தான் தர்மம் செய்கிறேன்" என்றார் அரசன்.

நாரதர் சொல்லுகிறார். "அப்பா! வல்லாளா, அது செய்ய வேண்டியதுதான். பிள்ளை என்றால் யாருக்குத்தான் ஆசை இருக்காது. **'கடந்துள்ளோரும் கடப்பரோ? மக்கள்மேல் காதல்.'** என்னைப் போன்ற பரம ஞானிகளுக்கும் பிள்ளை ஆசை விடாது, அப்படி இருக்க உன் போன்ற அரசர்களுக்குக் குழந்தை ஆசை விடாது. இருந்த போதிலும் இப்படித் தர்மம் எத்தனை நாள் செய்ய முடியும். ஒரு போதும் செய்ய முடியாது என்று நினைக்கிறேன். அவ்வளவு கஸ்றறபட்டுப் பின்னால் தர்மம் செய்வதை நிறுத்தி விடுவாய் என்றுதான் நினைக்கிறேன். அப்படி கஸ்றறபட்டு பின்னால் நிறுத்திவிடுகிறதை இப்பொழுதே நிறுத்திவிட்டால் பொருளும் செலவாகாது, உன் பேரும் கெட்டுப் போகாது. என்றுதான் நினைக்கிறேன்" என்றார் நாரதர்.

உடனே அரசன் சொல்லுகிறார். "ஐயா முனிவர்...

(பாட்டு)

*சிறு குழந்தை கிடைக்கு மட்டும்*
*செய்திடுவேன் தர்மமது*
*ஆண் குழந்தை கிடைக்கு முன்னால்*
*அறமதை நிறுத்தமாட்டேன்*
*சங்கரனே வந்தாலும்*
*தர்மமதை நிறுத்தமாட்டேன்*
*எந்த வார்த்தை சொன்னாலும்*
*இந்த வார்த்தை சொல்லலாமா* (47

(வசனம்)

"ஐயா! நாரத முனிவ, எனக்கு ஒரு குழந்தை கிடைக்கிற பரியந்தமும் நான் செய்கிற தர்மத்தை நிறுத்துகிறதே கிடையாது. என்னுடைய ஆஸ்த்தி, பொன், பொருள், வீடு மனை எல்லாம் விற்றாலும் சரி. செய்யும் தர்மத்தை விடுகிறதே கிடையாது. மகாதேவனான ஈஸ்வரனே நேரில் வந்து சொன்னாலும் மதலை கிடைக்கும் முன்னால், தர்மத்தை விடுகிறதே கிடையாது. நாரதர்! தயவு செய்து தர்மத்தை விட்டுவிடு, என்று மட்டும் சொல்லாதீர்கள்" என்று கடுமையாகப் பேசினார்.

உடனே நாரதர் சொல்லுகிறார். "நாராயணா! வல்லாளா, ஏன் அப்பா ரொம்பக் கோபப்படுகிறாய்? உனக்காக வேண்டிதான் சொன்னேன். அரசே! நீர் மட்டும் இந்த தர்மத்தை இடைவிடாமல் செய்தால் பரமன் அருளால் கூடிய சீக்கிரம் புத்திர பேறு கிடைக்கும். தர்மத்தை மட்டும் விட்டு விடாதே. சரி நான் வரட்டுமா" என்று எழுந்தார் நாரதர்.

அரசன் சென்று பணிந்து "ஐயா ஒரு நேரம் தாகசாந்தி அருந்துங்கள்" என்றார் வல்லாளன்.

"அப்பா! வல்லாளா, நீ சொன்னதே போதும். தர்மத்தை மட்டும் விட்டுவிடாதே. உன் மனம் போல் வாழ்வாய். சரி நான் வருகிறேன். நாராயணா!" என்று எழுந்தார்.

இந்திரனிடத்தில் தர்மக் கொடியை அறுத்து வருகிறேன் என்று வந்தவர், வல்லாள மகாராஜனை வாழ்த்துகிறார். வாழ்த்திவிட்டு எங்கே வருகிறார் என்றால்...

(பாட்டு)

*அரசருட சபை கடந்து*
*அருமுனிவர் தான் வாரார்*
*மன்னருட சபை கடந்து*
*மாமுனிவர் தான் வாரார்*
*எண்ணாத எண்ணமெல்லாம்*
*எண்ணுகிறார் நாரதரும்*
*மாமுனிவர் நாரதரும்*
*மனமதிலே எண்ணுகிறார்.* (48)

(வசனம்)

அரசனை வாழ்த்திவிட்டு அரசர் சபை கடந்து நாரதர் வருகிறபோது ரொம்பக் கவலை. "இனிமேல் நாம் எங்கு போகிறது. இந்திரனிடத்தில் வல்லாள மகாராஜன் தர்மக் கொடியை அறுத்து வருகிறேன், என்று வந்தேன். தர்மக் கொடியை அறுத்தோமா? அதுவும் கிடையாது. எப்படியாவது வல்லாள மகாராஜன் தர்மக் கொடியை அறுக்கு முன்னால் நாரதராகிய நான்...

(பாட்டு)

தேவலோகம் போனோமானால்
தேவர் கோமான் நகைத்திடுவான்
அமரேசன் கண்டாரானால்
எள்ளி நகையாடிடுவார்
என்னவகை செய்திடலாம்
என்று மனம் தள்ளாடி
மனக்கவலை பெரிதாகி
மாமுனிவர் தான்வாரார் (49)

(வசனம்)

நாரதன் வருகிறபோது மனதில் ரொம்பக் கவலை. நாம் தேவலோகம் போனால் தெய்வேந்திரன் கொஞ்சமும் மதிக்கமாட்டான். நம்மைக் கண்டால் எள்ளி நகையாடுவான். 'ஐயா! நாரதர்! தர்மக் கொடியை அறுத்து விட்டீரா' என்று கேட்பான். பதில் என்ன பேச முடியும். நமக்கு ஏன் இந்த வம்பு. நாம் பேசாமல் இருந்தால் நமக்கு இவ்வளவு கவலை. அதுதான் சொல்லுகிறார் வள்ளுவர். எப்படி என்றால்,

(உப செய்யுள்)

தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினாற் சுட்ட வடு (திருக்குறள் - 129)

தீயினாற் சுட்டபுண் - தீயைக் கொண்டு சுட்டால் உடனே அந்த கா்யத்தை ஆற்றி விடலாம். ஆறாதே நாவினாற் சுட்டவடு - யாராவது நாவினால் ஒரு சுடுவார்த்தை பேசினால் அதை ஒரு நாளும் ஆற்ற முடியாது. அதே மாதிரி நாம் ஏன் நம் நாவால் சொல்ல வேண்டும். இவ்வளவு கவலை ஏன் பட வேண்டும், என்று மனதில் ரொம்ப கவலையோடு வந்து கொண்டு இருக்கிறார்.

"இவ்வளவு நாளும் நான் நினைத்ததை முடிக்காமல் விடவில்லை. நம்மால் முடியாமல் போனாலும் மற்ற பேர்களை வைத்தாவது முடித்து போடுவேன். இதற்கு ஒன்றும் செய்ய முடியாது போலிருக்கிறதே என்ன செய்யலாம்" என்று யோசித்து. "இப்படி செய்தால் என்ன...

(பாட்டு)

*கைலாசம் போக வேணும்*
*கறைக்கண்டனை பார்க்க வேணும்*
*என்று சொல்லி நாரதரும்*
*ஏகி அல்லோ அவர் வாறார்*
*ஆகாய மார்க்கமாக*
*அருமுனிவர் தான் வாரார்*
*ஈஸ்பரனை பார்க்கவென்று*
*இயல் முனிவர் தான் வாறார்* (50)

(வசனம்)

"நாம் நினைத்ததை முடிக்காமல் ஒரு போதும் விடக் கூடாது. கைலாச வாசகனாகிய பரமன் இருக்கிறபோது, நமக்கு என்ன கவலை. பரமன் இடத்தில் இந்த விஷயத்தை ஒன்றுக்கு இரண்டாகச் சொல்லி அவருக்குக் கோபத்தை உண்டாக்கி அவர் மூலமாக இந்த வல்லாளன் தர்மக் கொடியை அறுக்க வேண்டும். அல்லாது போனால் இனிமேல் நம்மை ஒருவரும் மதிக்க மாட்டார்கள். பரமன் இருக்கிற போது நமக்கு என்ன கவலை. அப்படியானால் சென்று வருவோம், என்று புறப்பட்டு வருகிறார்.

(பாட்டு)

*ஈஸ்பரனை தேடி அல்லோ*
*யேகிவாறார் மாமுனிவர்*
*பரமனையும் பார்க்கவென்று*
*பரம முனிதான் வாறார்*
*கைலாச மலை தனிலே*
*கனக முனி வந்து சேர்ந்தார்*
*மகாதேவன் இடமதிலே*
*மகதியாழ்வார் வந்து சேர்ந்தார்* (51)

(வசனம்)

இந்த நாரதர் பரமனைப் பார்க்கவென்று ஆகாய மார்க்கமாகக் கைலாச மலையில் வந்து சேர்ந்தார். நாரதர் கைலாசம் வருகிற போது பரமன் பார்வதி தேவியைப் பக்கத்தில் அமர்த்தி, முனி கணங்கள் புடைசூழத் தக்கதாகப்

பரமன் அமர்ந்திருக்கிறார். அந்த நேரத்தில் நாரதர் வள்ளல் சிவன் அருகில் சென்று வணங்கினார். எப்படி என்றால்...

*(ஆ-கு) 1. நாரதர் வீணை*

(பாட்டு)

*மகாதேவன் பாதமதில்*
*மாமுனிவர் வணங்குகிறார்*
*ஈஸ்பரன் பாதமதில்*
*இணையடியை வணங்குகிறார்*
*ஏழையாண்டி சடையானே*
*ஈஸ்பரனே மகாதேவா*
*என்று சொல்லி நாரதரும்*
*ஈஸ்பரனை வணங்குகிறார்* (52)

(வசனம்)

நாரதர் ஆகாய மார்க்கமாக **கெவுண்** ஓடி கைலாச பர்வதத்தில் பரம என் பெருமானை வணங்கினார். பார்த்தார் பரமன். "ஐயா! நாரதர், வாருங்கள். அந்த ஆசனத்தில் அமருங்கள்" என்றார் பரமன்.

நாரதரும் ஒரு தர்ப்பாசனத்தில் சென்று அமர்ந்தார். கேட்கிறார் என் பெருமான். "ஐயா! நாரதர் என்ன சவுக்கியம் தானா. உங்களை எல்லாம் திடீர் என்று பார்க்க முடியாது. ஏதாவது ஒரு அவசியம் இல்லை என்றால் வரவும் மாட்டீர். ஏதாவது ஒரு விஷயம் இருக்கும். அதுதான் வந்து இருக்கிறீர். ஐயா நாரதர்...

(பாட்டு)

*வந்ததொரு விபரமதை*
*வாய் திறந்து சொல்ல வேணும்*
*என்ன என்ன விபரம் என்று*
*எனக்கறியச் சொல்ல வேணும்*
*என்று கேட்கும் வேளையிலே*
*ஏது சொல்வார் மாமுனிவர்*
*மகாதேவன் முகம் பார்த்து*
*மாமுனிவர் ஏது சொல்வார்* (53)

(வசனம்)

"ஐயா! நாரதர், ஏதாவது புதுமை இல்லை என்றால் வரமாட்டீர்கள். சரி அதிருக்கட்டும். எந்த இடங்கள் எல்லாம் சென்றீர்கள். என்ன புதுமைகள் நடக்கிறது. கொஞ்சம் சொல்லுங்கள்" என்றார் பரமன். உடனே நாரதர் பரமனை வணங்கிச் சொல்லுகிறார். "நாராயணா! கைலேயங்கிரி வாசனாகிய சிவ என் பெருமானே கேளுங்கள். முதலாவது பிரம்மலோகம் சென்றேன். அங்கு ஒரு புதுமையும் கிடையாது. பின்னால் சத்தியலோகம். அப்புறம் வைகுந்தலோகம். அங்கெல்லாம் சுற்றியும் ஒரு புதுமையும் கிடையாது. ஒரே ஒரு இடத்தில் மட்டும் ஒரு புதுமை ஒன்று நடக்கிறது. அது எந்த இடம் தெரியுமா...

(பாட்டு)

அருணயம்பதிதனிலே
அரசன் வல்லாளன் இருக்கிறான்
பிள்ளை இல்லை என்று சொல்லி
பெரிய தர்மமது செய்யுகிறான்
முப்பத்திரெண்டு தான தர்மம்
முறைப்படியே செய்யுகிறான்
இல்லை என்று சொல்லாமல்
எப்பொழுதும் வழங்குகிறான் (54)

(வசனம்)

"ஐயா! சிவ என் பெருமானே. நான் சொல்வதைக் கேளுங்கள். அருணயம் பதியை அரசு பரிபாலனம் செய்து வருகிறான் வல்லாள மகாராஜா. அவன் மல்லம்மா தேவி சல்லம்மா தேவி என்று இரண்டு பெண்களைக் கல்யாணம் செய்து இருக்கிறான். அந்த இரண்டு பெண்களைக் கல்யாணம் செய்தும் குழந்தை இல்லை. அதற்காக வேண்டி முப்பத்திரெண்டு தான தர்மம் செய்து வருகிறான். பார்த்தீர்களா அவனுக்கு எவ்வளவு திமிர். உலகத்தில் ஒருத்தர் இடத்திலும் பொருள் இல்லாமலா இருக்கிறார்கள். இவனுக்குத் தானா குழந்தை இல்லை. பார்த்தீர்களா எவ்வளவு திமிர் என்று. இவ்வளவு மமதை பிடித்த அரசனை நான் இது பரியந்தமும்

கண்டதே கிடையாது" என்று ரொம்பக் கடிந்து பேசினார் நாரதர்.

அதைக் கேட்ட பரமன் சொல்லுகிறார். "ஐயா! நாரதர், ஒரு குழந்தை இல்லையானால் ஏதோ ஒன்றிரண்டு தர்மம் செய்வான். முப்பத்திரண்டு தர்மம் செய்ய நம் தேவர்களாலும் முடியாது. அப்படி இருக்க, ஒரு மானிடன் செய்கிறதாய் இருந்தால் அது சுத்தப் பொய். என்னால் நம்பவே முடியாது' என்றார் பரமன்.

(பாட்டு)

*பரமன் இந்த வார்த்தை சொல்ல*
*பகருகிறார் நாரதரும்*
*ஈஸ்பரனே மகாதேவா*
*என் வார்த்தை கேளுமையா*
*பொய்யாகப் பேசவில்லை*
*போய்ப் பார்த்து வந்தேனையா*
*அருணயம் பதியில் சென்று*
*அறிந்து வந்தேன் ஈஸ்பரனே* (55)

(வசனம்)

பரமன் நாரதரை பார்த்து, "பொய் சொல்லுகிறீர்" என்று சொல்லவும், நாரதர் சொல்லுகிறார்.

"ஈஸ்பரா! நான் சொல்வதை நம்புங்கள். நானும் மற்ற பேர்கள் சொல்லும்போது நம்பவில்லை. அதற்காக நேரில் சென்று பார்ப்போம் என்று அருணயம்பதியில் சென்று பார்த்தேன். அப்பப்பா! அந்த வல்லாளன் இருக்கிற திமிரும் அவன் மந்திரிமார்கள் இருக்கும் மமதையும் பார்க்க முடியாது. அது மட்டுமா? அவன் மனைவி ரெண்டு பேர் இருக்கிறாள். அவர்களுக்கு வந்திருக்கும் செருக்கைப் பார்த்தால் என்ன சொல்றது, போங்கள். அங்கு வருகிற கூட்டத்தை தான் 'வாருங்கள், உட்காருங்கள், என்ன வேண்டும்' என்று கேட்கிறானே தவிர, நம்மைக் கண்டால் பார்த்தும் பாராதவன் மாதிரி இருக்கிறான். அதும் போக ஆசாரவாசலில் தர்மக்கொடி ஒன்று கெட்டி இருக்கிறான். அந்த வல்லாள மகாராஜன் இருக்கிற இடத்திற்கு நாமெல்லாம் போக

முடியாது. அப்படிச் சென்று விட்டாலும் நம்மை மதிக்கவும் மாட்டான்" என்றார் நாரதர்.

உடனே பரமன் சொல்லுகிறார். "ஐயா! நாரதர், அப்படியானால் நான் நேரில் சென்று அந்த வல்லாள மகாராசனை...

(பாட்டு)

தர்மம் செய்யும் பாவினையை'
சங்கரனும் பார்க்க வேணும்
பார்த்து வர வேணுமையா
பரமமுனி நாரதரே
அருணயம் பதியில் சென்று
அறிந்துவர வேணுமையா
வல்லாளன் தர்மமதை
வள்ளல் சிவன் பார்க்க வேணும் (56)

(வசனம்)

ஐயா! நாரதர், நீங்கள் இப்படி சொல்லுகிறபடியால் நானே நேரில் சென்று பார்க்க வேண்டும். அவன் எப்படி தர்மம் செய்கிறான், என்ன கூட்டம் வருகிறது, அவன் மனைவிமார் குணம் எப்படி என்று நேரில் சென்று பார்க்க வேணும் என்றார் பரமன்.

உடனே நாரதர் சொல்லுகிறார்:

"ஈஸ்பரனே! நான் சொல்வதைக் கேளுங்கள்; நீங்கள் நேரில் சென்று பார்த்தால், உங்களையும் கண்டால் வாருங்கள், இருங்கள் என்றுகூட கேட்க மாட்டான்; உங்களுக்கு என்ன வேண்டும் என்று கேட்பான்; நம்மையும் பிச்சை எடுக்கிறவன் என்றே நினைத்துக் கொள்வான்; அவனுக்கு அவ்வளவு மமதை. ஏன் என்றால், எவராவது ஒரு பிள்ளைக்காக முப்பத்திரெண்டு தர்மம் செய்வானா? நம்மைப் போன்று எவராலும் இருக்க முடியுமா என்ற ஆணவம். ஐயா! நான் சென்று பட்டபாடு எனக்குத்தான் தெரியும். அதுதான் நீங்கள் போக வேண்டாம் என்று தடுக்கிறேன். நான் பட்ட அவஸ்த்தை நீங்களும் படக்கூடாது என்றுதான் உங்களை

விலக்குகிறேன். அதைத்தான் உங்களிடம் சொல்லி விட்டுப் போகலாம் என்று வந்தேன். அதுதான் சொல்லுவார்கள்.

(செய்யுள்)

*ஒப்புடன் முகம் மலர்ந்து உபசரித்து உண்மைபேசி*
*உப்பில்லா கூழிட்டாலும் உண்பதே அமிர்தமாகும்*
*முப்பழமொடு பாலன்னம் முகம் கடுத்திடுவார் ஆகில்*
*கப்பிய பசியினோடு கடும்பசி ஆகும்தானே!* (57)

(பொருள்)

ஒப்புடன் முகம் மலர்ந்து உபசரித்து, உண்மை பேசி ஒருவர் நமக்கு விருந்து செய்கிறதாய் இருந்தால் அவர் முகத்தில் சந்தோசம் உண்டாகி அவர் மனதில் கள்ளங்கபடம் இல்லாமலும் மெய்யான வார்த்தைகளைப் பேசி, உப்பில்லா கூழிட்டாலும் உண்பதே அமிர்தம் ஆகும்.

அப்படி மெய்யான வார்த்தை பேசி உப்பில்லாத கூழ் படைத்தாலும் அதைச் சாப்பிடுகிறவர்களுக்கு அது தேவாமிர்தம் மாதிரி இருக்கும். அப்படி அல்லாமல் - முப்பழமொடு பாலன்னம் முகம் கடுத்திடுவாராகில் - சில பேர்கள், முப்பழம் மா, பலா, **கொய்யா** என்று சொல்ல கூடிய மூன்று கனியோடு தேனும் சேர்த்து சந்தோசம் இல்லாமல், வந்து விட்டானே என்று கொடுப்பார்களே, ஆனால் அதை வாங்கிச் சாப்பிடக் கூடிய பேர்களுக்கு - கப்பிய பசியினோடு கடும் பசி ஆகும் தானே.

முகத்தில் சந்தோசம் இல்லாமல் கொடுக்கிறதை வாங்கிச் சாப்பிட்டால் முன்னால் இருக்கிற பசியை விட அதிகம் பசிதான் ஆகுமே தவிர குறையாது. அதே மாதிரி நீங்களும் வல்லாள மகாராஜன் அரண்மனையில் சென்றால், வாருங்கள் என்று உபசரித்தால் நல்ல சந்தோசமாய் இருக்கும். அல்லாதே போனால் ரொம்பக் கவலைதான் உண்டாகும். அதுதான் சொல்ல வந்தேன். இனி உங்கள் இஷ்டம் என்று பரமனுக்கு கோபம் வரும்படியாய்ப் பேசி விட்டு, "ஈஸ்பரா! அப்படியானால் நான் போய் வருகிறேன். நாராயணா!" என்று எழுந்தார்.

உடனே பார்த்தார் ஈசன். "நாரதர்! கொஞ்சம் நில்லுங்கள். நான் சொல்வதைக் கேளுங்கள். இப்படி ஒருவரையும் மதிக்காதபடி தர்மம் செய்கிற அந்த வல்லாளனை நான் என்ன செய்வேன், தெரியுமா.

(அ-கு) 1. பாவனை.

(பாட்டு)

தர்மக்கொடி அறுத்து
சணப்பொழுதில் நான் வருவேன்
அன்னக்கொடி அறுத்து
ஆதிபரன் நான் வருவேன்
என்று சொல்லி ஈஸ்பரனும்
எழுந்திருந்தார் கோபமாக
பார்த்தாரே நாரதரும்
பரமனிடம் ஏது சொல்வார் (58)

(வசனம்)

பரமன் ரொம்பக் கோபத்தோடு சொல்லுகிறார். "ஐயா! நாரதர். நான் இப்பொழுதே சென்று அந்த வல்லாள மகாராஜன் தர்மக்கொடியை அறுத்து, அவன் செய்யக்கூடிய தர்மத்தையும் அழித்து, இப்போ அரை நிமிடத்தில் வந்து சேருகிறேன்" என்றார்.

உடனே நாரதர் சொல்லுகிறார். "ஈஸ்பரா! அதுதான் நடக்காது. ஏன் என்றால் நீங்கள் அவனிடத்தில் சென்று எப்படி தர்மக்கொடியை அறுக்க முடியும். ஒரு போதும் முடியாது. ஏன் என்றால்...

(பாட்டு)

என்னாலும் முடியாது
ஈசனாலும் முடியாது
தேவராலும் முடியாது
திருமால் சென்றாலும் முடியாது
தர்மக் கொடி அறுக்க
சங்கரனே முடியாது
அன்னக்கொடி அறுக்க
ஆதிபரா முடியாது. (59)

(வசனம்)

"ஈஸ்பரா! அவன் தர்மக் கொடியை அறுக்க யார் சென்றாலும் முடியாது. நீங்கள் அவன் தர்மக் கொடியை எப்படி அறுக்க முடியும்? ஒரு போதும் முடியாது" என்றார்.

அதைக் கேட்ட பரமன் சொல்லுகிறார். "நாரதா! நான் இங்கிருந்து அந்த வல்லாளன் இடத்தில், 'அரசே! கொஞ்சம் பொன் கொடு என்று கேட்பேன். உடனே கொடுப்பான். பொருள் வேணும் என்பேன். உடனே கொடுப்பான். சரி, உன் வீடுமனை எல்லாம் வேணும் என்பேன். அதும் உடனே கொடுப்பான். அப்படி ஆனால் உன் செங்கோலைக் கொடு என்பேன். உடனே செங்கோலை என் கையில் கொடுத்து சிம்மாசனத்தில் கொண்டு அமர்த்தி வைத்து விடுவான். அப்படியானால் ஆடுமாடு மனை வீடு நிலபுலம் செங்கோல் எல்லாம், கேட்ட உடன் கொடுப்பான் என்றீரே. உன்னுடைய உயிரை கொடு என்பேன். அவன் உயிரையும் கொடுப்பான். அப்படியானால் நாரதரே! அவனை ஒன்றும் செய்ய முடியாதா? நாரதர், இங்கே வாருங்கள். நாம் இப்படி செய்தால் என்ன? எப்படி என்றால், அரசே! வல்லாள மகாராஜா, எனக்கு ஒரு பெண் கொடு என்று கேட்பேன். எந்தப் பெண்ணைக் கொடுப்பான், பார்ப்போம். பெண் இல்லை என்பான். ஒரு பெண் கொடுக்க முடியாத உனக்கு என்ன தர்மக் கொடி? தர்மக் கொடியை அறுத்துக் கீழே வை என்பேன். எப்படி என் தந்திரம்!"

"ஈஸ்பரா அதுதான் முடியாது. ஏன் என்றால்...

(பாட்டு)

பதினாயிரம் பெண் கொடியைப்
பார் வேந்தன் வைத்திருக்கான்
கன்னியரை அனுப்பு என்றால்
கல்யாணமே செய்து வைப்பான்
எந்த பெண்ணைக் கேட்டாலும்
இல்லை என்காமல் கொடுத்திடுவான்
நாரதரும் இவை யுரைக்க
நவிலுகிறார் என் பெருமான் (60)

(வசனம்)

மகாதேவா! நீங்கள் வல்லாளன் இடத்தில் சென்று, அப்பா, ஒரு பெண் கொடு என்றால், அவன் என்ன செய்வான் தெரியுமா? உடனே ஒரு பெண்ணை அழைத்து உங்களுக்கு கல்யாணமே செய்து வைத்து விடுவான். அதற்காக வேண்டி பதினாயிரம் கணிகையர்களைக் கொண்டு வைத்து இருக்கிறான். அந்தப் பெண்களுக்கு ஒரு ஏற்பாடு ஒன்று செய்து வைத்து இருக்கிறான். எப்படி என்றால், ஒரு ஆடவன் ஒரு பெண்ணிடத்தில் சென்றால் அந்தப் பெண் சூரியன் அஸ்தமித்த நேரத்தில் இருந்து சூரியன் உதயமாகிய பரியந்தமும் அந்த ஆடவன் இடத்தில் அமர்ந்திருக்க வேண்டும். அவனைத் தள்ளிவிட்டு இன்னுமொரு ஆடவனை அவள் தேடக் கூடாது. இது அந்த அரசன் கட்டளை. ஆகை யால் உங்களால் ஒன்றும் செய்ய முடியாது - என்றார் நாரதர்.

பரமன் சொல்லுகிறார். "ஐயா! நாரதர்! அப்படி ஆனால் மேல்படியான் சிக்கிக் கொண்டான். எப்படி என்றால் பதினாயிரம் தேவர்களை பதினாயிரம் பண்டாரங்கள் ஆக்கி, பதினாயிரம் விலைமாதர் வீட்டிலும் கொண்டு அமர்த்தி வைத்து விட்டு, நான் மட்டும் தனிமையாகச் சென்று, அரசே! நமக்கு ஒரு பெண் கொடு என்று கேட்பேன். எந்தப் பெண்ணைக் கொடுப்பான்; பார்ப்போம். நாரதரே! எப்படி என் தந்திரம்" என்றார் பரமன்.

உடனே நாரதர் சொல்லுகிறார். "ஈஸ்பரா! அதுதான் முடியாது ஏன் என்றால்...

(பாட்டு)

ஆயிழையாள் ஆனவர்க்கு
ஆயிரம் பொன் கொடுக்க வேணும்
உங்களுட இடமதிலே
ஒரு களஞ்சி பொன்னும் கிடையாது
கால்க் களஞ்சி பொன்னது தான்
கைலாசவாசா கிடையாது
பொன்னது தான் இல்லாமல்
பெண்களிடம் போகண்ணாது (61)

(வசனம்)

மகாதேவா! நீங்கள் சொல்வது ஒரு போதும் முடியாது. ஒரு பெண்ணிடத்தில் ஒரு ஆடவன் ராத்திரி பூராவும் அமர்ந்து இருக்கிறதாய் இருந்தால் ஆயிரம் பொன் கொடுக்க வேண்டும். ஈஸ்பரா! உங்களிடம் கால்க் களஞ்சி பொன்னும் கிடையாது. உங்கள் திரேகத்தில் சங்கு மோதிரமும், கழுத்தில் சர்ப்பமும், உத்ராட்ச மாலையும்தான் இருக்கிறது. இதை யார் தேடுவார்கள்? உங்களால் ஒரு போதும் முடியாது.

"இப்படித்தான், ஒரு ஊரில் உங்கள் மாதிரி ஒரு பண்டாரம் சிக்கிக் கொண்டான். எப்படி என்றால், பிச்சாண்டி என்று ஒரு பண்டாரம் இருந்தான். அவன் வீடு வீடாக சென்று தர்மம் எடுப்பான். அவனுக்கு வர வர ரொம்ப வயதாகி விட்டது.

"அப்பொழுது நினைத்தான். இனிமேல் நாம் கொஞ்சம் பொருள் சம்பாதிக்க வேண்டும் என்று மனதில் நினைத்து, கொஞ்சம் கொஞ்சமாக ஒவ்வொரு நயா பைசாவாகச் சேர்த்து மொத்தம் ஒரு பத்து ரூபாய் சேர்ந்தது. அந்த பத்து ரூபாய் சேர்ந்த அன்றையிலிருந்து அவன் ஊருக்குள் இருந்து வெளியே காடுகளில் சென்று படுத்துக் கொள்வான். ஏன் என்றால் ஊருக்குள் படுத்தால் எவனாவது ரூபாயை அடித்து கொண்டு சென்று விடுவான் என்று பயந்து.

ஒரு நாள் அமாவாசை இருட்டு அன்றைக்கு ராத்திரி ஊருக்குள் தர்மம் எடுத்து நன்றாக சாப்பிட்டுவிட்டு ஊருக்கு வெளியே ஒரு ஆலமரத்து நிழலில் சென்று படுத்தான். அன்றைக்கு நான்கு கள்ளர்கள் வேறு இடத்தில் களவு செய்து, 'அந்த ஆலமரத்து நிழலில் வைத்து பங்கு வைப்போம்' என்று ஓடி வந்தார்கள். அப்படி ஓடி வருகிறபோது, முன்னால் வந்தவன் இந்தப் பண்டாரத்தின் கால் இடறி படீர் என்று வீழ்ந்தான். அப்படி முதலில் வீழ்ந்தவன் பின்னால் வருகிறவர்களை எச்சரித்தான்.

"யேய் தம்பிமார்கள், கொஞ்சம் பார்த்து வாருங்கள். ஆலமரத்து வேர் பெரிய வேராகக் கிடக்கிறது" என்றான்.

"ஆலமரத்து வேரைச் சொன்னால் இந்த பண்டாரத்துக் கென்ன, அவர் சும்மா இருக்கவில்லை. திடீர் என்று எழுந்தான். வேஷ்ட்டியை இறுக்கிக் கட்டினான்.

"ஆமா! டே ஆலமரத்து வேர் பத்து ரூபாயை மடிக்குள் வைத்து இருக்கும். என்னடே விளையாடுறீங்க" என்றான் பண்டாரம்.

"பார்த்தார்கள் திருடர்கள். பரவாயில்லை என்று நான்கு திருடர்களும் பண்டாரத்தைப் பிடித்து அடி அடி என்று அடித்து மடிக்குள் வைத்து இருந்த பத்து ரூபாயையும் பிடிங்கி கொண்டு ஓடி விட்டார்கள்.

"அதே மாதிரி அந்தப் பண்டாரமாவது பத்து ரூபாய் வைத்து இருந்தான். உங்களிடம் பத்து காசும் கிடையாது" என்று நாரதர் கலகல என்று சிரித்தார்.

அதைப் பார்த்த பரமன் சொல்லுகிறார். "நாரதரே! என்னை ரொம்ப மோசம் என்று நினைத்து விட்டீர்கள். எனக்குப் பொன் வேணுமானால்...

(பாட்டு)

நண்பனான குபேர மன்னன்
நான் நினைத்தால் வந்திடுவார்
அழகாபுரி வாசம் செய்யும்
ஆப்த நண்பன் குபேர மன்னன்
வா என்றால் வந்திடுவார்
கேட்கும் பொருள் தந்திடுவார்
என்று சொல்ல ஈஸ்பரனும்
ஏது சொல்வார் நாரதரும் (62)

(வசனம்)

"ஐயா நாரதர்! என்னை ரொம்ப மோசமாக நினைக்க வேண்டாம். எனக்கு என் நண்பன் குபேர மன்னன் இருக்கிறான். அவனை அழைத்தால் உடன் வருவான். நமக்கு எவ்வளவு பொன் தேவையோ உடன் தருவான். அந்தப் பொருளை வைத்து அந்த வல்லாள மகாராஜன் தர்மக் கொடியை அறுக்க என்னால் முடியும்" என்றார் ஈசன்.

உடனே நாரதர் சொல்லுகிறார். "மகாதேவா! உங்களை யார் நம்புவார்கள்? யார் கடன் கொடுப்பார்? அது ஒரு போதும் நடக்காது" என்றார் நாரதர்.

உடனே பரமன் சொல்லுகிறார். "என் நண்பனை இதோ அழைக்கிறேன் பாருங்கள்" என்று தன் நண்பனை நினைக்கிறார். எப்படி என்றால்...

(பாட்டு)

குபேர மன்னா வருக என்று
குருபரனும் தானினைந்தார்
குருபரன் நினைந்திடவே
குபேர மன்னன் அது வரிந்தான்
ஒரு நாளும் நினைக்காத
உமைபாகன் ஆனவர்தான்
இன்று நம்மை நினைப்பதென்ன
ஏதனவே பார்க்க வேணும். (63)

(வசனம்)

பரமன் தன் நண்பனான குபேர மன்னனை நினைக்கவும் அழகாபுரி வாசனாகிய குபேரன் நினைக்கிறார்.

"நம்மை ஒரு நாளும் நினைக்காத உமைபாகனாகிய பரமன் இன்று நினைக்க வேண்டிய விசயம் என்ன? இப்பொழுதே சென்று பார்த்து வர வேண்டும்" என்று எழுந்து வருகிறார்.

கைலாச பர்வதத்தில் அமர்ந்து இருக்கும் பரமன் பாதத்தில் வீழ்ந்து வணங்கி கேட்கிறார். நண்பரே நீங்கள்...

(பாட்டு)

எனை நினைந்த விபரமதை
எனக்கறிய சொல்ல வேணும்
வரவழைத்த காரணத்தை
வாய் திறந்து சொல்ல வேணும்
குபேர மன்னன் இவையுரைக்க
குருபரனும் சொல்லுகிறார் (64)

(வசனம்)

குபேர மன்னன் எழுந்து கைலாச பர்வதத்தில் சென்று பரமனை வணங்கிக் கேட்கிறார். "நண்பரே! என்னை இது நாள் பரியந்தமும் நினைக்காத நீங்கள் இன்று ரொம்ப அவசரமாக நினைக்க வேண்டிய விசயம் என்ன?" என்று கேட்டார். உடனே பரமன் சொல்லுகிறார்.

"நண்பரே இன்றைக்கு நமக்கு கொஞ்சம் பொன் தேவை இருக்கிறது. ஆகையால்தான் உங்களை நினைத்தேன்" என்றார்.

உடனே குபேரன் சொல்லுகிறார். "நண்பரே உங்களுக்கு எவ்வளவு பொன் தேவையோ அவ்வளவு பொன்னும் நான் அனுப்பி வைக்கிறேன். ஒரு சுமார் எவ்வளவு பொன் தேவை இருக்கும்" என்றார்.

"நண்பரே! நமக்குத் தேவையான பொன் எவ்வளவு தெரியுமா? பதினாயிரம் வீடு ஒரு வீட்டுக்கு ஆயிரம் பொன். அதன்படியே கொடுத்து அனுப்புங்கள்" என்றார் பரமன்.

"சரி" என்று குபேரனும் ஒரு பொதி எருது சுமக்கக்கூடிய பொன்னை அனுப்பினார். உடனே அந்தப் பொன்னை வாங்கினார். அப்புறம் என்ன செய்கிறார் என்றால்...

(பாட்டு)

*தேவருட முகம் பார்த்து*
*சிவபெருமான் ஏது சொல்வார்*
*வாருமையா தேவர்களே!*
*வார்த்தை சொல்லக் கேளுமையா*
*அருணயம்பதி தனக்கு*
*அனைபேரும் போக வேணும்*
*என்று சொல்ல ஈஸ்பரனும்*
*எழுந்திருந்தார் தேவரெல்லாம்* (65)

(வசனம்)

உடனே பரமன் தேவர்களைப் பார்த்து சொல்லுகிறார். "ஐயா தேவர்கள்! நீங்கள் பதினாயிரம் பேர்கள் வாருங்கள்.

நீங்கள் பதினாயிரம் தேவர்களும் பண்டாரங்களா வடிவெடுங்கள்" என்றார் பரமன்.

உடனே பதினாயிரம் தேவர்களும் பதினாயிரம் பண்டாரங்களா மாறினார்கள். பரமனும் ஒரு பண்டாரமாய் வடிவெடுத்தார். எல்லாப் பண்டாரங்களும் கையில் ஜெய கண்டி, சங்கு நாதம், பிடில், தபேலா, மோர்சங்கு, வீணை இப்படி ஆளுக்கொரு சங்கீதக் கருவிகள் எடுத்தார். தேவர்கள் எல்லாம் பண்டாரங்களாகவும் என் பெருமான் தலைமைப் பண்டாரமாகவும் வருகிறார். எப்படி என்றால்...

(பாட்டு)

அருணையம் பதி நோக்கி
அடியவர்கள் தான் வாறார்
வல்லாளன் மனை நோக்கி
வாறாரே சங்கமர்கள்
அரகரா அரனே என்று
அனைபேரும் தான் வாறார்
கைலாசம் தனைக் கடந்து
கடுகி வாறார் சங்கமர்கள் (66)

(வசனம்)

அந்தப் பண்டாரங்கள் எல்லாம் ஒன்று போல் அரகரா! சிவசிவா!! - என்று பாடிக் கொண்டு அருணயம்பதி போகவென்று கைலாசத்தை விட்டு, காடு வனமெல்லாந் தாண்டி பூலோகத்தில் அருணயம்பதியில் வந்து சேர்ந்தார்கள். அந்த அருணயம்பதியில் எந்த இடத்தில் வந்து சேர்ந்தார்கள் என்றால் விலைமாதர் தெருவில் வந்து சேர்ந்தார்கள்.

அந்த இடத்தில் வந்து பண்டாரங்கள் என்ன சொல்லுகிறார்கள் என்றால் "அம்மா தாய்மார்களே!..

(பாட்டு)

பசிக்குதம்மா எங்களுக்கு
பட்டினியாய் வந்தோமம்மா
புசிப்பதற்கு யேற்ற பண்டம்
போடுங்கம்மா தாய்மார்களே

தானதர்மம் கேட்குகிறார்
சங்கரன் அடியவர்கள்
அப்போது விலைமாதர்
ஆதரவாய் ஏது சொல்வார் (67)

(வசனம்)

சங்கமர்கள் யாவரும் ஒன்று போல் விலைமாதர் தெருவில் வந்து பார்த்தார். எங்கு பார்த்தாலும் ஒரே பெண்கள் கூட்டந்தான். ஆடவர் என்கிற நாமமே கிடையாது. பார்த்தார்கள் பண்டாரங்கள். ஓகோ இதுதான் விலைமாதர் தெருவாக இருக்கலாம் என்று மனதில் நினைத்து அந்தப் பெண்கள் இடத்தில் கேட்கிறார்.

"அம்மா தாய்மார்களே, நாங்கள் வெகுதூரத்தில் இருந்து வருகிறோம். ஆகையால் எங்களுக்கு ஏதாவது சாப்பிடக் கொடுங்கள்" என்றார் பண்டாரங்கள்.

உடனே பெண்கள் சொல்லுகிறார்கள். "ஐயா! பரமன் அடியவரே, நாங்கள் எல்லாம் விலைமாதர்கள். நாங்கள் வாங்கத்தான் செய்வோம். கொடுக்கிற வழக்கமே கிடையாது. அப்படி உங்களுக்கு தர்மம் வேண்டும் என்றால்...

(பாட்டு)

அரசருட மாளிகைக்கு
அடியவ்ரே சென்றீரானால்
தானதர்மம் செய்திடுவார்
தார் வேந்தர் வல்லாளன்
ஆகையினால் சங்கமரே
அரசரிடம் போங்கள் என்றார்
விலைமாதர் இவை உரைக்க
விமலனவர் ஏது சொல்வார் (68)

(வசனம்)

"ஐயா! உங்களுக்குத் தானதர்மம் வேணுமானால், எங்கள் அரசன் வல்லாள மகாராசன் அரண்மனைக்குச் சென்றால் உங்களுக்கு வேண்டிய ஆகாரம் தருவார் சென்று வாருங்கள்" என்றார்கள் பெண்கள்.

அப்பொழுது கேட்கிறார் பரமன். "அம்மா, அப்படியானால் நீங்கள் எல்லாம் விலைமாதர்கள்தானா? அம்மா! உங்களிடம் ஒரு ஆடவன் வருகிறதாய் இருந்தால் எவ்வளவு பொருள் கேட்ப்பீர்கள்" என்றான் பரமன். உடனே விலைமாதாகிய பெண் சொல்லுகிறாள். எப்படி என்றால்...

(செய்யுள்)

*பையரவணிந்த பரமனைப் போன்ற*
*பகரும் ஐயா கேள் நாங்கள்*
*பொய்யது உரையோம் வஞ்சக*
*முணறோம் புணருதலுக் கோஇருள் முறுப*
*தையலர் ஒருத்திக்காயிரம் கனகம்*
*தருவதெவ்வார் அளித்திடும் நாங்கள்*
*மெய்யுடன் மெய்யும் பொருந்திட*
*கலவி விளைத்து மன்மதன் வினை தவிர்ப்போம்*
*(69)*

(பொருள்)

ஐயா எங்களிடம் ஒரு ஆடவர் வருகிறதாய் இருந்தால் நாங்கள் வாங்கக் கூடிய பொருள் எப்படி என்றால்...

பையரவணிந்த பரமனைப் போன்ற பகரும் ஐயா கேள், நாங்கள் - "பை என்னும் விஷத்தை வைத்திருக்கும் நாகத்தை அணியக் கூடிய பரமனைப் போன்ற பரமன் அடியவர்களே! கேளுங்கள். நாங்கள், பொய்யதும் உரையோம். வஞ்சகமுணரோம்; புணருதலுக்கோர் இருள் முற்றும்.

"ஐயா! நாங்கள் பொய் பேசவே மாட்டோம். வஞ்சகம் என்கிறது எங்கள் மனதில் கொஞ்சமேனும் இருக்காது. மேலும் புணருதலுக்கோர் இருள் முற்றும் எங்களிடம் ஒரு ஆடவன் வருகிறதாய் இருந்தால் சூரியன் அஸ்தமித்து மறுநாள் சூரியன் உதயமாகிற பரியந்தம் அமர்ந்து இருக்கிறதாய் இருந்தால் - தையலர் ஒருத்திக்காயிரம் கனகம் தருவதெவ்வார் அளித்திடும் நாங்கள் - ஒரு பெண்ணுக்கு ஆயிரம் பொன் தர வேண்டும் ஒரு நாள் இரவுக்கு. அப்படி ஆயிரம் பொன் தந்தால் நாங்கள் எப்படி இருப்போம் தெரியுமா - மெய்யுடன் மெய்யும் பொருந்திடக்

கலவி -விளைத்து மன்மதன் வினை தவிர்ப்போம் அப்படி ஆயிரம் பொன் கொடுத்தால் மெய்யுடன் மெய்யும் ஈருடலும் ஓருடலாகி மன்மதன் செய்யும் உபத்திரவத்தை நீக்குவோம்" என்றார் விலைமாதர்கள்.

உடனே பரமன் சொல்லுகிறார், "அம்மா பெண்மணிகள்...

(பாட்டு)

பரமனுட அடியவர்கள்
பாவையரே பெண்கொடியே
ஈசனுட அடியவர்கள்
யேந்திழையே பெண்கொடியே
ஆயிரம் பொன் தருவதற்கு
ஆயிழையே முடியாதம்மா
ஒன்றிரண்டு பொன்னதுதான்
ஓவியமே குறைத்திடுவாய் (70)

(வசனம்)

உடனே பரமன் சொல்லுகிறார். "அம்மா நீங்கள் மற்றவர் இடத்தில் ஆயிரம் பொன் வாங்க வேண்டியதுதான். எங்களைப் பாருங்கள். பரம ஏழைகள். அதிலும் பண்டாரங்கள். எங்காவது தர்மம் எடுத்தால்தான் முடியும். அதிலேயும் இந்தக் காலத்தில் யாரம்மா தர்மம் போடுறாங்க. இப்போ நாங்கள் கொண்டு வந்து இருக்கும் பொருள்கூட முன்னால் தர்மம் எடுத்தது. சரி, அதிருக்கட்டும் அம்மா. ஒரு ஆளுக்கு ஐந்து பொன் குறைத்துக் கொள்ளுங்கள். இந்தாருங்கள் பொன்னைப் பிடியுங்கள்" என்றார் பரமன்.

உடனே பெண்கள் சொல்லுகிறார் - எப்படி என்றால்...

(பாட்டு)

பரமனுட அடியவரே
பகரக்கேளும் சில வசனம்
பொய்யது தான் பேசமாட்டோம்
பெருமானுட அடியவரே
வஞ்சகமாய் இருக்கமாட்டோம்

*வள்ளல் சிவன் அடியவரே*
*ஆகையினால் சங்கமரே*
*ஆயிரம் பொன் தர வேண்டும்* (71)

(வசனம்)

"ஐயா! பரமனுட அடியவரே, நாங்கள் முன்னால் சொல்லி இருக்கிறோம். பொய் பேசமாட்டோம் என்று. பொய் பேசினால் பெரிய பாவம்; எப்படி என்றால்...

(செய்யுள்)

*கோவதையில் நூறுவதை செய்யிலொரு வேதர்*
*வேதியரில் நூறுவதை செய்யிலொரு மாதர்*
*மாதர்களில் நூறுவதை செய்யிலொரு பாலர்*
*பாலர்களில் நூறுவதை செய்யிலொரு பொய்யே.* (72)

(பொருள்)

கோ என்றால் பசு. அப்படிப்பட்ட காராம் பசுவில், நூறு பசுவைக் கொன்றால் நான்கு வேதம் தெரிந்த ஒரு வேதியனைக் கொன்ற தோசமாகும். அப்படி வேதியரில் நூறு வேதியரை கொன்றால் ஒரு கற்புடைய பெண்ணைக் கொன்ற தோசமாகும். அப்படி நூறு கற்புடைய பெண்ணைக் கொன்றால் ஒரு அறிவு தெரியாத சிறு குழந்தையைக் கொன்ற தோசமாகும். அப்படி நூறு குழந்தைகளைக் கொன்றால் ஒரு பொய் சொன்ன பாவம் ஆகும். ஆகையால் நாங்கள் பொய் பேசமாட்டோம்" என்றார்கள் விலைமாதர்கள்.

பார்த்தார் என் பெருமான். "சரி! ஒரு பெண்ணுக்கு இந்தா ஆயிரம் பொன்" என்று வரிசையாய்ப் பதினாயிரம் பெண்ணுக்கும் கொடுக்க வேண்டிய பொன்னைக் கொடுத்து, ஒவ்வொரு பண்டாரத்தையும் கையில் பிடித்துக் கொடுத்து, பரமன் பண்டாரங்களைப் பார்த்துச் சொல்லுகிறார்.

"ஐயா! பண்டாரங்கள், ரொம்ப ஜாக்கிரதையாய் இருக்க வேண்டும்" என்று பண்டாரங்களை எச்சரித்து விட்டு, பரமன் மட்டும் தனிமையில் நிற்கிறார்.

"இனிமேல் நாம் எங்கு போக வேண்டும் என்றால்...

(பாட்டு)

அரசனுட சபை தனக்கு
ஆதிபரன் போக வேண்டும்
என்று சொல்லி ஈஸ்பரனும்
ஏகி அல்லோ அவர் வாறார்
வல்லாளன் மனை நோக்கி
வருகிறாரே என் பெருமான்
கணிகை மாதர் தெருக் கடந்து
கயிலை வாசன் அவர் வாறார் (73)

(வசனம்)

பரமன் தனிமையாக நின்று கொண்டு தன் மனதில் நினைக்கிறார். இனிமேல் அரசன் சபையைச் சென்று பார்க்க வேண்டும் என்று பரமன் வந்து கொண்டு இருக்கிறார். அப்படி வருகிறபோது சிறு பிள்ளைகள் விளையாடிக் கொண்டு இருக்கிறார்கள். அவர்களைப் பார்த்துப் பரமன் கேட்கிறார் - எப்படி என்றால்...

(பாட்டு)

கோலிவிளையாடும் குழந்தைகளே தம்பி
கொற்றவன் மனை எது சொல்லுமென்றார்
பந்து விளையாடும் பாலர்களே தம்பி, பார்
வேந்தன் மனை எது சொல்லுமென்றார். (74)

(வசனம்)

அங்கே விளையாடும் சிறு பிள்ளைகளைப் பார்த்துக் கேட்கிறார். "தம்பி! புந்து விளையாடும் பிள்ளைகளே, அரசன் வல்லாள மகாராஜன் மனை எங்கே இருக்கிறது. சொல்லுங்கள்" என்றார். அப்பொழுது அந்த பிள்ளைகள் சொல்லுகிறார்கள் - எப்படி என்றால்...

(பாட்டு)

அடியார்க்கு அடியவரே சங்கமரே ஐயா
அதோ தெரியுது பார் அன்னக்கொடி
தெரியார்க்கும் தெரியவேதான் சங்கமரே ஐயா
தெருவிலே அன்னக் கொடி தோணுது பார்

*அன்னக் கொடி நின்று அங்கே வா என்றழைக்கிறதாம்*
*அரசன் வல்லாளன் மனை தனிலே (75)*

(வசனம்)

"ஐயா! சங்கமராகிய அடியவர்களே! அரசன் வல்லாள மகாராஜன் அரண்மனை அதோ தெருவில் அன்னக்கொடி நின்று பறக்கிறது, பாருங்கள். அதுதான் அரசன் அரண்மனை. மேலும் எங்கள் அரசன் அரண்மனையில் எப்பொழுதும் கூட்டம் வந்து கொண்டே இருக்கும். அரசன் வல்லாள மகாராஜன் வருகிற பேருக்கும் தர்மம் வழங்கிக் கொண்டே இருக்கிறார். எப்படி என்றால்...

(செய்யுள்)

*வதுவை செய்யப் பொன் வேண்டி*
*வந்தவருக்கு ஆயிரம் பொன் வழங்கி பின்னும்*
*கொதுவை நிலம் பணிதி கொற்றவனே அதை மீட்டி*
*கொடு என்போர்க்கு ததியில் ஈராயிரம் பொன் தந்து*
*மகிழச் செய்தனர் பின்னங்கே முதுமறையோர் உபநயனம்*
*முடிக்கவென்றால் அதற்கும் நிதி முன்னூறு ஈவான். (76)*

(பொருள்)

வதுவை செய்யப் பொன் வேண்டி வந்தவர்க்கு ஆயிரம் பொன் வழங்கி, பின்னும் - வதுவை என்றால் கல்யாணம். ஒருவர் வந்து அரசே எனக்குக் கல்யாணம் செய்ய வேண்டும் கொஞ்சம் பொருள் வேணும் என்றால் அவருக்கு ஆயிரம் பொன் கொடுப்பார்கள். மீண்டும் கொதுவை நிலம் பணிதி கொற்றவனே அதை மீட்டி கொடு என்போர்க்கு - இன்னும் ஒருவர் வந்து அரசே என்னுடைய நிலம் வீடு மனை அதுகளை எல்லாம் ஈடு வைத்து இருக்கிறேன். அதை மீட்டுக் கொடுங்கள் என்று கேட்டால், ததியில் பொன் தந்து மகிழச் செய்தனர். பின்னங்கே...

வீடுமனை இவைகளைத் திருப்பிக் கொடுங்கள் என்று கேட்டால் அவர்களுக்கும் ஈராயிரம் பொன்னைக் கொடுத்து அவர்களை மகிழச் செய்வார். அதன் பிறகு முதுமறையோர் உபநயனம் முடிக்கவென்றால் அதற்கும் நிதி முன்னூறு ஈவான்.

இன்னுமொரு வேதியர் ஐயா பூனூல் சடங்கு செய்ய வேண்டும் என்று கேட்டால் அதற்கும் முன்னூறு பொன் கொடுத்து அனுப்புவார்கள். இப்படி வல்லாள மகாராஜன் இடைவிடாது தர்மம் செய்து கொண்டு இருக்கிறார். அந்த நேரத்தில்...

(பாட்டு)

*ஆராய்ச்சி மணியதையும்*
*ஆதிபரன் அடிக்குகிறார்*
*ஆராய்ச்சி மணி அடிபடவும்*
*அறிந்தாரே வல்லாளன்*
*பார்த்து வர வேணுமென்று*
*பாரரசர் தான் வாறார்*
*அறிந்து வர வேணுமென்று*
*அரசனவர் தான் வாரார்.* (77)

(வசனம்)

அங்கே வல்லாள மகாராஜன் தர்மம் செய்கிறபோது ஆராய்ச்சி மணி அடிபடவும் பார்த்தார் வல்லாள மகாராஜன். இந்த நேரத்தில் ஆராய்ச்சி மணி அடிபடுகிறது. சென்று பார்த்து வருவோம் என்று வல்லாள மகாராஜன் ஆசார வாசலில் சென்று பார்த்தார். அங்கே பண்டாரக் கோலத்தில் நிற்கும் பரமனைக் கண்டார். உடனே வல்லாள மகாராஜன்

(பாட்டு)

*ஆதிபரன் பாதமதை*
*அரசனவர் வணங்குகிறார்*
*மகாதேவன் முகம் பார்த்து*
*மன்னவனும் ஏதுசொல்வான்*
*என்னுடைய மாளிகைக்கு*
*எழுந்தருளும் காரணமேன்*
*என்று சொல்லி வல்லாளன்*
*ஈஸ்பரனை அழைத்து வாறார்* (78)

(வசனம்)

வல்லாளன் ஆசாரவாசலில் சென்று பார்க்கிறபோது பரமனைக் கண்டு பண்டாரந்தான் என்று நினைத்து கைலாகு

கொடுத்து, தன் கொலுச்சாலை வந்து ஒரு தர்ப்பாசனத்தில் அமரும்படியாகச் செய்து அரசனும் ஆசனத்தில் சென்று அமர்ந்து கேட்கிறார். "ஐயா! பரமன், அடியவர்களாகிய நீங்கள் என்னை ஒரு பொருட்டாக நினைத்து இங்கு வர வேண்டிய விசையம் என்ன. அதைச் சொல்லுங்கள்" என்றார் வல்லாளன்.

உடனே பரமன் சொல்லுகிறார்: "அப்பா வல்லாளா! நீயும் உன் செங்கோலும் உன் குடிபடைகளும் உன் மனைவி மார்களும் யாவரும் சவுக்கியமாக இருக்கின்றீர்களா. சரி! இவ்வளவு தர்மம் செய்கிறாயே எதற்கப்பா? முப்பத்திரண்டு தர்மமும் செய்கிறதாய்க் கேள்விப்பட்டேன். அது எதற்காக வேண்டி செய்கிறாய்" என்றார் பரமன். உடனே வல்லாள மகாராஜன் சொல்லுகிறார்.

(பாட்டு)

மதலை ஒன்று இல்லாமல்
மாதானம் செய்யுகிறேன்
ஆண் குழந்தை இல்லாமல்
அன்னதானம் செய்யுகிறேன்
சந்ததிதான் வேணுமென்று
தானதர்மம் செய்யுகிறேன்
என்று சொல்லி வல்லாளன்
ஈஸ்பரனை வணங்குகிறான் (79)

(வசனம்)

"ஐயா! எனக்கு மல்லம்மா சல்லம்மா என்று இரண்டு பெண்களைக் கல்யாணம் செய்தும் குழந்தை கிடையாது. ஆகையால் முப்பத்திரண்டு தர்மம் செய்தால் பரமனுட அருளால் குழந்தை கிடைக்குமென்று இந்தத் தர்மத்தைச் செய்து வருகிறேன்" என்றார் மன்னன்.

அப்போது பரமன் சொல்லுகிறார். "அப்பா! வல்லாளா! நீ கூடிய சீக்கிரம் புத்திரப் பேறு பெறுவாய். அரசே நான் உன்னைத் தேடி வந்த விபரம் என்ன தெரியுமா. நீ நமக்கு ஒரு உதவி செய்ய வேண்டும். என்ன உதவி தெரியுமா. எனக்கு ரொம்ப வயதாகி விட்டது. ஆகையால் நமக்கு உதவி செய்ய

ஒரு ஆள் தேவை. அதற்காகத்தான் உன்னைத் தேடி வந்தேன். என்ன, அப்படி ஒரு ஆள் பார்த்து தர முடியுமா? தர முடியாதா? தர முடியாதென்றால் சொல்லு. நான் இப்பொழுதே சென்று விடுகிறேன்" என்றார் பரமன்.

உடனே மன்னன் சொல்லுகிறான். "ஐயா! பரமன் அடியவர்களே!...

(பாட்டு)

ஈஸ்பரன் அடியவரே
இல்லை என்று சொல்வதில்லை
உதவி செய்ய வேணுமானால்
ஒரு பாலகனை அனுப்பிடுறேன்
என்று சொல்ல மன்னவனும்
ஏது சொல்வார் பண்டாரம் (80)

(வசனம்)

"ஐயா! ஈசன் அடியவரே! இல்லை என்று ஒரு நாளும் சொல்லவே மாட்டேன். உங்களுக்கு, உங்கள் சடைவு தீர வேலை செய்யவென்றால் பத்து பதினாறு வயதுடைய ஒரு பாலகனை அனுப்பி வைக்கிறேன்" என்றார் மன்னன்.

பரமன் கேட்கிறார். "அப்பா வல்லாளா! நான் சொல்வதைக் கேள். ஒரு ஆடவனுக்கு ஒரு ஆடவன் ஊழியம் செய்து கொள்ளவே முடியாது. ஆகையால் ஒரு பெண்ணிருந்தால் அனுப்பு, அது போதும்" என்றார் பரமன்.

உடனே அரசன் சொல்லுகிறார். "ஐயா பரமன்! அடியவர்கள்...

(பாட்டு)

மங்கையரைத் தான் பார்த்து
மாலை மணம் முடித்து வைப்பேன்
கன்னியரை தான் பார்த்து
கல்யாணம் செய்து வைப்பேன்
ஆயிழையைக் கொண்டு வந்து
அடிமை வேலை செய்ய வைப்பேன்
மன்னவரும் இவை உரைக்க

*மகா தேவன் ஏது சொல்வார்* *(81)*

(வசனம்)

"ஐயா! நீங்கள் ஒரு பெண்ணைப் பார்த்து அனுப்பும்படி சொல்லுகின்றீர்கள். ஐயா! அது வேண்டாம். நான் ஒரு பெண்ணைக் கொண்டு வந்து இதே இடத்தில் உங்களுக்கு கல்யாணமே செய்து வைத்து விடுகிறேன். அப்படி கல்யாணம் செய்து வைத்தால் உங்களை விட்டுப் பிரியமாட்டாள். அப்படியே செய்வோம்" என்றார் அரசன்.

உடனே பரமன் சொல்லுகிறார். "அரசே கல்யாணம் என்று ரொம்ப மெதுவாய்ச் சொல்லி விட்டாய். அந்தக் கல்யாணத்தை செய்து விட்டு ஒவ்வொருத்தன் படும் பாட்டை பார்த்தால் ஏன் உன்னையே வைத்துக் கொள்வோம். நீ கல்யாணம் செய்யாமல் இருந்தால் உனக்கு இவ்வளவு கவலை வருமா? அப்பா! கல்யாணம் என்றால் நான் சொல்வதைக் கேள். எப்படி என்றால்...

(செய்யுள்)

*நிஸ்ட்டையிலே இருந்து மனத்*
*துறவடைந்த பெரியோர்கள்*
*நிமலன்றாளைக் காம வேட்கையிலே*
*மதிமயங்கி சிறுவருக்குப் பெண் பேசி*
*விரும்பித் தாலி கட்டையிலே*
*இருந்து நடுக்கட்டையிலே*
*கிடந்து மட்டும் கவலைதானே.* (82)

(பொருள்)

நிஸ்ட்டையிலே இருந்து மனத்துற வடைந்த பெரியோர்கள், நிஸ்ட்டை என்றால் தவம். அப்படித் தவம் செய்யக்கூடிய பெரிய முனிவர்களும் நிமலன்றாளை காமவேட்கையிலே மதி மயங்கி சிறுவருக்குப் பெண் பேசி - அப்படிப் பெரிய முனிவர்களும் மன்மதன் செய்யும் கொடுமையில் சிறுவர்களுக்குப் பெண் பேசி விரும்பித் தாலி கட்டையிலே - அப்படியே ஒரு பெண்ணைப் பேசி, தாலி கட்டையிலே மாப்பிள்ளையையும் பெண்ணையும் கிழக்கு முகமாய் அமர்த்தி மாப்பிள்ளை கையில் தாலியை கொடுத்து கட்டச் சொல்வார்கள்.

அப்படி அவன் தாலி கட்டையிலே அவன் தாலி கட்டுறது ஒரு கட்டையில் இருந்துதான் தாலி கட்டுகிறான்.

அன்று பிடித்த கவலை அவனை விட்டு எப்போ நீங்கிறது தெரியுமா? தொடுத்து நடுக்கட்டையிலே கிடத்து மட்டும் கவலைதானே - அவன் தாலி கட்டுகிறபோது பிடித்த கவலை அவன் இறந்து அவனை நான்கு பேர் சுமந்து சுடுகாட்டில் - அன்று தாலி கட்டுகிறபோது இருந்தானே அதேமாதிரி கட்டை அடுக்கி அதில் வைத்து தீக் கொழுத்துகிற போதுதான் அந்தக் கவலை நீங்கும்.

ஆகையால் வல்லாள மகாராஜனே இன்னும் சொல்லுகிறேன். ஒரு மனிதன் பிறந்து வாழ்ந்து சாகிறபோது அவனுக்கு மூன்று சங்கு இருக்கிறது. எப்படி...

(செய்யுள்)

முதல் சங்கு அமுதளிக்கும்
மொய்குழல் ஆசை நடுச்சங்கு
நல்விலங்கு பூட்டும் கடைச்சங்கு
ஊதினது அம்மட்டோ இம்மட்டோ
நாம்போது வாழ்ந்த நலம் (83)

(பொருள்)

முதல் சங்கு அமுதளிக்கும் - ஒரு வீட்டில் ஒரு குழந்தை பிறந்தால் உடனே சேனை பால் ஊற்றுவார்கள். சேனை பால் என்றால் கொஞ்சம் கருப்புக்கட்டியை தண்ணீரில் கரைத்து ஒரு சிறிய சங்கில் வைத்து பிறந்த குழந்தைக்கு ஊற்றுவார்கள். அதுதான் முதல் சங்கு. - மொய் குழல் ஆசை நடுச்சங்கு நல் விலங்கு பூட்டும். அந்தப் பையன் வளர்ந்து பெரியவன் ஆன உடன் ஒரு பெண்ணைப் பார்த்துக் கல்யாணம் செய்து வைப்பார்கள். அன்றைக்கு ஒரு சங்கு ஊதுவார்கள். அந்தக் காலத்தில் இந்த காலம் மாதிரி கல்யாண வீட்டுக்கு மேளம், பீக்கர் இதெல்லாம் கிடையாது. ஆகையால் கல்யாணத்திற்கு வருகிறவர்கள், ஆளுக்கு ஒரு சங்கு கொண்டு வருவார்கள். மணமகன் மணமகள் கழுத்தில் தாலி கட்டுகிறபோது தும்மல் தடங்கல் வேறு அபசகுனம் நேர்ந்து விடக் கூடாது என்று

யாவரும் ஒன்று போல் சங்கு எடுத்து ஊதுவார்கள். அந்தச் சங்குச் சத்தத்தோடு தாலியைக் கட்டி விடுவான். அதுதான் நடுச்சங்கு.

மூன்றாவது ஒரு சங்கு இருக்கிறது. அது எப்படி என்றால், இவன் அந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்து பந்தபாசச் சூழலிலே உழன்று கஸ்டப்பட்டு, கடைசியில் மண்டையை போட்டு விடுவான். அப்போ அவனை எடுத்து சுமந்து சுடுகாட்டுக்குக் கொண்டு வருவார்கள். அப்பொழுது தான் பெற்ற மகன் கொள்ளிக் குடம் சுமந்து வர (மூத்த மகன்) **குடிமகன்** அப்பொழுது ஒரு சங்கு ஊதுவான். அதுதான் மூன்றாவது சங்கு. அந்தச் சங்கோடு அவன் வாழ்வும் முடியும்.

அப்பா! வல்லாள மகாராஜா! ஆகையால் அந்த கஸ்ட்டம் நமக்கு வேண்டாம். இன்றைக்கு ராத்திரி முப்பது நாளிகைக்கும் ஒரு பெண் இருந்தால் அனுப்பு - என்றார் பரமன். அப்பொழுது அரசன்,

(பாட்டு)

அப்படியே நல்லதென்று
அரசன் வல்லாள மகாராஜன்
முப்பது நாளிகையும்
மொய்குழலை அனுப்பி வைப்பேன்
என்று சொல்ல வல்லாளன்
ஏது சொல்வார் என் பெருமான் (84)

(வசனம்)

"பரமன் அடியவரே! அப்படி ஆனால் இன்றைக்கு ராத்திரி முப்பது நாளிகைக்கும் ஒரு பெண் அனுப்பி வைக்கிறேன். நீங்கள் எந்த இடத்தில் அமர்ந்து இருப்பீர்கள். அந்த இடத்திற்கு வரும்படியாய்ச் சொல்லுகிறேன்" என்றார் அரசன். உடனே பரமன் சொல்லுகிறார். "ஊருக்கு வடக்கே ஆத்தி மரத்தடியில் அமர்ந்திருப்பேன். கூடிய சீக்கிரம் வரச் சொல்" என்றார். "சரி! அப்படியே வரச் சொல்லுகிறேன்" என்று பரமனை அனுப்பி வைத்து விட்டு, உடனே அரசன் சொல்லுகிறார். எப்படி என்றால்...

(பாட்டு)

தூதுவனை முகம் பார்த்து
சொல்லுகிறார் வல்லாளன்
வாருமையா தூதுவனே!
வார்த்தை சொல்லக் கேளுமையா
தாதியர்கள் வீதி சென்று
தையலரை அழைத்து வா போ
கணிகையர் வீதி சென்று
கன்னிகையை அழைத்து வா போ (85)

(வசனம்)

"ஐயா! தூதுவன் கணிகை மாதர் வீதியில் சென்று நான் சொன்னதாக ஒரு பெண்ணை அழைத்து வாருங்கள்" என்றார் அரசன். இந்த வார்த்தையைக் கேட்ட உடன் தூதுவன் சென்று கணிகையர் வீட்டில் சென்று கதவைத் தட்டினான்.

"அம்மா! பெண்மணிகள்! அரசன் உத்தரவு. ஒரு பெண் வரவேண்டுமாம்" என்றான்.

உடனே அந்தப் பெண் சொல்லுகிறாள். "ஐயா! இன்றைக்கு ஒரு ஆடவனுக்கு அடிமை ஆகிவிட்டேன். ஆகையால் என்னால் வர முடியாது. அடுத்த வீட்டைச் சென்று பார்" என்றாள்.

உடனே தூதுவன் அடுத்த வீட்டில் சென்று பார்த்தான். அங்கும் ஒரு ஆடவன் இருக்கிறான். இப்படியே பதினாயிரம் வீட்டிலேயும் பதினாயிரம் ஆடவர் அமர்ந்திருக்கிறார். உடனே தூதுவன் அரசனிடம் வந்து சொல்லுகிறான்.

(பாட்டு)

அருணையம் பதி ஆளும்
அரசே நீர் கேளுமையா
ஆயிழைமார் வீடதிலே
ஆடவர்கள் இருக்கிறார்கள்
பதினாயிரம் வீடதிலும்
பண்டாரக் கூட்டமையா
என்னு சொல்லத் தூதுவனும்
எது சொல்வார் வல்லாளன் (86)

(வசனம்)

தூதுவன் அரசனிடத்தில் வந்து சொல்லுகிறான். "அரசே! நம் கணிமாதர் தெருவில் எல்லா வீட்டிலும் ஆடவர்கள் வந்து இருக்கிறார்கள். ஒரு பெண்ணும் எடுக்க முடியாது" என்றான் தூதுவன்.

இந்த வார்த்தையைக் கேட்ட அரசன் ரொம்பக் கவலையோடு மீந்திரியை அழைத்து, "மந்திரி! நீங்களே சென்று ஒரு பெண்ணை அழைத்து வாருங்கள்" என்றார். உடனே மந்திரியும் எழுந்து வருகிறார்.

(பாட்டு)

*மன்னனுட சொல்படியே*
*மந்திரியும் அவர் வாறார்*
*மங்கையர்கள் தெருவதிலே*
*மந்திரியும் வந்து சேர்ந்தார்*
*மங்கையர் முகம் பார்த்து*
*மந்திரியும் ஏது சொல்வர்* (87)

(வசனம்)

உடனே மந்திரியும் எழுந்து விலைமாதர் தெருவில் வந்து முதலாவது வீட்டில் சென்று தட்டினான். "அம்மா இங்கு யாரம்மா இருக்கிறார்கள்? அரசன் சொன்னார். இன்றைக்கு ராத்திரி முப்பது நாளிகைக்கும் ஒரு பெண் தேவை. ஒரு பெண் வாருங்கள்" என்றார் மந்திரி.

உடனே அந்தப் பெண்மணி சொல்லுகிறாள். "ஐயா! இன்றைக்கு ஒரு ஆடவன் இடத்தில் பொன் வாங்கி விட்டேன். ஆகையால் அடுத்த வீட்டில் பாருங்கள்" என்றாள்.

உடனே மந்திரி அடுத்த வீட்டில் சென்று பார்த்தார். அங்கும் ஒரு ஆடவன் இருந்தான். இப்படி பதினாயிரம் வீட்டிலும் பதினாயிரம் ஆடவர்கள் இருக்கிறதைக் கண்டார். உடனே ரொம்பக் கவலையோடு அரசன் இடத்தில் வந்து சொல்லுகிறான்.

"அரசே இன்றைக்குக் கணிகையர் வீதியில் எங்கு பார்த்தாலும்...

(பாட்டு)

*பார்த்த பார்த்த இடங்கள் எல்லாம்*
*பண்டாரக் கூட்டமையா*
*சென்ற சென்ற இடங்கள் எல்லாம்*
*சிவசங்கமராய் இருக்குகிறார்*
*எங்கு சென்று பார்த்தாலும்*
*ஈசனுட அடியவர்கள்*
*கணிகை மாதர் வீடதிலே*
*கணநாதர் கூட்டமையா* (88)

(வசனம்)

மந்திரியானவர் அரசனிடத்தில் வந்து சொல்லுகிறான்.

"அரசே நம் விலைமாதர் தெருவில் எந்த வீட்டிலும் ஒரே பண்டாரக் கூட்டம். பரமன் அடியவர்கள் அமர்ந்திருக்கிறார்கள். ஆகையால் ஒரு பெண்ணும் எடுக்க முடியாது" என்றதுதான் அரசன் முகம் வாடினார்; ஏங்கினார்; பரிதவித்தார். "இதும் பரமன் சோதனையா?" என்று நினைக்கிறார்.

"அவன் அவன் தொழிலை அவன் அவனே பார்க்க வேண்டும். இனி நாமே சென்று பார்த்து வருவோம். **உடையவன் இல்லாதது ஒரு முழம் கட்டை**[1] என்பார்கள். ஆகையால் நாமே சென்று பார்த்து வருவோம்" என்று அரசன் எழுந்து வருகிறார்.

(அ-கு) 1. பழமொழி

(பாட்டு)

*மனக்கவலை பெரிதாகி*
*மன்னனான வல்லாளன்*
*கணிகை மாதர் தெரு நோக்கி*
*காவலன் தான் வாறார்*
*மங்கையவர்கள் வீதியிலே*
*மன்னவனும் வந்து சேர்ந்தார்*
*ஆயினடிமார் வீடதிலே*
*அரசனவர் வந்து சேர்ந்தார்*

(வசனம்)

அரசன் வல்லாள மகாராஜன் எழுந்து கணிகையர் வீதியில் சென்று பார்த்தார். ஒரு பெண்களும் தெரியவில்லை. அரசனைக் கண்டவுடன் "வாருங்கள்! வாருங்கள்!!" என்று வரவேற்கும் பெண்கள் அன்றைக்கு ஒரு பெண்களையும் காணவில்லை. அதே பெரிய கவலை.

"சரி! இனி நாமே சென்று பார்ப்போம்" என்று முதலாவது வீட்டில் சென்று தட்டினார்.

அந்த வீட்டில் இருக்கும் பெண் ஓடி வந்து "அரசே இன்றைக்கு என்னால் வரமுடியாது. ஒரு ஆடவருக்கு அடிமை ஆகி விட்டேன்" என்றார்.

உடனே அரசன் அடுத்த வீட்டில் சென்று தட்டினார். இதைக் கேட்ட பண்டாரம், சங்கு நாதத்தை எடுத்து வாயில் கொடுத்து அரகரபம் என்று ஊதினார்.

இதைக் கேட்ட அரசன் ஓகோ இங்கும் ஒரு ஆடவன் இருக்கிறார் என்று அடுத்த வீட்டில் சென்று, "அம்மா" என்றார். இதை அறிந்த பண்டாரம் ஜெய கண்டிகையை எடுத்து அடித்தார். அதை பார்த்த அரசன் அடுத்த வீட்டில் சென்றார். அங்கு இருக்கும் பண்டாரம் அதை அறிந்து, "அரகரசம்போ சங்கர மகா தேவா" என்றார்.

அதைப் பார்த்த வல்லாளன் ஓகோ! இந்த வீட்டிலும் ஒரு ஆடவன் இருக்கிறார் என்று அடுத்த வீட்டில் சென்று கதவைத் தட்டினார். "அம்மா நான்தான் அரசன் அழைக்கிறேன்" என்றார்.

உடனே அந்த வீட்டுப் பெண், அரசன் என்றவுடன் திடீரென்று எழுந்தாள். அதைப் பார்த்த பண்டாரம் அவள் கையைச் சென்று பிடித்தான். "பெண்ணே, இதென்ன பெரிய தொந்தரவு. என் காசைக் கொடு; நான் வெளியில் போக வேண்டும்" என்று கடுகடுத்துப் பேசினான்.

இதைப் பார்த்தார் வல்லாளன். "ஐயா! அந்தப் பெண் பேரில் ஒரு குற்றமும் கிடையாது. என் பேரில்தான் குற்றம்.

ஆகையால் மன்னித்து கொள்ளுங்கள் ஐயா! நான் வருகிறேன்" என்று பதினாயிரம் வீட்டிலும் சென்று பார்த்தார். இந்தப் பதினாயிரம் வீட்டிலும் எங்கு பார்த்தாலும் சங்கு நாதத் தொனியும், ஜெயகண்டி வாத்தியமும், வீணை ராகமும் பண்டாரங்கள் ஆடல் பாடலும் - இவைகளை எல்லாம் பார்த்தார் அரசர்.

"ஐயோ! இதுவும் பரம சோதனை தானே" என்று வீதியில் நின்று கண்ணீராய் உதிர்த்துகிறார். எப்படி என்றால்...

(பாட்டு)

வாடாத முகங்கள் எல்லாம்
வாடி முகம் கோடுகிறார்
கோடாத மதிமுகந்தான்
கோடி முகம் வாடுகிறார்
என் தலையின் எழுத்திதுவோ
ஈசனுட சோதனையோ
அரசன் அந்த வல்லாளன்
அழுதழுது முகம் சோர்ந்து (90)

(வசனம்)

அரசன் வல்லாள மகாராஜன் மனம் சோர்ந்து முகம் வாடிக் கவலையோடு சொல்லுகிறார். "அம்மா! இங்கு இருக்கும் பெண்மணிகளே! தாய்மார்களே நான் சொல்வதைக் கேளுங்கள். எப்படி என்றால்...

(செய்யுள்)

கரிபரி உடனும் வேண்டேன் கனகமும் தருவேன் முத்து
சொரிகிய சிவிகை ஈய்வேன் தொல்லுலகாள வைப்பேன்
அரிய செங்கோலும் நல்கி அவர்க்கு நான் பணியும் செய்வேன்
பெரியவர் விரதம் தீர்த்தால் பெற்றதாய் எனக்காம் என்றார். (91)

(பொருள்)

கரிபரி உடனும் வேண்டேன்; கனகமும் தருவேன் முத்து. கரி என்றால் யானை; பரி என்றால் குதிரை. இந்த யானை குதிரை படைகளும் எனக்கு வேண்டாம். அது

மட்டுமல்ல, கனகமும் தருவேன் முத்து. என்னிடத்தில் இருக்கும் கனகம் நவரத்தின முத்துகள் எல்லாம் கொடுத்து சொருகிய சிவிகை ஈய்வேன் தொல்லுலகாள வைப்பேன். நான் அமர்ந்திருக்கும் சிம்மாசனத்தை அவர்களுக்குக் கொடுத்து என் உலகத்தை ஆளும்படியாக வைப்பேன். அரிய செங்கோலும் நல்கி அவர்க்கு நான் பணியும் செய்வேன். என் கையில் பிடித்திருக்கும் செங்கோலை அவர்களுக்குக் கொடுத்து நான் அவர்களுககு ஊழிய வேலையும் செய்வேன். அவர்கள் எனக்கு ஒரு உதவி மட்டும் செய்ய வேண்டும்.

என்ன உதவி என்றால் **பெரியவர் விரதம் தீர்த்தால் பெற்ற தாய் எனக்காமென்றார்.**[1] இப்போ வந்திருக்கும் பரமன் அடியவராகிய பெரியவர் விரதத்தை எந்த பெண்கள் சென்று தீர்த்து வைத்தாலும் அவர்கள்தான் என்னைப் பெற்ற தாயாகும்" என்றார் வல்லாளன்.

அப்படி சொல்லியும் அந்த இடத்தில்...

(அ-கு) 1. பழமொழி

(பாட்டு)

*ஏனென்றும் கேட்பாரில்லை*
*எதிர்த்து மொழி சொல்வாரில்லை*
*வல்லாளன் சொன்ன வார்த்தை*
*வாணுதல்மர் காதில் கேட்டு*
*அரசனுட முகம் பார்த்து*
*ஆயிழைமார் ஏது சொல்வார்*
*வாருமையா மன்னவரே*
*வார்த்தை சொல்லக் கேளுமையா* (92)

(வசனம்)

இப்படி மன்னன் சொல்கிறபோது அந்தத் தெருவில் ஏன் என்று கேட்பாரே கிடையாது. அரசன் சோகத்தோடு அமர்ந்திருக்கும்போது மற்ற கணிகைமாதர் சொல்லுகிறார்கள். "அரசே! எங்கள் பேரில் ஒரு குற்றமும் இல்லை. அரசே நீங்கள் இட்ட கட்டளை. அன்று எங்களைக் கொண்டு வைக்கிறபோது, ஒரு ஆடவன் இடத்தில் ஆயிரம் பொன்

வாங்க வேண்டும். அந்தப் பொன் வாங்கின ஆடவர் இடத்தில் இரவு முப்பது நாளிகையும் அமர்ந்திருக்க வேண்டும். அதே நேரத்தில் வேறு ஆடவர் வந்து ஆயிரத்து ஐந்து பொன் தருகிறேன் என்றாலும் கை நீட்டி வாங்க கூடாது என்று நீங்கள்தான் சொன்னீர்கள். அதன்படிதான் நடக்கிறோம் அரசே. உங்கள் சொல்லை மீறி நாங்கள் நடக்கவில்லை" என்றார்கள் விலைமாதர்கள்.

அரசன் பார்த்தார். "பெண்களே உங்கள் பேரில் எள்ளளவும் குற்றமில்லை. இது என் தலையில் எழுத்து; வருகிறேன் அம்மா" என்று மன்னன்...

(பாட்டு)

*அந்தத் தெருதான் கடந்து*
*அரசன் வல்லாள மகாராஜன்*
*விலைமாதர் தெரு கடந்து*
*வேந்தனவர்தான் வாறார்*
*தன்னுடைய மனை நோக்கி*
*தாரரசன் தான் வாறார்*
*மனக் கவலை பெரிதாகி*
*மன்னவனும் தான் வாறார்.* (93)

(வசனம்)

உடனே, விலைமாதர் தெருவில் ஒரு பெண்ணும் வர முடியாது என்றதுதான் - அரசனுக்கு ரொம்பக் கவலை. ரொம்ப கவலையோடு முட்டினார்; மோதினார்; புலம்பினார்; தடுமாறினார். "என்ன செய்கிறது. இனிமேல் நம் மாளிகைக்குச் செல்வோம்" என்று தள்ளாடித் தள்ளாடி நடந்து வருகிறார். வருகிறபோது நினைக்கிறார். எப்படி என்றால்..

(பாட்டு)

*பெண் கொடுக்க முடியாமல்*
*பேருலகில் இருக்கலாமோ*
*மாண்டு நாம் மடிந்திடுவோம்*
*மறலி லோகம் சேர்ந்திடுவோம்*
*செத்து மடிந்திடலாம்*
*சிவலோகம் சேர்ந்திடலாம்*

*என்று சொல்லி வல்லாளன்*
*எண்ணாதும் எண்ணுகிறார்* (94)

(வசனம்)

மன்னராகிய வல்லாளன் தன் மனை நோக்கி வருகிற போது நினைக்கிறார்.

"ஒரு பெண் கொடுக்க முடியாத நான் இந்த உலகத்தில் இருந்து என்ன பிரயோசனம். இதை விடத் தற்கொலை செய்து இறந்துவிடுவதே மேல்" என்று நினைந்தார். மீண்டும் யோசிக்கிறார்.

"நான் மாண்டு போகிறதாய் இருந்தால் உலகம் என்ன பேசும். இந்த மன்னன் கேட்ட பொருள் கொடுக்க முடியாத படி இறந்து போனான். இவனுக்கென்ன தர்மம், இவனுக் கென்ன தர்மக்கொடி என்று நம்மைப் பலவாறாகப் பேசுவார்கள். அதும் ரொம்பக் கேவலம். ஆகையால் வருவதெல்லாம் வரட்டும் - என்று ரொம்ப மனக்கவலை யோடு தன் அரண்மனையில் வந்து பஞ்சணையில் கவிழ் முகமாகச் சென்று படுத்தார்.

அதை, பக்கத்தில் பார்த்துக்கொண்டு இருந்த அக்காள் தங்கையாகிய மல்லம்மா தேவி, சல்லம்மா தேவி இரண்டு பெண்களும் தங்கள் நாதன் படுத்திருக்கும் சாயலைப் பார்த்து ஓடோடியும் சென்று ஒருத்தி, தலைப்பக்கத்திலும் ஒருத்தி கால் பக்கத்திலும் சென்று அமர்ந்து நாதன் பாதத்தை வருடிக் கேட்கிறார்...

(பாட்டு)

*நாதனுட முகம் பார்த்து*
*நன்னுதல்மார் ஏது சொல்வர்*
*வேகம் என்ன கோபம் என்ன*
*விபரமதைச் சொல்ல வேணும்*
*கவலையது வருவதென்ன*
*என் கணவரே சொல்ல வேணும்*
*மங்கையர்கள் இவையுரைக்க*
*மன்னவனும் ஏது சொல்வார்* (95)

(வசனம்)

இரண்டு பெண்களும் நாதன் பக்கத்தில் அமர்ந்து கேட்கிறார்.

"நாதா! எங்களைப் பாருங்கள். ஏன் இப்படி அமர்ந்து இருக்கிறீர்கள்? மாற்றான் படை எடுத்தானா அல்லது உங்கள் செங்கோல் முறை பிசகி விட்டதா? ஏன் இப்படிக் கவலையோடு அமர்ந்து இருக்கிறீர்கள்? சொல்லுங்கள் நாதா?" என்று வணங்கினர்.

உடனே அரசன் சொல்லுகிறார். "போங்கடி! என்னை ஒருத்தியும் தொந்தரவு செய்ய வேண்டாம். பேசாமல் சென்று விடுங்கள். என் கவலை என்னோடு இருக்கட்டும். இந்தக் கவலை யாரிடத்தில் சொன்னாலும் அந்தக் கவலை ஒரு போதும் நிறைவேறாது. போங்கடி அப்புறம்" என்று கோபத்தோடு பேசினார்.

அதைப் பார்த்தார் பெண்கள்...

(பாட்டு)

நாதனுட பாதமதில்
நன்னுதல்மார் வணங்குகிறார்
என்ன என்ன கவலையது
எங்களிடம் சொல்ல வேணும்
கவலை வந்த விபரமதை
கன்னியிடம் சொல்ல வேணும்
என்று கேட்ட பெண்களுக்கு
ஏது சொல்வார் மன்னவனும் (96)

(வசனம்)

உடனே பெண் கொடிமார் இரண்டு பேரும் நாதனை வணங்கி கேட்க்கிறார்.

"நாதா! உங்களுக்கு என்ன கவலை? அந்தக் கவலையைச் சொல்லுங்கள். நாங்களும் எங்களால் இயன்ற உதவி செய்கிறோம். நாதா! நீங்கள் இப்படிக் கவலையோடு அமர்ந்திருந்தால் எங்கள் மனம் என்ன பாடுபடும். சொல்லுங்கள் நாதா!" என்று வணங்கினர்.

உடனே அரசன் சொல்லுகிறார். "பெண்கள்! என் மனதில் இருக்கும் கவலையை உங்களிடம் சொல்லி என்ன பிரயோசனம் சொன்னாலும் கவலைதான். சொல்லாமல் இருந்தாலும் கவலைதான். சொல்லி என்ன பிரயோசனம். சரி நீங்கள் கேட்கிறபடியால் சொல்லுகிறேன். எப்படி என்றால் இன்றைக்கு ஒரு பரமன் அடியவர் வந்து, அரசே! ஒரு பெண் வேணும் என்றார். இரவு முப்பது நாளிகைக்கும் நானும் நம்மிடத்தில் பதினாயிரம் கணிகையர்கள் இருக்கிறார்கள். அதில் ஒரு பெண்ணை அனுப்பி வைக்கலாம் என்று, சரி! அனுப்பி வைக்கிறேன் என்று சொன்னேன்.

அதன்படி பெண் அனுப்ப வேண்டும் என்று தாதிமார் வீட்டில் சென்று பார்த்தேன். அங்கே பதினாயிரம் வீட்டிலும் பதினாயிரம் ஆடவர்கள் அமர்ந்து இருக்கிறார். பெண் கேட்ட பரமன் அடியவர்க்கு பெண் கொடுக்க முடியவில்லை. அப்படி இன்னும் கொஞ்ச நேரத்திற்குள் பெண் அனுப்ப வில்லை என்றால் அந்த அடியவர் வந்து 'வல்லாள மகாராஜா' பெண் எங்கே? ஒரு பெண் கொடுக்க முடியாத உனக்கு தர்மக் கொடி எதற்கு. தர்மக் கொடியை அறுத்து கீழே தள்ளு' மென்பார். பெண்ணே! தர்மக்கொடியை அறுத்துக் கீழே தள்ளு, என்ற பிறகு நாம் இவ்வளவு காலமும் செய்த தர்மம் வீணாகி விடுமே" என்ற கவலைதான் என்றார் வல்லாளன்.

(பாட்டு)

இந்த வார்த்தை காதில் கேட்டு
எழுந்திருந்தாள் பெண்கொடியாள்
சல்லம்மாதேவி அவள்
தன் நாதனுட முகம் பார்த்து
மன்னவரே மணவாளா
வார்த்தை சொல்ல கேளுமையா
உங்களுக்கு மனமிருந்தால்
உத்தமியாள் சென்று வாறேன் (97)

(வசனம்)

பெண் அனுப்ப முடியாமல் போய்விட்டது என்றதுதான், உடனே எழுந்தாள் சல்லம்மா தேவி. நாதனை

பார்த்துக் கேட்கிறாள். "நாதா நான் சொல்வதைத் தயவு செய்து கேளுங்கள். உலகத்தில் தன் கணவனுக்குக் கவலை வருகிறபோது அந்தக் கவலை வரவிடாதபடி காப்பவள்தான் கற்புடைய பெண். அதே மாதிரி நாதா உங்களுக்கு மனம் இருந்தால் சொல்லுங்கள். நானே சென்று அந்தப் பரமன் அடியவர் விரதத்தைப் பூர்த்தி செய்து வருகிறேன்" என்றாள்.

இந்த வார்த்தையைக் கேட்ட வல்லாளன் திடீர் என்று எழுந்தார். மனைவியை இருகரம் கொண்டு எடுத்தார். தன் மடியில் அமர்த்தினார். "பெண்ணே உண்மையாகத்தான் சொல்கிறாயா. கண்ணே நீ மட்டும் பரம அடியவர் விரதத்தை முடித்து வந்தாயே யானால் நீதான் எனக்கு உயிர் கொடுத்த தெய்வம். பெண்ணே! சென்று வருவாயா அல்லது என்னை ஏமாற்றி விடுவாயா. சொல் கண்ணே! நீதான் என் கண்கண்ட தெய்வம்" என்று புகழ்ந்தார்.

உடனே சல்லம்மா தேவி சொல்லுகிறாள். "நாதா! கவலையை விடுங்கள். இதோ நான் சென்று வருகிறேன். நாதா அவர் எந்த இடத்தில் இருப்பதாகச் சொன்னார். நம் ஊருக்கு வடபுறத்தில் இருக்கும் ஆத்தி மரத்தடியில் இருப்பதாகவா சொன்னார்கள். அப்படியானால் சென்று வருகிறேன்" என்று கங்கையில் ஸ்னானம் செய்தாள். நல்ல வஸ்த்திர ஆபரணங்களை எடுத்து அணிந்தாள். பரமன் அடியவர்க்கு கொஞ்சம் பண்டுபலாதிகளை எடுத்து ஒரு தாம்பலத்தில் வைத்து அதைக் கையில் எடுத்தாள். தன் நாதன் இடத்தில் வந்தாள். நாதனை வணங்கினாள்...

(பாட்டு)

போய் வாறேன் என்று சொல்லி
புறப்பட்டல்லோ அவள் வாறாள்
மன்னனிடம் விடைவாங்கி
மங்கையரும் தான் வாறாள்
ஆத்தி மரம் தனைத் தேடி
ஆயிழையாள் தான் வாறாள்
பாவையரும் வாறபோது
பரமனந்த ஈஸ்பரனும் (98)

(வசனம்)

தன் நாதனை வணங்கி, "நாதா! நான் சென்று வருகிறேன்" என்று கணவனிடம் விடை பெற்று ஆத்தி மரத்தடியைத் தேடி வருகிறாள்.

இங்கு அவள் வருகிறதைப் பார்த்து கொண்டே இருக்கிறார் பரமன். யோசிக்கிறார். "இப்பேர்பட்ட அரசனை இது நாள் பரியந்தமும் கண்டதே கிடையாது. நமக்கு ஒரு பெண் தருகிறேன் என்று சொல்லி விட்டுக் கணிகையர் வீதியில் பெண் இல்லாதபடி கவலைபட்டு முகம் வாடிப் புலம்பி, இப்பொழுது தன் மனைவியையே அனுப்பி இருக்கிறான். இவன் அல்லவா அரசன். இவனல்லா சத்திரியன்" என்று அவர் மனதில் புகழ்ந்து, "சரி! இன்னும் சோதித்துப் பார்ப்போம்" என்று படுத்து இருக்கிறார் பரமன்.

அந்த நேரத்தில் சல்லம்மா தேவி ஆத்தி மரத்தடியில் வந்து பார்த்தாள்; பரமனைக் கண்டாள். உடனே யோசிக்கின்றாள். நம் நாதன் சொன்ன பரமன் அடியவர் இவர்தான் என்று கையில் கொண்டு வந்த தாம்பளத்தை கீழே வைத்துவிட்டு, பரமன் பாதத்தை தொட்டு வணங்கினாள். பெண் பாதத்தை தொடவும் ப்ரமன் கண் விழித்துப் பெண்ணை பார்த்துக் கேட்கிறார். "பெண்ணே!...

(பாட்டு)

ஊர்தான் என்ன பேர்தான் என்ன
உன்னுடைய நாமம் என்ன
இங்கு வந்த விபரமதை
எனக்கறியச் சொல்ல வேணும்
வந்ததொரு விபரமதை
வாய் திறந்து சொல்ல வேணும்
பரமனிந்த வார்த்தை சொல்ல
பாவையரும் ஏது சொல்வாள் (99)

(வசனம்)

அந்தப் பெண்ணைப் பார்த்துக் கேட்கிறார். "பெண்ணே! ஏன் இங்கு வந்து இருக்கிறாய்? வந்த விபரம்

என்ன," என்றார் பரமன். உடனே சல்லம்மா தேவி சொல்லுகிறாள். "ஐயா! நீங்கள் எங்கள் அரசனிடத்தில் ஒரு பெண் கேட்டீர்களாம். அதற்காக வேண்டி எங்கள் அரசன் அனுப்பி வைத்த பெண்" என்றாள்.

உடனே பரமன் சொல்லுகிறார், "எப்பொழுதோ அனுப்பி வைக்கிறேன் என்றான். இப்பொழுது அனுப்பி வைத்து இருக்கிறான். நல்ல அரசன். பெண் இல்லை என்றால் இல்லை என்று சொல்லிவிட வேண்டியதுதானே. நல்ல அரசன். போ, அவனிடம் சென்று சொல். பெண் வேண்டாம் என்று. பெண்ணும் அரசனும்" - என்று கடிந்து பேசினார். பார்த்தாள் சல்லம்மா தேவி. "ஐயா! அவர் பேரில் குற்றமில்லை. என்னை அப்பொழுதே அனுப்பி வைத்தார். நான் வரத்தான் கொஞ்சம் பிந்தி விட்டது. பெண் பாருங்கள்! அலங்காரம் செய்யக் கொஞ்சம் பிந்தி விட்டது. ஆகையால் மன்னிக்க வேண்டும்" என்று வணங்கினாள்.

உடனே பரமன் சொல்லுகிறார். "சரி! அவனைப் பின்னால் பார்த்துக் கொள்கிறேன். இந்த இடம் நமக்குச் சரியில்லை. அரசன் வல்லாள மகாராஜன் துயிலக் கூடிய இடம் தெரியுமா? அதற்கு அடுத்த அரண்மனைக்குப் போக வேண்டும். இந்தா இந்த சோளியலை எடு. எடுத்து விட்டாயா. இந்த பாதக் குரடு, இந்தத் திரு ஓடு, இந்த பொட்டணம், இந்தச் சங்குநாதம், இந்தச் ஜெயகண்டி, திருப்பிரம்பு எல்லாம் எடு. ஏன் என்றால் எனக்கு ரொம்ப வயது ஆகிவிட்டது. ஆகையால் என்னால் சுமக்க முடியாது. எல்லாம் எடுத்து விட்டாயா. சரி இனிமேல் நீ முன்னால் நட. நான் உன்னைப் பின்பற்றி வருகிறேன்" என்று இரண்டு பேர்களும் முன்னும் பின்னுமாய் வருகிறார்கள். எப்படி...

(பாட்டு)

*பாவையரும் முன் நடக்க*
*பரமனவர் பின்துடர்ந்தார்*
*ஆயிழையாள் முன்னடக்க*
*ஆதிபரன் பின்துடர்ந்தார்*
*வல்லாளன் மாளிகைக்கு*

வாறார்கள் இரு பேரும்
அரசனுடமனைதனிலே
ஆதிபரன் வந்து சேர்ந்தார் (100)

(வசனம்)

பரமனும் சல்லம்மா தேவியும் நன்று போல் வருகிறார் கள். அப்பொழுது பரமன் அந்தப் பெண்ணைப் பார்த்து சொல்லுகிறார்.

"பெண்ணே! இப்படி வேகமாய் நடந்தால் என்னால் எப்படி நடக்க முடியும். என்னை விட்டு விட்டு ஓடி விடலாம் என்று பார்க்கிறாயா? கொஞ்சம் மெதுவாக நடந்து போ" என்றார்.

பெண்ணும் கொஞ்சம் மெதுவாக நடந்தாள். பார்த்தார் பரமன். "பெண்ணே! இப்படி மெதுவாக நடந்தால், அரசன் அரண்மனை போகும் முன்னால் சூரியன் உதயமாகி விடும். அப்புறம் பேசாமல் ஓடி விடலாம் என்று நினைக்கிறாய். கொஞ்சம் விரைந்து போ" என்று இரண்டு பேர்களும் அரசன் நித்திரை செய்யும் மாளிகைக்கு அடுத்த அரண்மனையில் வந்து சேர்ந்தார்கள்.

அந்த அரண்மனை எப்படி இருக்கிறது என்றால் பளிங்கு மண்டபம், ரத்தினச் சிம்மாசனம், படுக்க பஞ்சணை, உட்கார நல்ல கட்டில்கள், மின் விசிறிகள், அரண்மனை பூராவும் கம் என்ற வாசனை. அந்த அரண்மனையில் வந்தார்கள். பரமன் எப்படி அமர்ந்து இருக்கிறார் என்றால்...

(பாட்டு)

திண்ணையது ஆனதிலே
சிவபெருமான் போயமர்ந்தார்
காவி வஸ்த்திரம் தனைவிரித்து
கறைக் கண்டனும் தானமர்ந்தார்
பெண் கொடியை தான் அழைத்து
பிறைசூடி ஏது சொல்வார்
வாராய் அம்மா பெண்கொடியே
வார்த்தை சொல்ல நீ கேளாய் (101)

(வசனம்)

திண்ணையில் சென்று பரமன் அமர்ந்திருக்கவும் கண்டாள் சல்லம்மா தேவி. "ஐயா! பரமன் அடியவர்களே இதோ பஞ்சணை இருக்கிறது. அதிலே சென்று அமருங்கள்" என்றாள். உடனே பரமன் சொல்லுகிறார். "பெண்ணே! அவை எல்லாம், அரசன் அமர வேண்டிய பஞ்சணை. அதெல்லாம் நமக்கு வேண்டாம். இதோ இந்தக் காவி வஸ்த்திரத்தை எடுத்து, இந்தத் திண்ணையில் விரித்துப் போடு. அந்த புலித் தோலை எடுத்து வை. சுரக் குடுக்கையை எடுத்து தலைக்கு வை. வைத்தாகி விட்டதா. சரி. நீ சென்று விடு" என்று பரமன் காவி வஸ்த்திரத்தில் சென்று படுத்தார்.

உடனே நினைக்கிறார். இன்னும் இவளை பரிசோதனை செய்ய வேண்டும் என்று. பரமன் என்ன செய்கிறார் என்றால்...

(பாட்டு)

கள்ளக் குறட்டையிட்டுக்
கறைக்கண்டன் தூங்குகிறார்
அறிந்தும் அறியாதவர் போல்
ஆதிபரன் கண் துயின்றார்
பரமனவர் கண் துயில
பார்த்தாளே பெண் கொடியாள் (102)

(வசனம்)

பரமன் கண் துயின்ற போது பார்த்தாள் பெண்மணி. ஆகா! இவர் நம்மைச் சோதனை செய்ய வந்தவர் மாதிரி தெரிகிறது. ஆகையால் நாம் திரும்பிச் சென்றால், நம் நாதன் நம்மைக் கோபிப்பார். ஆகையால் இவரை எப்படியும் தூங்க விடக் கூடாது என்று பன்னீரை எடுத்து தெளித்தாள். அதற்கும் பரமன் விழிக்கவில்லை. மேலும் என்ன செய்கிறாள் என்றால் அந்த அரண்மனையில் நடந்தாள். அப்படி நடக்கிறபோது அவள் காலில் அணிந்திருந்த பாதசரம் கலீர் கலீர் என்று சப்தித்தது. அப்பொழுதும் பரமன் விழிக்கவில்லை. இனிமேல் இவர் விழிக்க மாட்டார் போலிருக்கிறது. இவரைப் பார்த்தால் பெண்ணுக்காக வந்தவர் மாதிரி தெரியவில்லை. பெண்ணுக்

காக ஒருவர் வருகிறதாய் இருந்தால் அந்த பெண்ணைக் கண்ட பிறகும் இப்படித் தூங்க மாட்டார். ஆகையால் இவர் சோதனை செய்ய வந்தவர் மாதிரி தெரிகிறது. நாம் இவரை ஏந்தி எடுக்க வேண்டும் என்று பக்கத்தில் அமர்ந்து இருந்து கொண்டு என்ன செய்கிறாள் என்றால்...

(பாட்டு)

*ஏந்தி அவள் கையில் எடுக்க*
*ஈசன் சிறு குழந்தையானார்*
*பாவையுட கரமதிலே*
*பரமன் சிறு மதலையானார்*
*மதலை தன்னைக் கண்டபோது*
*மனமதிலே எண்ணுகிறாள்*
*குழந்தை தன்னை கையில் எடுத்து*
*கொஞ்சுகிறாள் பெண் கொடியாள்* (103)

(வசனம்)

பரமன் பக்கத்தில் அமர்ந்து சல்லம்மா தேவி ஆனவள் இரண்டு கரம் கொடுத்து எடுத்தாள். இரண்டு கரம் கொடுத்து எடுக்கவும் பரமன் யோசித்தார். இனி மேலும் இவர்களைச் சோதிக்க கூடாது என்று பரமன் சிறு குழந்தையாகி சல்லம்மா தேவி கையில் இருந்து புலம்பினார். பார்த்தாள் சல்லம்மா தேவி. குழந்தையை எடுத்தாள்; மார்புற தழுவினாள்; முத்தமிட்டாள்; உச்சி முகர்ந்தாள்; ஆடினாள்; பாடினாள். "கண்ணே" என்பாள். "மணியே" என்பாள்.

ரொம்பக் காலத்திற்குக் குழந்தை இல்லாமல் இருந்தவளுக்கு ஒரு குழந்தை கிடைத்தால் எப்படி இருக்கும். இப்படி ஆனந்தபட்டு இருக்கிறபோது, பிள்ளை அழுத குரல் அடுத்த அறையில் படுத்திருக்கும் வல்லாள மகாராஜன் காதில் கேட்டார். உடனே யோசிக்கின்றார். "இது என்ன அதிசயம்? நம் மனைவி சல்லம்மா தேவி சென்ற இடத்தில் குழந்தை அழுகுரல் கேட்கும் விஷயம் என்ன? இதை அறிந்து வர வேண்டும்" என்று பக்கத்தில் படுத்திருக்கும் மல்லம்மா தேவியையும் அழைத்துக் கொண்டு எப்படி வருகிறார் என்றால்...

(பாட்டு)

ஓட்டமும் நடையுமாக
ஓடிவாறார் வல்லாளன்
அடுத்த அரண்மனைதனிலே
அரசனவர் வந்து சேர்ந்தார்
வாசலதைத் தட்டுகிறார்
வல்லாள மகாராஜன்
சல்லம்மா தேவியரே
தையலரே கதவு திற (104)

(வசனம்)

குழந்தையின் சத்தம் கேட்டதுதான் 'திடுதிடு' என்று எழுந்தார். பக்கத்தில் படுத்திருக்கும் மல்லம்மா தேவியை எழுப்பினார். இரண்டு பேர்களும் விரைந்து நடந்து அடுத்த அரண்மனையில் சென்று வாசலைத் தட்டினார். "அம்மா! சல்லம்மா தேவி. கொஞ்சம் கதவைத் திற" என்றார். தன் நாதன் சத்தத்தைக் கேட்டதுதான், உடனே வந்து கதவை திறந்தாள். உடனே அரசன் அரண்மனைக்குள் சென்றார், கண்டார் சல்லம்மா தேவியை. கொஞ்ச நேரம் கல்சிலை மாதிரியே நின்றார். அப்புறம் சுய உணர்வு உண்டாகி கேட்கிறார். "பெண்ணே! சல்லம்மா தேவி...

(பாட்டு)

மதலை வந்த விபரம் என்ன
மங்கையரே சொல்ல வேணும்
கோதையே உன் கரமதிலே
குழந்தையது இருப்பதென்ன
பரமனுட அடியவரை
பாவையரே காணலையே
என்ன என்ன விபரம் என்று
எனக்கறியச் சொல்ல வேணும் (105)

(வசனம்)

மன்னன் தன் மனைவியாகிய சல்லம்மா தேவியைப் பார்த்துச் சொல்லுகிறார். "பெண்ணே! சல்லம்மா தேவி ஒரு பரமன் அடியவர் விரதத்தை முடித்து வா என்று

அனுப்பினேன். இங்கு வந்து பார்த்தால் அந்த அடியவரைக் காணவில்லை. உன் கையில் அழகான ஆண் குழந்தை ஒன்று இருக்கிறது. பெண்ணே! இது என்ன விசயம்" என்றார் மன்னன்.

உடனே சல்லம்மா தேவி சொல்கிறாள். "அரசே நீங்கள் சொன்ன அதே பரமன் அடியவர்தான் இந்தக் குழந்தை. எப்படி என்றால் உங்கள் சொல்படியே இங்கு வந்து பார்த்தேன். அவருக்கு நல்ல நித்திரை. நித்திரை செய்கிறார் என்று திரும்பி விட்டால் உங்களுக்குத் துரோகம் செய்த மாதிரி ஆகி விடும் என்று நினைத்து, அவரை என் இருகரம் கொடுத்து எடுத்தேன். உடனே குழந்தையானார். அந்தப் பரமன் அடியவர்தான் இந்தக் குழந்தை" என்றாள். பார்த்தார் வல்லாளன் மெய் மறந்தார். "பெண்ணே! குழந்தையை என்னிடம் கொடு" என்றார்.

அதற்குள்ளாக மல்லம்மா தேவி "தங்கை! குழந்தையை என்னிடம் கொடு" என்றாள்.

உடனே குழந்தையைக் கையில் வாங்கினாள் மல்லம்மா தேவி. குழந்தையை வாங்கி முத்தம் கொடுத்தாள். உடனே அரசன் வாங்கினார். அரசன் வாங்கிக் குழந்தையைக் கொஞ்சிக் குலாவினார். உடனே சல்லம்மா தேவி வாங்கினாள். அப்புறம் மல்லம்மா தேவி; உடனே அரசன் வாங்கினார். இப்படியே குழந்தையை மாற்றி மாற்றி மூன்று தடவை கொஞ்சி விளையாடினார்கள். மூன்றாவது தடவை வல்லாள மகாராஜன் வாங்கி ஒரு முத்தம் கொடுக்க வேண்டும் என்று முகத்தோடு முகம் சாய்த்தார். அப்போது பரமன் என் செய்கிறார் என்றால்...

(பாட்டு)

*விமலரான என் பெருமான்*
*வெள்ளியங்கிரி சேர்ந்தார்*
*கைலாச மலை தனிலே*
*கறைக் கண்டனும் போய்ச் சேர்ந்தார்* (106)
*பார்வதி சமேதரராய்*
*பரமனவர் போய் அமர்ந்தார்*

*பாலகன் மறைந்திடவே*
*பாராளும் மன்னவரும்* (107)

(வசனம்)

அரசன் குழந்தையை எடுத்து முகத்தோடு முகம் சேர்த்தார். அதற்குள்ளாக பார்த்தார் பரமன். "இனி மேல் நாம் இங்கு இருக்கக் கூடாது" என்று ஒருவருக்கும் தெரியாமல் பரமன் கைலாசத்தில் வந்து அமர்ந்தார்.

மன்னனாகிய வல்லாளன் "சல்லம்மா தேவி! குழந்தை எங்கே" என்றார்.

"நாதா! உங்கள் இடத்தில் தானே தந்தேன்" என்றாள் மல்லம்மா தேவி. "பாலகனை எங்கே? நாதா! உங்கள் கையில் தானே தந்தேன்" என்றாள்.

இப்படியே மூன்று பேரும் முட்டினார்; மோதினார்; உருண்டார்; புரண்டார்.

"ஆ! கடவுளே! பரமன்தான் என்னைச் சோதனை செய்து இருக்கின்றார். எனக்குக் குழந்தையாக வந்து இருக்கிறார். பெண்களே! இனிமேல் நாம் இந்த உலகத்தில் இருக்கக் கூடாது" என்று அழுது புலம்பினார். இந்த அழு குரலை...

(பாட்டு)

*ஆயிழைமார் அழுதகுரல்*
*அம்பிகையும் காதில் கேட்டாள்*
*மன்னவர் குரலோசை*
*மகேஸ்பரி காதில் கேட்டாள்*
*அரசன் வல்லாளன் மனைதனிலே*
*அழுகுரல் கேட்பதென்ன*
*ஈஸ்பரனே மகாதேவா*
*யேந்திழைமார் புலம்புவதேன்* (108)

(வசனம்)

மூன்று பேர்களும் அழுத குரலானது பரமன் வாம பாகத்தில் அமர்ந்திருந்த பார்பதி காதில் சென்று கேட்டது. உடனே பார்பதியானவள் பரமனைப் பார்த்துக்கேட்கிறாள்,

"ஈஸ்பரா! நீங்கள் பூலோகம் சென்று வருகிறேன் என்று போனீர்கள். போனவர்கள் திரும்பி வந்து விட்டீர்கள். நீங்கள் இங்கு வரவும் அரசன் மனையில் ஒரே அழுகுரலாய்க் கேட்கிறது. ஈஸ்பரா!"

(பாட்டு)

என்ன என்ன விபரம் என்று
எனக்கறியச் சொல்ல வேணும்
போனதென்ன வந்ததென்ன
புதுமையது நடந்ததென்ன
நடந்ததொரு விபரமதை
நலமுடனே சொல்ல வேணும்
ஈஸ்பரியாள் இவை உரைக்க
ஈஸ்பரனும் ஏது சொல்வார் (109)

(வசனம்)

"நாதா! நீங்கள் வந்தவுடன் வல்லாளன் மனையில் அழு குரல் கேட்க வேண்டிய விஷயம் என்ன" என்றாள் பார்பதி.

பரமன் சொல்லுகிறார். "பார்பதி! அந்த விபரத்தைச் சொல்லுகிறேன் கேள். இந்த அரசன் முப்பத்திரண்டு தான தர்மம் செய்கிறதாக கேள்விப்பட்டேன். இவன் தர்மத்தைச் சோதனை செய்ய வேண்டும் என்று பதினாயிரம் தேவர்களை பதினாயிரம் பண்டாரங்களாக்கி, பதினாயிரம் கணிகையர் வீட்டிலும் அமர்த்தி விட்டு நானே சென்று, "அரசே! ஒரு பெண் கொடு" என்றேன். அவனும் தருகிறேன் என்றான்.

பதினாயிரம் வீட்டிலும் சென்று பார்த்தான். பெண் கிடையாது. கடைசியாக அவன் மனைவியையே அனுப்பி வைத்து இருந்தான். அந்தப் பெண் வருகிறபோது தூங்கின மாதிரி பாவனை செய்தேன். அவளும் என்னை விட்டாளில்லை. இரண்டு கரம் கொடுத்து என்னை ஏந்தி எடுத்தாள். உடனே நான் ஒரு சிறு குழந்தை ஆனேன். அதைப் பார்த்த அரசன் அவன் மனைவி இரண்டு பேர் ஆக மூன்று பேர்களும் என்னை எடுத்துக் கொஞ்சிக் குலாவினார். அப்பொழுதுதான் உன் ஞாபகம் வந்தது. உடனே ஓடி வந்து விட்டேன்" என்றார் பரமன்.

பார்பதி சொல்லுகிறாள். "ஈஸ்பரா! போனது போனீர்கள். இன்னும் கொஞ்ச நாள் இருந்து அவர்கள் குழந்தைக் கலியைத் தீர்த்து வரக் கூடாதா" என்றாள் பார்பதி.

"பார்பதி! இப்பொழுதுதான் அழகழகாய்ப் பேசலாம். நான் அங்கே இருந்து கொண்டால் உன் கதி என்ன ஆகும். அதுதான் ஓடி வந்து விட்டேன்" என்றார் பரமன். பார்பதி சொல்லுகிறாள். "சரி! அதிருக்கட்டும் நாதா! இப்பொழுது நீங்கள் அங்கு போகவில்லை என்றால் அங்கே என்ன நடக்கும் தெரியுமா?

(பாட்டு)

மாண்டல்லவோ மடிந்திடுவார்
மறலிலோகம் சேர்ந்திடுவார்
செத்தல்லவோ மடிந்திடுவார்
சிவலோகம் சேர்ந்திடுவார்
ஆகையினால் ஈஸ்பரனே
அடியாள் வார்த்தை கேளுமையா
அரசனுட மனை தனக்கு
ஆதிபரா போக வேணும் (110)

(வசனம்)

"ஈஸ்பரா! நீங்கள் இந்த நேரத்தில் அரசன் மனைக்குப் போகவில்லையானால் அவர்கள் மாண்டு போவார்கள். அந்தப் பாவம் உங்களை ஒரு நாளும் விடாது. ஆகையால் கூடிய சீக்கிரம் சென்று காட்சி கொடுங்கள்" என்றாள் பார்பதி.

பரமன் சொல்லுகிறார். "பார்பதி நான் தனிமையாகவா போக வேண்டும்! அதுதான் முடியாது. நாம் இரண்டு பேர்களும் சென்று வருவோம்" என்று இரண்டு பேர்களும் எப்படி வருகிறார் என்றால்...

(பாட்டு)

காளைவாகனம் ஏறி
கறைக்கண்டன் தான் வாறார்
ரிஷப வாகனம் ஏறி
நீலகண்டன் தான் வாறார்

பார்பதி சமேதரராய்
பரமன் பிரசன்னமானார்
அருணையம் பதிதனிலே
ஆதிபரன் வந்து சேர்ந்தார் (111)

(வசனம்)

உடனே பார்பதியும் பரமனும் காளை வாகனத்தில் அமர்ந்து அருணையம் பதியில் அரசன் வல்லாள மகாராஜன் அரண்மனைக்கு நேர் ஆகாயத்தில் நின்று கொண்டு பார்த்தார்.

அப்படிப் பார்க்கிற போது அங்கு ஒரே அழு குரலாகத்தான் இருக்கிறது. அதைக் கண்ட பரமன் சொல்லுகிறார்.

(பாட்டு)

அருணையம் பதி ஆளும்
அப்பாவே சுகந்தானா
மல்லம்மா சல்லம்மா தேவியரே
மாதாவே சுகந்தானா
அப்பா என்று அழைத்திடவே
அரசனவர் காதிலே கேட்டார் (112)

(வசனம்)

ஆகாயத்தில் அம்மை உமையும் அப்பனாகிய பரமனும் அழைக்கிறார்கள்.

"அருணையம் பதிக்கு இறைவனாகிய எங்கள் அப்பா நல்ல சுகந்தானா. மல்லம்மா தேவி, சல்லம்மா தேவி, எங்கள் மாதாவே நல்ல சவுக்கியம்தானா" என்றார் பரமன்.

அரசன் அழுகுரலை நிறுத்தினார். ஆகாயத்தைப் பார்த்தார். பரமன் பார்பதி இரண்டு பேரையும் ரிசப வாகனத்தில் கண்டார்.

பரமனையும் பார்பதியையும் நேரில் கண்டால் எப்படி இருக்கும். ஆனந்தக் கண்ணீர் வடித்தார். ஆனந்தம் கொண்டாடினார். பரமனை வணங்கினார்.

அப்பொழுதுதான் பரமன் சொல்லுகிறார். "அப்பா!

வல்லாள பூபதி, நான் சொல்வதைக் கேளுங்கள். நீங்கள் முன் பிறவியில் செய்த பாவமானது ஈரேழு பிறவிக்கும் உங்களுக்கு குழந்தை கிடையாது. இப்பொழுது நீங்கள் செய்த தர்மத்திற்காகவே நான் வந்து உங்களுக்குக் குழந்தையாகப் பிறந்தேன். நானே உங்களுக்குக் குழந்தையாகப் பிறந்த பிறகு உங்களுக்கு வேறு என்ன கவலை. ஒரு சமயம் குழந்தையாகப் பிறந்து நம் வீட்டில் வைத்து வளர்க்கவில்லையே என்று நினைப்பீர்கள். குழந்தை, குழந்தை என்று ஆவலோடு வளர்க்கிறார்களே - ஏன் என்றால், தாயும் தகப்பனும் அந்திய காலம் ஆகிறபோது கொள்ளி வைக்கத்தான் குழந்தையை தேடுவார்கள். நீங்களும் நமக்குக் கொள்ளி வைக்க மகனில்லையே என்று வருந்த வேண்டாம். நீங்கள் அந்திய காலம் ஆகிறபோது...

(பாட்டு)

நீர்க்குடம் உடைப்பதற்கு
நீலகண்டன் நான் வருவேன்
கொள்ளி வைத்துக் குடம் உடைக்க
குருபரனும் நான் வருவேன்
அதுவரையும் இவ்விடத்தில்
அரசாட்சி செய்திருங்கள்
என்று சொல்லி ஈஸ்பரனும்
ஏகினார் கைலாசம் (113)

(வசனம்)

"அப்பா! நீங்கள் அந்திய காலம் ஆகிறபோது நான் வந்து உங்களுக்கு ஈமக்கடன் கழிக்கிறேன். அதுவரையும் இந்த அருணையம் பதியை அரசுரிமை செய்யுங்கள். அதற்குப் பின்னால் என் கைலாச பதவியை அடையுங்கள். அப்பா! நாங்கள் சென்று வருகிறோம் அம்மா! தாய்மார்கள்! நாங்கள் சென்று வருகிறோம் அம்மா" என்று வல்லாள மகாராஜனுக்கு காட்சி கொடுத்து விட்டு, பரமன் நீங்கியபோது வல்லாள மகாராஜன் பரமனையும் பார்பதியையும் கண்ட ஆனந்தத்திலும் பரமனே நமக்குப் பிள்ளையாக பிறந்திருக்கிறார் என்ற சந்தோசத்தாலும் அமர்ந்திருக்கிறார். அரசன் அப்படி அமர்ந்திருக்க என் பெருமான்

(பாட்டு)

*ரிசப வாகனம் ஏறி*
*நீலகண்டன் என் பெருமான்*
*காளை வாகனம் ஏறி*
*கறைக் கண்டன் என் பெருமான்*
*தேவரெல்லாம் புடைசூழ*
*தேவதுந்துமி முழங்க* (114)

(வசனம்)

வல்லாள மகாராஜனுக்குக் காட்சி கொடுத்துவிட்டு காளை வாகனத்தில் அமர்ந்து, தேவர்கள் எல்லாம் புடை சூழத் தக்கதாகப் பரமன் பார்பதி தேவியோடு கைலாசமலை தனிலே கறைக்கண்டனும் வீற்றிருந்தார்.

**வல்லாள மகாராஜன் கதை முற்றுப் பெற்றது.**

★★★

# மேற்கோள் பாடல் அகரவரிசை

1. "உடைமையவன் இல்லாதது ஒருமுழம்..." (பழமொழி)
2. "எல்லார்க்கும் நன்றாம் பணிதல்..." (குறள். 125)
3. "கடந்துள்ளோரும் கடப்பரே..." (தெரியவில்லை)
4. "குழல் இனிது யாழ் இனிது..." (குறள். 66)
5. "சாதி இரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்..."
   - ஔவையார் (நல்வழி. 2)
6. "தீயினாற் சுட்ட புண் உள்ளாறும்..." (குறள். 129)
7. "பெரியவர் விரதம் தீர்த்தால் பெற்ற தாய்..." (பழமொழி)
8. "மக்கள் மெய் தீண்டல் உடலுக்கின்பம்..." (குறள். 65)
9. "முயற்சி உடையார் இகழ்ச்சி..." (பழமொழி)

**து. பிரபு** M.C.A. M.Phil., Ph.D.,
*கல்லூரி முதல்வர்,*
*இமயம் கலை அறிவியல் கல்லூரி*
*துறையூர் - 620024. திருச்சி.*

# வாழ்த்துரை

இமயம் கலை அறிவியல் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றிவரும் திரு. சு. தாமரை பாண்டியன் அவர்கள் சிறந்த இலக்கியப் புலமையுடையவர். நாட்டார் வழக்காற்றியல் துறையிலும் மிகுந்த ஆர்வமுடையவர். இவர் ஒரு கவிஞரும்கூட. இவர் 'கட்டறுந்த சலனங்கள்' என்ற கவிதை நூலையும், 'நாட்டார் வழக்காறுகளில் மக்கள் இடம் பெயர்வும் வரலாறும்' எனும் நூலையும் வெளியிட்டிருக்கிறார். தற்போது 'வல்லாள மகாராஜன் கதை' எனும் கதைப்பாடல் நூலையும் 'நாககன்னி கதை' எனும் நாட்டுப்புறக் கதைப் பாடலையும் பதிப்பித்து வெளியிடுகிறார்.

நாட்டுப்புறக் கதைப்பாடல்கள் அழிந்து வரும் சூழலில் திரு. சு. தாமரை பாண்டியன் அவர்கள் அதை அழியாமல் பாதுகாக்கும் பொருட்டுப் பதிப்பு முயற்சியில் ஈடுபட்டுள்ளது பாராட்டத் தகுந்த செயல் ஆகும்.

நாட்டார் வழக்காற்றியல் துறை சார்ந்த நிறுவனங்கள் செய்ய வேண்டிய பதிப்புப் பணியினைத் தனியாக இவர் செய்ய முயல்வது, அத்துறையில் அவருக்கு இருக்கும் ஆர்வத்தையே காட்டுகிறது.

தமிழகத்தின் தென் மாவட்டங்களில் எண்ணற்ற நாட்டுப்புறக் கதைப்பாடல்கள் ஓலைச் சுவடிகளிலும், கைப்பிரதிகளிலும் புதைந்து கிடக்கின்றன.

அவற்றை அழியாமல் பாதுகாப்பதன் மூலம் கிராமப்புற அடித்தட்டு மக்களின் வாழ்வியல் வரலாற்றினை அறிந்து கொள்ள துணை செய்யும்.

எனவே பல கதைப் பாடல்களை இவர் பதிப்பித்துப் 'பதிப்புத் துறையில்' சிறந்து விளங்க வேண்டும் என்று நான் மனமார வாழ்த்துகிறேன்.

### பதிப்புரை

# பட்டிதொட்டிகளில் பாடிவைத்த பழங்கதைகள்

## பனையோலை தந்த பழங்கால வில்லுப்பாட்டுக் கதைகள்!

• சிற்றூர்ப்புறங்களில் சிந்தனையோட்டம் சிறந்திருக்கக் காணலாம்.

பச்சைப் பசுமை குலுங்கும் பயிர் நிலங்கள் சூழ்ந்த சிற்றூர்கள், மண்ணின் மழலைக்குலம் எனலாம்.

ஓங்கி உயர்ந்த குன்றுகளும், அங்கே ஒழுகி விழும் வெள்ளை அருவிகளும், ஓடைகளும் ஏரி குளங்களும், ஒவ்வொன்றாய். இயற்கையின் எழிலார்ந்த கொடைவளங்கள்.

கோடை மழைக்காலம், குளிரும் பனிக்காலம், வாடைக் குளிரடிக்கும் வாடிக்கைகள் யாவும் காலம் கனிந்தளிக்கும் கண்காட்சி வரலாறாம்.

காடும் களத்து மேடும், கரம்பும் கல்லாங் குத்தும், சூளை எரி எனச் சொல்ல வைத்துத் தூள் பரத்தும் தூசியும் சூடும் வேர்வையும், தொலையாத ஏழ்மையும் துளைத்தெடுக்கும் வறுமையும், தொடர்ந்து உறவாடும் தொட்டிலென்றும் சொல்லிடலாம்.

காலை கருக்கலிலே கண்விழித்துக் கடமையாற்றத் தொடங்கும் மக்கள் கண்ணுறங்க இரவு வரும்.

மண்ணோடும் மாடு மரங்களோடும் என்றென்றும் சேர்ந்திருந்து, இளைப்பாற எண்ணாமல் எவ்வளவு பாடுகள்தாம் இயற்றுகின்றார் ஊர் மக்கள்.

சூரியனைத் துணையாக்கிச் சுழன்று வரும் வேளாண்மைச் சுறுசுறுப்பும் துடிதுடிப்பும் தொல்லைகளின் போராட்டம்! ஏரோட்டும் காலம், உழவடிக்கும் கோலம், நாற்றங்கால் விதைப்பு, நல்லெருவைத் தேடியிடல், பரம்படிப்பார்; பின்னர் நாற்றைப் பறித்தெடுப்பார்; நடவுக்கு ஆள் தேடும் நாளெல்லாம் போராட்டம்!

களையெடுப்புக் காலம் வரும்; கடும் வெயில் மேலும் வரும். காத்திருந்து வேர்த்திருந்து பார்த்திருந்து அறுவடையாம் பயன் காண்பார்; அத்தோடு கடன் காண்பார்.

உழவனுக்கு மிஞ்சுவது உழைப்பு மட்டுமே. கழனிகளும் களத்து மேடுகளும் காட்டிவரும் வாழ்வியலே கண்கண்ட உயிர் வாழ்வு! களிப்பளிக்கும் உயர்வாழ்வு!

உழைப்புக்கு இடையிடையே உள்ளங்கள் களித்தாட ஊர்களிலே பல உண்டு; ஊக்க மருந்துகளாகச் சின்னஞ்சிறு களியாட்டம், சிரிக்கின்ற பொழுதாகும் ஆட்டபாட்டங்கள், அன்பூட்டும் காட்சிகளாம். பக்தி எனும் பெயரில் பலப் பல பண்டிகைகள்! குடும்ப விழாக்கள் சில கும்மாளம் போட வைக்கும்.

இல்லாமை போதாமை, ஏழ்மைக் கடன் சுமைகள் எத்தனையோ, எல்லையில்லா வாழ்வுறவு! பழங்காலம் தொட்டுவரும் பண்டிகைகள் பல உண்டு. தொழில்களுக்குத் தொடர்புள்ள தோழமையாம் விழாக்கள் உண்டு.

போலிகளாய்ப் பூத்திருக்கும் வேலைதரும் பட்டணங்கள், கூலிகளை வளர்க்கின்ற கொடுமைமிகு நகரங்கள், நாளுக்கு நாள் பெருகும் நலிவுடைய நாகரிக மேம்பாடு; சிற்றூர்கள் காணாத செழிப்பைக் குவிக்கின்ற செல்வர்களும் அரசாங்கப் பணிபார்க்கும் அலுவலராம் அட்டைகளும் சிற்றூரை மதிப்பதில்லை; சிறுமையென ஒதுக்கிடுவர்.

உண்டு உயிர்வாழ உணவளிக்கும் உழவர்களை ஓரங்கட்டி, உயர்ந்தவராய் வாழ ஊக்கமுள்ளோர் நகரத்தில்.

ஒட்டி உலர்ந்த மக்கள், ஒய்ந்து களைத்த மக்கள்; ஊர்தோறும் பூச்சிகளாய் உலவிவரும் சிற்றூர்கள்.

இயற்கை நெறியோடு இணைந்து வாழும் ஏழை மக்கள் எப்போதும் ஏங்கி, இளைத்தே அழிகின்றார்.

பசையில்லா மக்கள் பசி தீர வேண்டுமென்று பட்டணங்களைத் தேடிவந்து பாடுபட்டு வாடுகின்றார்.

வஞ்சனையின் அரசாட்சி, வளர்ந்தவர்தம் பெரும் சூட்சி! பறவைகட்கும் கூடு உண்டு! பஞ்சையர்க்குப் படுத்துறங்க ரோடு உண்டு. கையில் ஓடுண்டு!

**கல்லைப் புரட்டிக் கழனி கண்டோர் களித்ததுண்டா? காட்டை அழித்து நாடாக்கியோர் கூடான வெற்றுடலை காட்டிக் கதறுகின்றார்.**

எத்தனையோ இல்லாமைகள்! அத்தனைக்கும் மத்தியிலே இன்பக் களியாட்டங்கள்! இதயங்களின் எழுச்சிப் பீறிடல்கள்!

சொல்லாகப் பழமொழியாய், சுவை தரும் சொல்லாடல், சுருதி கொண்ட இசைப் பாடல்.

தொட்டிலில் தொடங்கும் தாலாட்டுப் பாடல்கள்! உழைக்கின்ற துயர் மறைக்க உருவாக்கும் கருத்துகளை, மெல்ல இசைகூட்டி நல்ல சுவை வளர்ப்பார்! நாட்டுப்புறத்தாரின் நாவில் உருவான பாட்டுகளை கேட்டாலே பாசம் பிறக்கும்; பசுமை மனம் சுரக்கும்!

பாடும் பறவைகளும் கூவும் உயிரினமும் வாழும் மனிதரிடம் பண்பாகச் சேர்ந்திருக்கும். உள்ளம் சுரந்து ஊற்றுப்போல் கருத்து வரும்; கள்ளம் கபடுகளைத் தள்ளிப் புரண்டோடி வெள்ளமாய் ஓடிவரும் வாழ்க்கை தரும் பாட்டு! வளர்க்கும் வழி காட்டும்.

மாடு கன்றுகளும் கூடும் வாழ்வுடனே! தேடும் இதயங்கள் தேவையைப் பாடுமம்மா! ஏடு தரா கல்வியுண்டு! எல்லாமே அனுபவங்கள்! குரலெடுத்துப் பாடுவதே கொள்கை வெளிப்பாடு! பூவெடுத்து மாலை கட்டும் பூவையரும் பாவடித்துத் தருவார்கள்! பாட்டுக்குப் பாட்டெடுப்பார் நாட்டுப்புற மக்கள்! நம்பிக்கை என்பதொன்றே நாளை நகர்த்துமங்கே! நம்பிக்கை என்பதெல்லாம் நாட்டு மக்கள் நெஞ்சிலுண்டு. கும்பிக் குமைச்சலினால் குந்தி அழுவதுண்டு! ஆனாலும் அவ்வப்போது பலவேறு பழக்கங்கள் சத்திகளாய் வைப்பதுண்டு!

கையாட்டம், காலாட்டம், கண் ஆட்டம், கோலாட்டம், ஒயிலாட்டம் என்றெல்லாம் எண்ணற்ற ஆட்டங்கள் எப்படியோ சேர்ந்ததிங்கே.

மூங்கிலிலே மூச்சிழைக்கும் பாங்காம் குழலோசை! தேங்காய் மூடியிலும் தேர்ந்தெடுத்த இசையுண்டு. நாவால் இசை எழுப்பி, மூக்காலும் இசை முழக்கித் தாளத்தோடும் தாரத்தோடும் தொடர்ந்த பல கலைகள்!

ஆசாமிகள் உள்ளங்கள் ஊற்றெடுத்துப் பாய்கையிலே, ஊர் சாமி பலவாக உருவான வரலாறு ஒன்றா, இரண்டா? ஓராயிரந்தாமா? யாருரைப்பார்? குறி சொல்லும் பாட்டும், குறத்தியார் குரலழகும், வெறியாடும் விழாப்பாட்டும், வேளைக்கு வேளை என விதம்விதமாய்ப் பாடினோர்!

நன்னூல் இலக்கணத்தை நாட்டு மக்கள் கண்டதில்லை. எண்ணுவதை! பாட்டாக எடுத்து முழங்கிடுவார்.

கல்லை வடித்தவர்கள் வில்லை வளைத்தவுடன் சொல்லைக் குழைத்தார்கள்! சோர்வை அழித்தார்கள்! கட்டுக் கதைகள் காலப் பரிசுகளாம்! கண்மூடிப் பழக்கங்களின் கற்பனைப் படைப்புகளோ கணக்கற்றுக் கூடினவே!

வில்லில் இசை கூட்டிச் சொல்லை இணைத்தார்கள். வில்லை இசைத்தபடி சொல்லும் கதைகள் பல.

வாயாலே பாடியதைக் காதலே கேட்டவர்கள் மனத்திலே பதித்து வந்தார். பனைஓலைப் பயன்படவே எழுத்தாணி கொண்டு எழுதிப் பதித்தார்கள். அந்நியரால் வந்தடைந்த ஏடும் எழுத்துகளும் ஏற்றம் பெற்றதிங்கே. செல்லரித்த சொல்லடுக்கை அள்ளி எடுத்து அச்சாக்கும் காலம் இது.

கல்விக்கு வெளிச்சம்; கற்றவர்க்கு நல்வாழ்வு! பல்லி சொல்கூட பயனளிக்கும் காலமிது. வில்லில் குழைத்தளித்த விதவிதமாம் பல கதைகள்! பாட்டோடு சொல் விளக்கம் பாங்காய்க் கலந்திருக்கும். படிப்பறியா மக்களுக்கும் பக்குவமாய்ப் பரப்பி வைக்கும். பாவ புண்ணியமென்னும் தேவையில்லாத் திட்டங்கள், தெய்வம் புராணமென்று தெளிவற்ற பொய்க் கதைகள் - உழைத்துக் களைத்தோர்க்கு உள்ளம் களிப்படைய ஊக்க மருந்தென்று ஊட்டி வளர்த்த கலை.

ஊருலகம் மாறிவரும் காலமிது! உள்ள பழங்கதைகள் முற்றும் அழியாமல் ஒன்றிரண்டு புதுப்பிறவி எடுத்து வருவதுண்டு. அந்த முறையில் இந்தக் கதை இரண்டும் இணைந்தே வருவதனை, விந்தையென்று கொள்ளாமல் சிந்தையிலே சேர்த்திடுக.

தேடித் தருவோரைக் கூடியணைத்திடுவீர்! ஓசை நயங்காண்க! உள்ளங்கள் ஏற்கட்டும்! புராணப் புதர்களிலும் மனித குணம் பூத்திருக்கும்! முட்டிப் பூக் கரகங்கள் எட்டிவந்து மணம் வீசும்! ஒட்டி உறவாடி உணர்வோடு போற்றுங்கள்! நாட்டுப்புறத்தாரின் நல்விருந்தை மாந்துங்கள்! ஏந்துங்கள் இன்ப நிலை! எல்லாமே இன்ப மயம்!

வெள்ளையாம்பட்டு சுந்தரம்

# என்னுரை

நாட்டுப்புறக் கதைப்பாடல் சுவடிகளைத் திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டப் பகுதிகளில் நான் சேகரிக்க ஆரம்பித்த காலத்தில் அதைப் பதிப்பிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் திரட்டவில்லை. எனது மதிப்பிற்குரிய பேராசிரியர் பீ. டாக்டர் நசீம்தீன் அவர்களுடைய அறிவுறுத்தலுக்காகவும், வேண்டுதலுக்காகவும் திரட்ட ஆரம்பித்தேன். சுமார் 40-க்கும் மேற்பட்ட சுவடிகளைத் திரட்டிய பின்னர் அதில் சிலவற்றை எனது ஆய்வுத் தோழர்களிடம் வழங்கிப் பதிப்பிக்கச் செய்தேன்.

இந்நிலையில் எனது அன்பிற்குரிய அன்பர் திரு. தி. இராஜ ரெத்தினம் (ஆய்வாளர், கேரளப் பல்கலைக்கழகம்) அவர்கள் என்னைப் பதிப்புத் துறையில் ஈடுபடத் தூண்டியதோடு பதிப்பு முறைகளையும், ஆய்வு நெறிகளையும் செம்மையுற எனக்கு எடுத்து இயம்பினார். எனக்குப் பதிப்புத்துறையில் சந்தேகங்கள் எழுந்தபோதெல்லாம் எந்த நேரம் என்று பாராமல் சந்தேகங்களை நீக்கி நெறிப்படுத்தினார். எனது பேராசிரியர் பீ. டாக்டர் நசீம்தீன் அவர்களும் தக்க ஆலோசனைகளை வழங்கி என்னைப் பதிப்புத்துறையில் ஈடுபடத் தூண்டினார்.

இதன்காரணமாக நானும் நூலாக்கப் பதிப்புத் துறையில் கால்பதிக்க முனைந்தேன். அதன் விளைவாகத்தான் இந்தக் கதைப்பாடல் நூலாக வெளிவருகிறது.

சுவடிகளைப் படிப்பதில் பல்வேறு ஐயங்களும், சிக்கல்களும் ஆரம்பத்தில் தோன்றின. அவை நாளடைவில் ஓரளவு நீங்கின. எனது முதல் கதைப்பாடல் செம்பதிப்பாக அமைய வேண்டும் என்பதுதான் எனது அவா. ஆனால் அனுபவமின்மை காரணமாகச் சில குறைகள் இருப்பதற்கு வாய்ப்பு உண்டு. ஏனினும் ஆய்வாளர்கள் எனது முயற்சியைப் பாராட்டுவார்கள் என்ற நம்பிக்கையில் 'நாககன்னி கதை' என்ற கதைப் பாடலைப் பதிப்பித்து வெளியிடுகிறேன்.

இக்கதை, புராணக்கதை மாந்தரகள் இருவரை மையப்படுத்திப் படைக்கப்பட்டுள்ளது. பாமர மக்களுக்குப் புராணக் கதைகளை வில்லுபாட்டின் மூலம் வழங்கும் தன்மையில் இக்கதை அமைந்துள்ளது எனலாம். இக்கதையில் இரண்டாம் பாகமாக முப்பிராதியர்கள் கதை தொடங்கி நிறைவடையாமல் நிற்கிறது. சிவன் முப்புரத்தை எரித்த வரலாறு அது எனலாம். ஆனால் முதல் பாகத்தில் அமைந்துள்ள நாககன்னி கதை கேட்போருக்கும் படிப்போருக்கும் சுவைதரும் தன்மையில் அமைந்துள்ளது.

கதையில் ஒருவனுக்கு வாழ்க்கைப்பட்ட இரண்டு பெண்களின் மனநிலையில் தோன்றும் போட்டியும், பொறாமையும், விளைவுகளும் சுவையாகவும் அழகுபடவும் ஆசிரியரால் கூறப்பட்டுள்ளன.

இக்கதைப்பாடல் வெளிவரத் துணைநின்ற என் பேராசிரியர் பீ. டாக்டர் நசீம்தீன் அவர்களுக்கும், தி. ராஜரெத்தினம், தே. கிரிஜா, அ. அருணகிரி, பழனிச்சாமி, செந்தில்நாராயணன், இராமன் (கோலியன்குளம்), முனைவர் வை. இரமேஷ் (இமயம் கலை அறிவியல் கல்லூரி, தமிழ்துறைத் தலைவர்) ஆகியோருக்கும் எனது இதயம் கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நாககன்னி கதை சிறிதாகையால் தனிநூலாக்க முடியவில்லை. எனவே 'வல்லாள மகாராசன் கதை'யுடன் இணைப்பாக்கி வெளியிட நேர்ந்தது. இரு நாட்டுப்புறக் கதைகளையும் புத்தகமாக்கி வெளியிடும் சென்னை சேகர் பதிப்பத்தாருக்கு என் நன்றியுரியது.

ஓலைச் சுவடிகளில் நாட்டுப்புறக் கதை சொல்லும் பாங்கினை இன்றைய தலைமுறைக்கு எழுத்துருவில் எடுப்பதில் மனநிறைவு கொள்கிறேன். வாசகருலகம் வாங்கிப் படித்து ஆதரவு தரவேண்டுகிறேன்.

சு. தாமரை பாண்டியன் எம்.ஏ., பிஎச்.டி.,
விரிவுரையாளர்
பி.ஜி.பி. கலை அறிவியல் கல்லூரி
நாமக்கல் - 637206

## ஆய்வு முன்னுரை

தென் மாவட்டங்களில் கன்னியாகுமரி திருநெல்வேலிப் பகுதிகளில் நாட்டார் வழக்காற்றுக் கதைப்பாடல்கள் அதிக அளவில் கிடைக்கின்றன.

இக்கதைப்பாடல்கள் பெரும்பாலும் வில்லுப்பாட்டு வழி மக்களிடம் சென்றடைகின்றன. இப்பகுதியிலுள்ள மக்கள் சிறுதெய்வ வழிபாட்டுத் தளத்திற்குள் முக்கியமான ஒரு சடங்குபோல் வில்லுப்பாட்டையும், கணியன் ஆட்டத்தையும் கடைப்பிடித்து வருவது கவனத்திற்குரியது. இவ்விரு கலைகளும் தெய்வங்களைச் சன்னதிக்கு அழைத்துவரும் சக்தி படைத்தவை என மக்கள் கருதுகின்றனர். இதன்மூலம் வில்லுப் பாட்டுக் கலையும், கணியன் கூத்துக்கலையும் அழியாது நிலைத்து நிற்கின்றன. அதோடு தொடர்புடைய நாட்டுப்புறக் கதைப் பாடல்களும் வழக்கொழிந்து போகாமல் நிலைத்து வாழ்கின்றன.

இவ்விரு கலைகளும் கதைப்பாடல்கள் வழி மக்களுக்குப் பக்திமார்க்கத்தையும், நீதிநெறிகளையும், வாழ்க்கைத் தத்துவங்களையும் போதிக்கின்றன. அதோடு மக்களுக்குச் சிறந்த பொழுது போக்கு அம்சமாகவும் திகழ்ந்தன. ஆனால், இன்று காலமாற்றத்தினாலும் அறிவியல் வளர்ச்சியினாலும் பல புதிய துறைகள் மக்களைக் கவர்ந்துள்ளன. இதனால், மக்களிடம் பெற்றிருந்த செல்வாக்கை இக்கலைகள் இழந்து வருகின்றன. அதோடு சில நாட்டுப்புறக் கதைப் பாடல்கள் வழக்கொழிந்தும் போய்விட்டன. சில கதைப் பாடல்கள் வழிபடு தெய்வத்தோடு தொடர்பு கொண்டிருப்பதால் நிலைத்து நிற்கின்றன.

இத்தகைய சூழலில் அக்கதைப் பாடல்களை அழியாவண்ணம் பாதுகாப்பது நம் கடமை. முனைவர். நா. வானமாமலை, கன்னியாகுமரி மாவட்டப் பகுதியில் கள ஆய்வின் மூலம் பல்வேறு கதைகளைச் சேகரித்துப் பதிப்பித்துள்ளார்.

கன்னியாகுமரி மாவட்டத்தைச் சேர்ந்த ஆறுமுகப் பெருமாள் நாடார் அவர்களும் பல கதைகளைப் பதிப்பித்துள்ளார். மேலும் முனைவர் அ.கா. பெருமாள், ஸ்டீபன் சாம், விவேகானந்தன், தங்கத்துரை, ஸ்ரீகுமார் முதலியோரும் அச்சேற்றும் பதிப்புத் துறையில் ஈடுபட்டுள்ளனர்.

இந்நிலையில், வட்டக் கோட்டைக்கு அருகிலுள்ள ஆமணக்கன்விளை பகுதியில் வசித்துவரும் வில்லிசைப் புலவர் திரு. பெ. சுப்பிரமணியன் நாடார் என்பவரிடமிருந்து "நாககன்னி கதை" என்னும் வில்லிசைப் பாட்டும் கைப்பிரதியாகப் பெறப்பட்டுப் பதிப்பித்து ஆய்வுலகிற்கு அறிமுகம் செய்யப் படுகிறது. இக்கதையின் ஏட்டுப்பிரதி தேடிப் பார்க்கப்பட்டது. ஆனால் ஏட்டுப் பிரதி கிடைக்கப்பெறவில்லை.

எழுத்து முறை

மூலச் சுவடியில் இருந்து பிரதி செய்யும்பொழுது பிழைகள் ஏற்படுவது இயல்பு. காரணங்கள், எழுதுபவரின் கவனக் குறைவினையும் போதிய கல்வியறிவின்மையினையும் குறிப்பிடலாம். கையெழுத்துப் பிரதியாகக் கிடைத்த நாக கன்னி கதைப்பாடலும் பல பிழைகளுடன் அமைந்துள்ளது.

கைப்பிரதியில் 'ளகர', 'ழகர' எழுத்து வடிவங்கள் முறையாக எழுதப்படவில்லை. சான்றாகப் 'புகழ்' என்னும் சொல்லில் வருகின்ற சிறப்பு 'ழகர'த்திற்குப் பதிலாகப் பொது 'ளகர'த்துடன் "புகள்" என்று எழுதப்பட்டுள்ளது.

அதுபோல "சொல்வாள்" என்னும் சொல்லில் வருகின்ற பொது 'ளகர'த்திற்குப் பதிலாகச் சிறப்பு 'ழகர' எழுத்துடன் "சொல்வாழ்" என்று எழுதப்பட்டுள்ளது. இதுபோல 'ழகர,' 'ளகர' இணை எழுத்துக்களும் இவ்வாறே மாற்றி எழுதப்பட்டுள்ளன.

கதைப்பாடலில் "இருபேருமாக" என்று எழுதுவதற்குப் பதிலாக "இருபெருமாக" என எழுதப்பட்டுள்ளது. அதாவது 'பே' என்ற நெடில் கொம்பிற்குப் பதிலாக 'பெ' என்ற குறில் கொம்பு போட்டு எழுதப்பட்டுள்ளது. இக்குறியீடு இவ்வாறு எழுதப்படுவது ஏட்டெழுத்து அமைப்பைச் சார்ந்ததாகும்.

சில இடங்களில் இடையின 'ர'கரத்திற்குப் பதிலாக வல்லின 'ற'கரம் எழுதப்பட்டுள்ளது. உதாரணமாக "சிரைத்தவளை" என்பதற்குச் "சிறைத்தவளை" என்றும்; "காரணத்தை" என்பதற்குக் "காறணத்தை" என்றும் எழுதப்பட்டுள்ளது. இதைப் போன்று வல்லின 'ற'கரத்திற்குப் பதிலாக இடையின 'ர'கரமும் பயன்படுத்தப்பட்டுள்ளது. அதாவது "கேட்பதற்கு" என்று எழுதுவதற்குப் பதிலாகக் "கேட்பதர்கு" என்று எழுதப்பட்டுள்ளது.

இக்கதைப் பாடலின் கைப்பிரதியில் சில இடங்களில் இறுதி எழுத்துக்கள் விடுபட்டுள்ளன. அவ்வாறு விடுபட்ட எழுத்துக்களைக் கண்டறிந்து அவ்வெழுத்தினை '( )' என்ற அடைப்புக் குறியீட்டுக்குள் கொடுக்கப்பட்டுள்ளது. (உ-ம்) கா (ண).

ஒற்றுப் பிழைகளும் அதிகமாகக் காணப்படுகின்றன. எனவே பாடல்களில் வரும் ஒற்றுப் பிழைகளைத் திருத்தி எழுதப்பட்டுள்ளன. பாடல்களில் வரும் ஒற்றுப் பிழைகள் '( )' என்ற அடைப்புக் குறிக்குள் கொடுக்கப்பட்டுள்ளன.

கைப்பிரதியில் கதையின் தலைப்பு நாவகன்னி கதை என்று பேச்சு வழக்கில் அமைந்திருந்தது. ஆனால் அதைத் திருத்தி 'நாககன்னி கதை' என்று மாற்றம் செய்யப்பட்டுள்ளது. பாடலிலும் வசனத்திலும் நாவகன்னி என்று வருமிடங்களிலும் நாககன்னி என்று மாற்றப்பட்டுள்ளது. மேலும் கதைப் பாடலில் வரும் அனைத்துப் பிழைகளும் திருத்தம் செய்யப்பெற்றுள்ளன.

**கதைப்பாடலின் அமைப்பு**

கதைப் பாடல்கள் பொதுவாகத் தொடக்கம், கதை சொல்லும் முறை, முடிவு என்ற அமைப்பினைக் கொண்டிருக்கும். கதைப்பாடலின் சில உத்திகளாக, காப்பு, இறை வணக்கம்,

அவையடக்கம், நுதலிப்புகுதல், கதைத் தொடக்கம், கதையினைக் கொண்டு செல்லும் முறை, முடிவு ஆகிய பண்புகளைப் பெற்றுத் திகழுமென்று ஆய்வியல் அறிஞர்கள் சுட்டுகின்றனர். ஆனால் நாககன்னி கதைப்பாடல் இவ்வமைப்பிலிருந்து முற்றிலும் மாறுபட்டு அமைந்துள்ளது.

நாககன்னி கதையில் காப்பு, இறை வணக்கம், அவையடக்கம், நுதலிப் புகுதல் முதலிய கூறுகள் காணப்படவில்லை. நேரடியாகக் கதையின் தொடக்க நிலைக்குச் சென்று விடுகிறது. அதுபோல முடிவும் முறையாக அமைய வில்லை. அதாவது கதை முடிந்த பின்னர் மற்றொரு கதையினை இணைத்துச் சொல்லும் தன்மையில் அமைந்துள்ளது.

இக்கதைப்பாடல், பாட்டு மற்றும் சந்தப் பாடல்களால் கட்டி பின்னப்பட்டுள்ளது. ஆசிரியர் வசனங்களைக் கூறுகின்ற பொழுது கதைமாந்தர்கள் பேசுவதைக் குறிப்பிட இடத்த வசனம், வலத்த வசனம் என்ற அமைப்பினைப் பயன்படுத்தியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

### நூலாசிரியரும் காலமும்

சில சுவடிகளில் கதைப்பாடலை இயற்றிய ஆசிரியர் பெயரும், இயற்றப்பட்ட ஆண்டும் குறிப்பிடப்பட்டிருக்கும். ஆனால் நாககன்னி கதைப் பாடலில் இவ்விரண்டுமே இடம் பெறவில்லை. மேலும் காலத்தை அறியத்தக்க எந்தச் செய்தியும் காணப்படவில்லை.

### கதைச் சுருக்கம்

காசிபர் என்னும் முனிவர் பதின்மூன்றுப் பெண்களை மணம் செய்து கொண்டார். அதில் நாககன்னி, தெய்வகன்னி என்ற இருவரும் அக்காள் - தங்கை.

இருவரும் ஒரு நாள் சுனையாடச் சென்றனர். சுனையாடிக் கொண்டிருக்கையில் தேவேந்திரன் வெள்ளை யானையில் ஆகாயத்தில் வந்து கொண்டிருந்தான். இதை இளையவளான தெய்வகன்னி கண்டாள். பின் தனது அக்காள் நாககன்னியை

நோக்கி, "அக்கா அதோ வானில் வரும் யானை என்ன நிறம் என்று கூறு பார்க்கலாம்" என்றாள். நாககன்னியானவள் பட்டென்று கறுப்பு நிறம் என்றாள்.

உடனே இளையவளான தெய்வகன்னி அக்காள் நாககன்னியை நோக்கி, "நீ கூறியது சரியென்றால் நான் உனக்கு அடிமை வேலை செய்வேன். நீ கூறியது தவறென்றால், நீ எனக்கு அடிமை வேலை செய்ய வேண்டும்" என்று பந்தயம் வைத்தாள்.

யானை அருகினில் வந்தபோது யானை வெள்ளை நிறத்தில் காணப்பட்டது. உடனே இளையவளான தெய்வகன்னி அக்காளென்றும் பாராமல், "அடி வெள்ளாட்டி அந்த யானையைப் பாரடி, அதன் நிறம் சுத்த வெள்ளை" என்றாள். இதனால் அவமானம் அடைந்த நாககன்னி, தங்கை தெய்வகன்னிமீது மிக்க கோபம் கொண்டாள். அதோடு தெய்வகன்னியைத் தனக்கு அடிமையாக்கி வதம் செய்வேன் என்றும் சபதமிடுகிறாள்.

உடனே தீங்குழல் என்னும் இசைக்கருவியை எடுத்து வாசித்தாள். இந்த இசையை அவளின் மகன் கார்கோடன் கேட்டான். கேட்டதும் தனது தாய்முன் தோன்றினான். தாய் அவனிடம் நடந்ததைக் கூறி, யானையைக் கறுப்பு நிறமாக மாற்றும்படி வேண்டினாள். கார்கோடனும் நிலவை விழுங்கி னான். உடனே வெள்ளை யானை கறுப்பு நிறமாக மாறியது.

நாககன்னி மிக்க மகிழ்ச்சியுடன் ஓடிச்சென்று தங்கை தெய்வகன்னியின் கூந்தலைப் பிடித்து இழுத்துக்கொண்டு சென்றாள். அன்றுமுதல் இரவு பகல் பாராமல் அடிமை வேலை செய்யச் சொல்லி மிகவும் துன்புறுத்தினாள்.

இதனால் மனம் உடைந்த தெய்வகன்னி சிவனிடம் முறையிட்டாள். சிவனும் இவளின் மீது பரிவு கொண்டு உதவி செய்ய வந்தார். பண்டாரக் கோலம் பூண்டு நாககன்னி வீட்டின் வாசலில் வந்து தர்மம் செய்யுமாறு சத்தமிட்டார். பின் தெய்வகன்னி அவருக்குத் தருமம் இட வந்து, அவரிடம் நடந்ததைக் கூறுகிறாள்.

உடனே சிவன், "ஏழு பரல்களைக் கொடுத்து இதை நாற்பத்தொரு நாள் செப்புக் குடத்திற்குள் வைத்துப் பாதுகாக்குமாறு" கூறினார். அதோடு, 'உன் சிறை மிக விரைவில் தீரும்' என்றும் கூறிச் சென்றார்.

தெய்வகன்னியும் நாற்பத்தொரு நாள் முடிந்ததும் பானையைத் திறந்து பார்த்தாள். அதனுள்ளிருந்து உக்கிலி (செம்புகம்), கீரி, பன்றி, விருது, மயில், கரடி, கருடன் முதலியன பிறந்து வந்தன.

கருடாழ்வான் பிறந்த செய்தியை அறிந்த கார்க்கோடன் மிக்க பயம் கொண்டான். எனவே ஒரு பிராமணன் வேடமிட்டு அன்னிய தேசத்திற்குத் தப்பி ஓடினான்.

அங்கு ஒரு பிராமணப் பெண்ணை மணம் முடித்து வாழ்ந்து வந்தான். இறுதியில் அப்பெண்ணுக்குத் தன் கணவன் ஒரு பாம்பு என்பது தெரிந்து விடுகிறது. எனவே அருகில் வசித்தவர்களை அழைத்து அடித்துக் கொல்லச் சொல்கிறாள்.

அந்நேரம் ஆகாயத்தில் கார்கோடனைத் தேடிக் கருடாழ்வான் வந்து கொண்டிருந்தான். கீழே "பாம்பு பாம்பு" என்ற குரல் கேட்டு, கீழிறங்கி வந்தான். அங்குக் கார்கோடனைக் கண்டபோது, மகிழ்ச்சியுடன் ஓடிச் சென்று தனது கால்களால் அவனைத் தூக்கிச் சென்றான். ஆகாயத்தில் வைத்து கருடாழ்வான் கார்கோடனை வதம் செய்து தன் தாயைச் சிறை மீட்டது. இத்துடன் நாககன்னி கதை முடிவுறுகிறது.

அதன்பின் கருடாழ்வான் சிவனிடம் செல்கிறது. அங்கு முப்புராதியர் தேவர்களுக்குத் தொல்லை கொடுத்தனர். எனவே சிவன் கருடாழ்வானை அனுப்பித் திருமாலை அழைத்து வருமாறு கூறுகிறார். திருமாலும் சிவனிடம் வந்து சேர்ந்து கொள்கிறார். பின்னர் இருவரும் முறையாக கணபதி, முருகன் இருவரையும் முப்புராதியர்களை அழிக்க அனுப்புகின்றனர். ஆனால் இருவரும் முப்புராதியர்களின் பூசைகளில் மயங்கி முப்புராதியர்களின் கோட்டையிலேயே தங்கி விடுகின்றனர். பின்னர், சிவன் சூரியனை அனுப்புகின்றார். சூரியனும்

அவ்வாறே தங்கி விடுகின்றார். இதனால் உலகம் சூன்யமாகிவிடுகிறது.

இச்சூழலில் சிவன் முப்புராதியர்களை அழிக்க இனி யாரை அனுப்புவது என ஆலோசித்தார். அப்போது அவரின் நெற்றியிலிருந்து வியர்வைத் துளி ஒன்று உதிர்ந்தது. அதிலிருந்து வியர்வை புத்திரன் தோன்றினான்.

சிவன் வியர்வை புத்திரனை அனுப்பி கணபதி, முருகன், சூரியன் மூவரையும் அழைத்து வருமாறு கூறுகின்றார். வியர்வை புத்திரன் சூரியனைத் தாக்கிச் சூரியனின் ஒரு பல்லைப் பிடுங்கினான். பின் அங்கிருந்து விரட்டிவிட்டான். இதனை அறிந்த கணபதியும் முருகனும் கோட்டையை விட்டு வெளியேறி சிவனிடம் வந்தனர். சிவன் அவர்கள் மீது கடுங்கோபம் கொள்கிறார்.

இறுதியாக, திருமால் முப்புராதியார்களிடம் வேடமிட்டுச் சென்று அவர்களின் சிவபக்தியை அழிக்கின்றார். பின்னர் சிவன் முப்புராதியர்களை அழிக்கப் புறப்படுகின்ற நிலை வரையே பாடல் இடம் பெற்றுள்ளது. மீதி கதை கிடைக்கவில்லை. ஆனால் இக்கதை சிவன் முப்புராதியர்களை அழித்த வரலாற்றை இயம்புகிறது என்பது தெளிவு.

**உள்ளடக்கச் செய்திகள்**

இக்கதைப் பாடல் காசிப முனிவர் என்பவர் பதின்மூன்று பெண்களைத் திருமணம் செய்து கொண்டதாகக் குறிப்பிடுகிறது. ஆனால் கதையில் நாககன்னி, தெய்வகன்னி என்ற இருவருடைய பெயர்கள் மட்டுமே குறிப்பிடப்பட்டுள்ளது.

ஆனால், தக்ஷப்பிரசாபதியின் குமாரிகளான அதிதி, ததி, தநு, அநாயு அல்லது காலை, பிரதை அல்லது ஆயு, முனி, சுரசை அல்லது சிங்கிகை, இளை, குரோதவசை, தாமிரை, சுரபி, விந்தை, சுத்ரு முதலியோரைக் காசிப முனி மணமுடித்ததாக அபிதான சிந்தாமணி நூல் குறிப்பிடுகிறது.

மேலும் இவர்களில் அதிதியிடம் ஆதித்தியரையும், திதியிடம் தைத்தியரையும், தநுவிடம் தானவரையும்,

அநாயுவிடம் சித்தரையும், பிரதையிடம் காந்தருவரையும், முனியிடம் அப்சரசுக்களையும், சுரசையிடத்து யக்ஷரையும் இரக்கதரையும், இளையிடத்து விருக்ஷம், கொடி, பூண்டுகளையும், குரோவசையிடம் புலி சிங்கம் முதலிய மிருகங்களையும், தாமிரையிடம் குதிரை கழுதை பக்ஷி முதலியவற்றையும், சுரபியிடம் பசுக்கூட்டங்களையும் விநதையிடம் அருணனையும் கருடனையும், கத்துருவிடம் நாகரையும் பெற்றனர் என்றும் அபிதான சிந்தாமணி நூல் குறிப்பிடுகின்றது.

மேற்கண்ட பதின்மூன்று பெண்களில் யாரும் நாகக்ன்னி, தெய்வகன்னி என்று குறிப்பிடவில்லை. ஆனால் விநதை, கத்துரு என்ற இரு பெண்களையும் ஆசிரியர் முறையே தெய்வகன்னி, நாககன்னியாகத் தமது கதைகளில் குறிப்பிட்டிருக்கலாம் எனக் கருதலாம்.

காரணம், விநதை கருடனையும், கத்துரு நாகராசனையும் பெற்றதாக அபிதான சிந்தாமணியில் குறிப்பு காணப்படுகின்றது. இதே குறிப்பு நாககன்னி கதையிலும் இடம் பெற்றுள்ளது. அதாவது நாககன்னியின் மகன் பாம்பரசன் என்றும், தெய்வ கன்னியினுடைய மகன் கருடாழ்வான் என்றும் ஆசிரியர் குறிப்பிடுகின்றார். எனவே விநதை, கத்துரு என்ற இரண்டு புராண பாத்திரங்களுக்கும் வேறு பெயர் கொடுத்துப் புதிய கதையொன்றை ஆசிரியர் புனைந்துள்ளார் என்பதும் உணர முடிகின்றது. மேலும் ஆசிரியர் வேறு சில புராணக் கூறுகளையும் இக்கதைக்குள் புகுத்தியுள்ளமையும் அறிந்து கொள்ள முடிகின்றது. எனவே நாககன்னி கதை ஒரு புராணப் புனைவுக் கதை என்று கண்டு தெளிய முடிகின்றது. மேலும் இக்தையோடு பின்னிணைப்பாக சிவன் முப்புராதியர்களை அழித்த கதையும் சேர்க்கப்பட்டுள்ளது கவனத்திற்குரியது.

**தெய்வங்கள் குறித்த செய்தி :**

**சிவன் பற்றியவை**

நாககன்னி கதையில் சிவபெருமானின் சிறப்புகள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. மேலும் கதையில் தெய்வகன்னியின் துயர்

நீக்க, பண்டாரக் கோலத்தில் வந்து சிவன் அருள் புரிகின்றார். பின்னிணைப்பு கதையிலும் சிவனின் பெருமைகள் குறித்த செய்திகள் காணப்படுகின்றன. மேலும் சிவனை, ஈஸ்பரன், பண்டாரம், அரந்தன், இறையோன், அரனார், அடியோன் முதலிய பெயர்களில் ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

### திருமால் குறித்த செய்திகள்

நாககன்னி கதையின் பின்னர் இணைத்துப் பாடப்பட்டுள்ள முப்புராதியர் கதையில் திருமாலின் பெருமைகள் விரிவாகக் கூறப்பட்டு உள்ளன.

மேலும் திருமாலின் பெருமையினைச் சுட்ட இராமாயண, மகாபாரதச் செய்திகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

ஆசிரியர் திருமாலை, வெண்ணையுண்ட வாயினால் மண்ணையுண்டவன் என்றும், மண்ணை எல்லாம் ஓரடியில் அளந்தவன் என்றும், கூண்ட திருமாமுனியைக் கொல்லக் கோலம் பூண்ட கோமகன் என்றும், ஆண்ட புகழ் முப்புராதியர் வாழ்வழிக்கக் கோள் சொல்லிய மந்திரி என்றும், குண்டுரலில் கட்டுப்பட்டவன் என்றும், மோதிரக் கையால் குட்டுப்பட்ட மாப்பிள்ளை என்றும், பாம்பினில் பள்ளி கொண்டவன் என்றும், தாடகை அழித்த சமர்த்தன் என்றும், பொய்மானைக் கொன்றவன் என்றும், சூர்ப்பனகையின் சூழ்ச்சியை வென்றவன் என்றும், குரங்குகளை விட்டு இலங்கைக் கோட்டைதனை அழித்தவன் என்றும், இருபது கை ராவணனை இரண்டு கையால் கொன்றவன் என்றும், இரணியனையும் கஞ்சனையும் வதைத்தவன் என்றும் ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

இச்செய்திகள் மூலம் ஆசிரியருக்கு இராமாயணம், மகாபாரதம் முதலிய கதைகளில் ஆழ்ந்த அனுபவமும் தேர்ச்சியும் இருந்தமையும் புலப்படுகின்றது.

### பிற தெய்வங்கள் பற்றிய குறிப்புகள்

நாககன்னி கதையில் கணபதி, முருகப் பெருமான், சூரியக் கடவுள், பிரம்மா, பார்வதி, லெட்சுமி, வியர்வை புத்திரன்,

நாகராஜன், இந்திரன் முதலிய தெய்வங்கள் பற்றிய செய்திகளும் விரவிக் கிடக்கின்றன.

**விலங்குகள் பற்றிய செய்திகள் :**

கதைப்பாடலில் பசு, கரடி, விருது, கீரி, பன்றி, பாம்பு முதலிய விலங்குகளின் பெயர்கள் காணப்படுகின்றன. மேலும் பாம்பினை சர்ப்பம், மலம்பாம்பு (மலைப்பாம்பு), கரும்பாம்பு, நாகம், கடுவன் பாம்பு என்னும் பெயர்களால் குறிப்பிடுகின்றார்.

**பறவை பற்றிய செய்திகள் :**

கிளி, மயில், உக்கில், பொன்னாங்குருவி, கருடாழ்வான் முதலிய பறவைகள் பற்றிய செய்திகளும் காணப்படுகின்றன. அவை பிறந்தமைக்கான காரணங்களும் இதில் குறிப்பிடப் பட்டுள்ளன.

மேற்கண்ட செய்திகளின் மூலம் நாககன்னி கதை என்னும் இக்கதைப்பாடல் புராணக் கதைப்பாடல் என்று கூறலாம். மேலும் இக்கதை மக்களுக்கு பக்திச் சுவையினை ஊட்டும் நிலையிலும் அமைந்துள்ளது.

இக்கதைப் பாடல் அனைவரையும் படிக்கத் தூண்டும் விதத்தில் புனையப் பட்டுள்ள ஒரு சிறந்த புராணக் கதைப் பாடல் எனலாம்.

★★★

# நாககன்னி கதை

(பாட்டு)

பாவலர்கள் புகழ் படைத்த
பங்கயத்தோர் வங்குசத்தில்
நாவுலகில் கீர்த்தி பெற்ற
நல்லசிவ காமுனி¹க்கு
எண்ணி ஐந்து பெண்களிலே
இவர்கள் இருபேருமாக
திண்ணமுறும் நாககன்னி
தெய்வக்ன்னி என்றிருபேர்
அக்காளும் தங்கையுமாய்
ஆக இரு பேருமாய்
மிக்கான தேர்ழியர்கள்
விரைவாக தான் கூடி. (1)

(வசனம்)

அதாவது, காசிபர் என்று சொல்லக் கூடியவர் பதிமூன்று பெண்களை விவாகம் செய்தார். அதில் நாககன்னி*, தெய்வகன்னி என்று சொல்லக் கூடிய இரு பெண்களும் என்ன செய்தார்கள் என்று பார்த்தால்...

(அ-கு) 1. காமுனி - காசியபர் : காசியபர் மாரீசின் என்பவரின் மகன். இக்ஷுவாகு குலத்தைச் சேர்ந்தவர். (வால்மீகி இராமாயணம்)

(பாட்டு)

பூந்தோட்டம் ஒருபுறமாம்
பூஞ்சுனையில் வந்திறங்கி
சாய்ந்தாடும் குழல்மடவா(ர்)
தங்கசுனை ஆடையிலே

ஆகாசம் ஆளுகின்ற
அந்தரத்து வேந்திரனார்
வாகயான வெள்ளையானை
வரவும் கண்டு ஏதோ சொல்வாள்
ஏத்தபுகழ் யானைதன்னை
இளயவள் கண்டு ஏதோ சொல்வாள் (2)

(வசனம்)

அதாவது, அந்த நாககன்னியும், தெய்வகன்னியும் தன்னுடைய தோழிமார்களை அழைத்துக் கொண்டு, பூஞ்சுனையில் இறங்கி, பூஞ்சுனை ஆடக் கூடிய சமயத்தில், திருபாற்கடலில் பிறந்த அயிராவதம் என்று சொல்லக்கூடிய தெய்வேந்திரனுடைய வெள்ளை யானையானது, மேக வாகனமாக வருவதை, இளையவளாகிய தெய்வகன்னி கண்ணில் கண்டு சொல்கிறாள்...

(பாட்டு)

மூத்தவளே எந்தனக்கு
முன்பிறந்த நாககன்னி
வெகுதூரம் தனிலிருந்து
விரைந்தோடி வருவதென்ன
இகழாத படியாலே
என்ன நிறம் சொல்லு பெண்ணே
வெள்ளை என்றாள் தெய்வகன்னி
வெறும் நீலம் என்றாள் நாககன்னி (3)

(வசனம்)

ஏ! அக்கா அதோ வெகுதூரத்திலிருந்து வருகிற யானையது என்ன நிறம்? சொல் பார்க்கலாம், என்று கேட்ட உடனே மூத்தவளாகிய நாககன்னியானவள் சொல்லுகிறாள் "கறுப்பு நிறம்" என்று. உடனே இளையவள் சொல்லுகிறாள்...

(பாட்டு)

வெள்ளையாக வருமானால்
வேலை செய்வாய் நீ எனக்கு
உள்ளபடி கறுப்பானால்
உனக்கு நான் வேலை செய்வேன் (4)

(வசனம்)

"அடியே அக்கா! அந்த யானையானது வெள்ளையாக வருமானால், நீ எனக்கு வேலை செய்ய வேண்டும். உள்ளபடி கறுப்பானால் உனக்கு நான் வேலை செய்வேன்" என்று...

(பாட்டு)

இப்படியே சமர்தமிட்டு
இளையவளும் மூத்தவளும்
மைப்புருவ கன்னியர்கள்
வாது சொல்லி சுனையாட
இளய தெய்வகன்னி பெண் கா(ண)
ஏற்ற வெள்ளை யாகிவர
விரைவாக மூத்தவளை
வெள்ளாட்டி வாடி என்றாள்
வெள்ளாட்டி என்ற போது
மெற்றவே நாணமுற்றாள்
தள்ளாடி தடுமாறி
தலைகவிழ போட்டனளே (5)

(வசனம்)

ஆனால் இருபேரும் சமர்தமிட்டு சுனை ஆடினதில், இளயவள் சொன்னது போல் யானையானது வெள்ளை நிறமாகவே வர, உடனே அக்காள் என்று பாராமல், "அடி வெள்ளாட்டி அந்த யானையைப் பாரடி" என்றாள். உடனே நாககன்னியானவளுக்கு வெட்கம் உண்டாகிச் சொல்கிறாள்...

(பாட்டு)

என்னுடனே தான்பிறந்து
இருந்தாளே சத்துருவாய்
வண்ணமுறும் பெண்கள்முன்னே
மருவாதி கெடுத்தாளே
இளயவளாய் இருந்து கொண்டு
எண்ணாமல் வைததற்கு
தலையை சிரைத்தவளை
சம்பரன்மேல் ஏற்றிடுவேன்
கொடுக்கதிலே கண்ணிபோட்டு

குரங்காட்டம் கொண்டிடுவேன்
ஏவல் செய்ய விடுவேனோ
இதுவும் ஒரு வல்லமையோ
வெள்ளை கறுப் பாகாதோ
வெள்ளாட்டி ஆவாளோ (6)

(வசனம்)

ஆனால், உடன் பிறந்தார் என்று எண்ணவே கூடாது. "உடன்பிறந்தே கொல்லும் வியாதி"[1] என்று, "சுடுதியில் முறயம் இடுவது போல்"[2] இத்தனை பெண்கள் நிற்கக் கூடிய இடத்தில், அக்காள் என்று பாராமல் வாடி என்றும், போடி என்றும், வெள்ளாட்டி என்றும் வசை பேசி விட்டாள் அல்லவா! இவள் தலையைச் சிரைத்து, சம்பரன் என்று சொல்லக்கூடிய கழுதையின் மேல் ஏற்றி அடிக்கிறேன் பார். கொடுக்கதிலே கண்ணி போட்டு குரங்காட்டம் கொள்கிறேன். இந்த வெள்ளை கறுப்பாகாதா! வெள்ளாட்டி ஆகிடுவாளா! அதை இப்பொழுதே பார்க்கிறேன் என்று என்ன செய்தாளானால்...

(அ-கு) 1, 2 - பழமொழி.

(பாட்டு)

என்று சொல்லி நாககன்னி
எடுத்தாளே சீங்குழலை
மன்றடந்த பூங்குழலாள்
வாசித்தாளே வீணைதன்னை
காட்டுமரம் மானிலங்க
கல் பசுவும் பால்சுரக்க
பட்டமரம் இலை தளுக்க .
பாடினாளே ராகமது
கிளி மொழியாள் சங்கீதம்
கேட்டானே கார்கோடன்
சீரான சங்கீதம்
செவிகுளிர(க்) கேட்டபோது
மடக்கொடிமார் தங்கள்முன்னே
வாரானே கார்கோடன்
பாம்பரசன் வந்து நின்று
பயங்கரமாய்(த்)தான் கேட்டான் (7)

(வசனம்)

ஆனால், நாககன்னியானவள் சீங்குழல் வாசித்த இனிமையான கீதத்தால், காட்டில் வாழக்கூடிய பட்சி பறவைகள் எல்லாம் அப்படியே அசையாது காது கொடுத்துக் கேட்கிறதாம். அதுமட்டுமல்ல, பட்ட மரங்கள் இலை தளிர்க்க, கல் பசுக்கள் பால் சுரக்க, தன் மகனாகிய ஆதிசேடனும் காதில் கேட்டு, தாயிடம் வந்து, "அம்மா! எனையழைத்த காரணம் ஏதென்று" கேட்க, நாககன்னி யானவள் சொல்கிறாள். "அப்பா மகனே!...

(பாட்டு)

எனக்கிளய தெய்வகன்னி
இடும் சமர்தம் வென்று கொண்டாள்
தனக்கு நான் வேலை செய்ய
சம்மதமாய் இருக்குதில்லை
தொடுத்த வெள்ளை கறுப்பாக
துணிந்து நீயும் செய்ததுண்டால்
எடுத்த எடுத்த விதத்துக்கெல்லாம்
எனக்கெதிரி ஒருவரில்லை (8)

(வசனம்)

"உனை அழைத்த காரணம், நானும் எனது தங்கையாகிய தெய்வகன்னியும் சமர்தமிட்டு சுனை ஆடினோம். அதில் அவள் அந்த சமர்தத்தை வென்று கொண்டாள். அன்று முதல் அவளுக்கு நான் அடிமை வேலை செய்ய வேண்டுமாம். அவளுக்கு நிகர் யாருமே இல்லையாம். அவள் திமிரை அடக்க வேண்டும். நீ அந்த வெள்ளை யானையைக் கறுப்பாகச் செய்து விட்டால் போதும்" என்று சொல்ல, பாம்பரசன் என்ன செய்தான் என்று பார்த்தால்...

(பாட்டு)

ஒருநாகம் தன் படத்தை
உயரவே தான் விரித்து
கள்ளமற்(ற) நிலாவுதன்னை
கறுப்பாக்கி(ப்) போட்டானே'
கறுப்பான காரணத்தை(க்)

*கண்டு நாககன்னி சொல்வாள்*
*மறுத்து இனிமேல் பேசாதே*
*வாடி என்று மயிர்பிடித்தாள்*
*மயிர் பிடித்த நடையொடியாள்*
*மருவாதி கெடுத்தவளை*
*வெடுவெடென நாககன்னி*
*வீடதிலே கொண்டுவந்தாள்*
*வீட்டில் உள்ள வேலை எல்லாம்*
*வெள்ளாட்டி செய்வாயென்றாள்* (9)

*(அ-கு) 1* - புராணக் கதை

(வசனம்)

ஆனால், பாம்பரசன் அந்த யானையைத் தன் படத்தை விரித்து கறுப்பாக்கி விட்டான். உடனே இதைக் கண்ட நாககன்னியானவள் தெய்வகன்னியைப் பார்த்து, "அடி! வெள்ளாட்டி இங்கே வாடி, அந்த யானையைப் பாரடி" என்று தலைமயிரைப் பிடித்து, கடகடவென்று இழுத்து, தன் வீட்டில் உள்ள வேலை எல்லாம் செய்யடி என்றாள். உடனே...

(பாட்டு)

*வீடுமுத்தம் தூத்திடுவாள்*
*மெழுகி வாசல் நீரெடுப்பாள்*
*சாடிமுட்ட பால்காய்த்து*
*தனியே மோர் கடைந்திடுவாள்*
*நித்தியமும் ஒரு கோட்டை*
*நெல்புழுங்கல் குத்திடுவாள்*
*அத்தனையும் அரக்கோட்டை*
*அரிசி கறி சமைத்திடுவாள்*
*ஏசிடுவாள் என்று சொல்லி*
*இருபத்தொரு கறி சமைப்பாள்*
*வைதிடுவாள் என்று சொல்லி*
*வ(கை) வ(கை)யாய் கறி சமைப்பாள்*
*க(றை)றயறவே சாம்பலிட்டு*
*கலங்கழுவி சோறிடுவாள்*
*நாககன்னி உண்ணுமட்டும்*

நட்டமாய் நின்றிடுவாள்
பாகுபெற உண்டபின்பு
பால் கடப்பான் பிடித்திடுவாள் (10)

(வசனம்)

ஆனால் தெய்வகன்னியானவள் எவ்விதமாக வேலை செய்தாள் என்றால், காலையில் எழுந்ததும் வீடு வாசல் முற்றங்களைத் தூத்து, பெருக்கி, தண்ணீர் எடுத்து வைக்க வேண்டும். ஒரு சாடி பால் காய்த்து போாராகக் கடைய வேண்டும்.

நித்தியமும் ஒரு கோட்டை நெல் புழுங்கல் குத்தி, அரைக்கோட்டை அரிசி சமைக்க வேண்டும். அத்தனைக்கும் விதவிதமாக இருபத்தொரு கறி சமைக்க வேண்டும். வைத்தாலும் போதாது, கலங்களெல்லாம் கறையாமல் பூசிச் சோறிட்டு வைக்க வேண்டும். நாககன்னி சாப்பிட்டு கை விளக்கின உடனே, வெற்றிலைச் சுருள் மடக்கி அவள் வாயில் கொடுக்க வேண்டும். இவ்விதமாக...

(பாட்டு)

இருபது பேர் வேலைதன்னை
இவள் ஒரு(த்)தி செய்திட்டாலும்
வேர்த்தால் தான் குளிக்க ஒட்டாள்
வெற்றிலையும் தின்ன ஒட்டாள்
சடைந்த தென்று இருக்க ஒட்டாள்
தலைகோதி முடிய ஒட்டாள்
வளப்பமிட பழக்கமிட
மறுவீட்டில் போகவொட்டாள்
நித்திரையும் பண்ண ஒட்டாள்
நிறய சோறு உண்ணவொட்டாள்
குனிந்து விட்டு நிமிர்ந்தாளானால்
கொட்டிடுவாள் சென்னியிலே. (11)

(வசனம்)

ஆனால், அந்த(ப்) பெண்கொடியானவள், இருபது பேர் செய்ய(க்) கூடிய வேலையை இவள் ஒருத்தியே செய்த போதிலும், வேர்த்தால்தான் குளிக்க ஒட்டாளா, வெத்திலை

தான் தின்ன ஒட்டாளா, தலை கோரி முடிய உட்டாளா, வயறார சாப்பிட விட்டாளா, வளப்பமிட, பழக்கமிட மறுவீட்டிற்கு தான் போக விட்டாளா, குனிந்து விட்டு நிமிர்ந்தாளானால் கொட்டிடுவாள் சென்னியிலே! இவ்விதமாக...

(பாட்டு)

*அநியாய பாவிமுன்னே*
*அழுதழுது வேலைசெய்தாள்*
*அடிபடவும் மிதிபடவும்*
*அவள் ஏள்ச்சி கேட்பதற்கும்*
*கொடியாள்தான் நான்பாவி*
*கொண்டு வந்தகுறைதானே*
*என்சிறைதான் மீளாதோ*
*இளவரசே பெருமானே*
*பெண்சிறைதான் மீளாதோ*
*பெருமானே திருமாலே*
*கண்பாராயோ சிவனே*
*சிவனை தானினைத்தாள்*
*ஆவலுடன் ஈஸ்பரனார்*
*அடயாள முத்தி(ரை)ரயாம்* (12)

(வசனம்)

ஆனால் பெண்ணானவள் நாககன்னியிடம் அடியும் மிதியும்பட்டு வேலை செய்ய ஏலாமல் அந்த சிவபெருமானை நினைத்துப் புலம்புகிறாள், "ஏ தெய்வமே! என்னைப் போல் உள்ள பெண்கள் இப்படித்தானா கஸ்டப்படுகிறார்கள். எனக்கு அன்று ஆண்டவன் என் தலையில் எழுதிய எழுத்தா, என் சிறைதான் மீளாதோ, எனக்கொரு நல்கெதி கிடையாதா" என்று சிவபெருமானை நினைத்துப் புலம்புகிறாள். அந்தச் சமயத்தில்...

(பாட்டு)

*பாவையுட சிறைதீர*
*பண்டார வடிவெடுத்தார்*
*கப்பறயாம் பொக்கணமாம்*

கந்தயுட திருப்புரமாம்
அப்புநல்ல திருச்சடயாம்
அதன் மேல இளம்பிறயாம்
பிலத்தகண்ட கோடாலி
பெரியதிரு சூலமுடன்
தெண்தென்னை முகந்துகொண்டு
சிற்றாண்டை இடைபிடித்தார்
வாட்டமுற்ற தெருக்களெல்லாம்
மணிகிலுக்கி இசல்பாடி
நாட்டமுடன் திடுதிடென
நாககன்னி வீட்டில் வந்தார். (13)

(வசனம்)

ஆனால், தெய்வகன்னியுடைய சிறையை மீட்பதற்காகச் சிவபெருமான் ஒரு பண்டாரக் கோலங் கொண்டு, தெருக்கள் தோறும் மணி கிலுக்கி, இசல்பாடி, நாககன்னி வீட்டில் வந்து பிச்சை கேட்கின்றார். எவ்விதமானால்....

(பாட்டு)

பசிக்குதடி தாய்மாரே
பட்டினியால் இங்கு வந்தேன்
பொசிப்பதற்கு ஏற்றபண்டம்
போட்டனுப்பு தாய்மாரே
இந்தமுத்தம் தனிலே வந்து
எத்தனையோ நேரமாச்சி
வந்து பிச்சை போடாயோ
மறுவீட்டில் போய்விடட்டோ (14)

(வசனம்)

அதாவது, பண்டாரமானவர் நாககன்னியு(டை)டய வீட்டில் வந்து, அம்மா மிகவும் பசியாக இருக்கிறது. எனக்குப் பொசிக்கிறதுக்கு ஏதாவது போடுங்கள். தாய்மாரே! என்று சத்தமிடுகிறார். அந்தச் சமயத்தில், நாககன்னியானவள்...

(பாடல்)

மெய்குழலாள் நாககன்னி
முக்காலி மேலிருந்து

அய்யமிடும் பண்டாரம்
அவசரமாய் நிற்குகிறார்
ஏண்டி நீ வெள்ளாட்டி
இறுமாப்பாய் நிற்குகிறாய்
முதுகிலடி படுவதற்கோ
முகங்கோணி நிற்குகிறாய்
ஆண்டி வந்து நின்றதுண்டால்
அன்னமிடக் கூடாதோ
பதிவுவேலை செய்யுமுன்னே
பண்டாரம் தனையனுப்பு (15)

(வசனம்)

ஆனால், பண்டாரமானவர் இட்ட சத்தமதைக் கேட்ட நாககன்னியானவள், "காதில் கேட்டியாடி, அந்தப் பண்டாரமானவர் என்ன சத்தமிடுகிறார். பண்டாரம் பரதேசிமார்கள் வந்தால் அவர்களுக்குப் போட வேண்டிய பிச்சயைப் போட்டு அனுப்பி விட்டு, வேலைகளைச் செய்யடி. மதம் பிடித்தவள் போல் நிற்கிறாயே! முதுகில் அடிபட வேண்டுமா?" என்று சத்தமிட்ட உடனே, தெய்வ கன்னியானவள் என்ன செய்தாள் என்று பார்த்தால்...

(பாட்டு)

கைதனிலே பிச்சைகொண்டு
காலேற மாட்டாமல்
மைவிழியாள் அழுதகண்ணீர்
மணி மார்போட தான்சொரிய
வேறொருவர் அறியாமல்
விம்மி விம்மி அழுது கொண்டு
சீறி நின்ற பண்டாரம்
திரு முன்பதிலே பிச்சை என்றாள்
மாறி நின்று ஆண்டாரும்
மறுவார்த்தை ஏதோ சொல்லுவார(ா)ம் (16)

(வசனம்)

ஆனால் தெய்வகன்னியானவளைப் பார்த்து, நாககன்னி யானவள் பேசிய வார்த்தையைக் கேட்டு, தெய்வகன்னி யானவள் கைதனிலே பிச்சை கொண்டு, கண்ணீரைச் சிந்திக்

கொண்டு, பண்டாரம் முன்னே வந்தாள். அதைக் கண்ட பண்டாரம் சொல்கிறார்...

(பாட்டு)

அழுது பிச்சை போடாதே
அரந்தனுக்கு ஏறாது
தொழுதுபிச்சை போட்டதுண்டால்
என் சுரக்கூடும் வெறும் பீத்தல்
என்று சொன்ன வார்த்தை கேட்டு
வள்ளலே பிச்சைதன்னை
வாங்குவாயோ வாங்கலையோ
உள்ள பிச்சை வாங்காமல்
ஊர் சோலி* ஏதுமக்கு. (17)

(அ-கு) *சோலி - வேலை

(வசனம்)

ஆனால், தெய்வகன்னியானவள், அழுது கொண்டு பிச்சை போடுவதைக் கண்ட பண்டாரமானவர் சொல்லுகின்றார், "கண்மணி! நீ அழுது பிச்சை போடாதே! அந்த அரந்தனுக்கு ஏறாது. சந்தோஷமாய் பிச்சையிட்டால் என் சுரக்கூடும் தாங்காது.

(இடத்த வசனம்)

"ஓய் பண்டாரம்! பிச்சைக்கு வந்த உமக்கு போட்ட பிச்சையை வாங்கிக் கொண்டு தானே போக வேண்டும். உன் வீட்டுச் சங்கதி என்ன? நீ அழுத வகை என்ன? அடுத்த வீட்டுச் சங்கதி என்ன? என்று சோதிக்கிறது தான் உமது வேலையா?" என்று பெண்ணானவள் சொல்ல, பண்டாரமானவர் சொல்லுகின்றார்...

(பாட்டு)

அழுதவகை சொல்லாமல்
ஆண்டிபிச்சை வாங்குவேனோ
கலந்து மொழி பேசுமுன்னே
கல்லெடுத்தும் எறியாதே
அந்த வார்த்தை தனை கேட்டு

*ஆயிளையாள் ஏது சொல்வாள்*
*அழுதுவகை சொன்னதுண்டால்*
*ஆண்டியாலே தீந்திடுமோ*
*ஆண்டியாலே தீராவிட்டால்*
*ஆராலே தீரும் பெண்ணே*
*மானணைய் முன்னடந்த*
*வைபோகம் சொல்லுபெண்ணே* (18)

(வசனம்)

ஆனால் பண்டாரமானவர் சொல்லுகின்றார். "கண்மணி! நீ அழுத வகை சொல்லாமல் இந்த ஆண்டி ஒரு போதும் பிச்சை வாங்கவே மாட்டான்" என்று சொல்ல, பெண்ணானவள் கேட்கின்றாள். "ஓய்! பண்டாரம் நான் அழுத வகை சொன்னால் உம்மால் தீர்க்க முடியுமா?...

(இடத்த வசனம்)

"கண்மணி! நான் இந்த உலகத்தில் அறியாத சங்கதி ஒன்றுமே இல்லை. சும்மா உன் கவலையைச் சொல்" என்றார். உடனே தெய்வகன்னியானவள்...

(பாட்டு)

*நீராட போனதுவும்*
*நெடுஞ்சமர்தம் இட்டதுவும்*
*கூர்விழியாள் நாககன்னி*
*குசல வித்தைச் செய்ததுவும்*
*ஆறிரண்டு வருஷமாக*
*அவளுக்கடிமை ஆனதுவும்*
*பட்டபட்ட துயரமெல்லாம்*
*பண்டாரத்தோடுரைத்தாள்.* (19)

(வசனம்)

'சுவாமி! நானும் என் அக்காளாகிய நாககன்னியும் சமர்தமிட்டு சுனை ஆடினோம். அதில் அவள் அந்த சமர்தத்தை வென்று கொண்டாள். அன்று முதல் நான் அவளுக்கு அடிமை வேலை செய்து வருகிறேன், பன்னிரண்டு வருடமாக. இப்பொழுது என்னால் வேலை செய்ய

முடியவில்லை சுவாமி. அதனால் அடிக்கிறாள் மிதிக்கிறாள்" என்றாள். உடனே பண்டாரமானவர்...

(பாட்டு)

பாவையுட சிறைதீர
பரலேழு கைகொடுத்தார்
கொடுத்த பரல் ஏழதையும்
கும்பிட்டம்மை வாங்குவாளாம்
இந்தப் பரல் ஏழதையும்
என்ன செய்வேன் இறயோனே
நாககன்னி அறியாமல்
நற்செப்பு குள்ளடைத்து
தீர்க்கமுடன் நாற்பத்தொன்று
சென்ற உடன் திறந்துபாரு
அன்று உன் சிறைதீருமென்று
அடியவரும் மறைந்துவிட்டார். (20)

(வசனம்)

ஆனால், பண்டாரமானவர் தெய்வகன்னியுடைய சிறை திரும்படியாக ஏழு மணியாம் பரல் கொடுத்து, "கண்மணி! உன் அக்காளாகிய நாககன்னிக்கறியாமல் ஒரு பொற் செப்புக்குள்ளடைத்து, நாற்பத்தொரு நாள் கழித்து பார். அன்று உன் சிறை தீரும்" என்று சொல்லி விட்டு, பண்டாரமானவர் மறைந்து விட்டார்.

(பாட்டு)

போற்றியவர் சொல்படிக்கு
பொற் செப்புக்குள்ளடைத்து
தீர்க்கமுடன் நாற்பத்தொன்று
சென்ற உடன் திறந்து பார்த்தாள்
உக்கிலுடனே கீரி
உகந்தபன்றி விருதுடனே
சிக்கனவே மயில்கரடி
சிறந்த கெருடன்தான் பிறந்தான்
பாம்புக்குப் பகையாக
பலமிருகம் பிறந்திடுமாம் (21)

(வசனம்)

ஆனால், தெய்வகன்னியானவள், பண்டாரம் சொன்னது போல் பொற் செப்புக்குள் அடைத்து, நாற்பத்தொரு நாள் கழித்துத் திறந்து பார்த்தாள். அங்கே யாரெல்லாம் பிறந்தார்கள் என்று பார்த்தால், உக்கில், கீரி, பன்றி, விருது, மயில், கரடி, கெருடன் - இப்படி ஏழு சீவ சந்துக்கள் வந்து பிறந்தன.

(பாடல்)

*கெருடன் வந்து பிறந்த செய்தி*
*கேட்டானே கார்கோடன்*
*கும்பாத கெருடை யாள்வான்*
*கொல்லுவான் நம்மை என்று*
*பாம்பாக இருந்தவன்தான்*
*பாப்பானாய் வடிவெடுத்து*
*பதுங்கி அங்கே கிடவாமல்*
*சாக்காலம் அறியாமல்*
*தையலை போய்கைபிடித்தான் (22)*

(வசனம்)

ஆனால், கெருடன் வந்து பிறந்த செய்தியை அந்தக் கார்கோடன் காதில் கேட்டு, இனி நம்மை உயிருடன் வைக்கமாட்டான் என்று, பாம்பாக இருந்தவன் பார்ப்பானாய் வடிவெடுத்து அன்னிய தேசத்தில் போய் ஒரு பிராமண ஸ்திரியைக் கைப்பிடித்துத் திருமணம் செய்து கொண்டான்.

(பாட்டு)

*கைபிடித்த பெண்ணோடே*
*கலந்துறவு செய்யாமல்*
*மாலையிட்ட பெண்ணோடே*
*கட்டிலிலே படுத்திருந்தால்*
*கதவடையை உருட்டுவானாம்*
*ஒட்டியங்கே படுத்திருந்தால்*
*உலக்கையைபோல் நெளியுவானாம்*
*முத்தமிடும் வேளையிலே*
*முகத்தில் எட்டிக்கடிப்பானாம் (23)*

(வசனம்)

ஆனால் பார்ப்பானாகிய பாம்பரசன் என்ன செய்தான் என்றால். கைபிடித்த பெண்ணோடு கட்டிலிலே படுத்திருந்தால் திடீரென்று கீழே விழுந்து கதவடையை உருட்டி பானை சட்டிகளை எல்லாம் உடைப்பதும், உடனே அந்தப் பெண்ணானவள் அய்யோ! நமது கணவர் கீழே விழுந்து விட்டாரே! என்று தூக்கிக் கட்டிலில் கிடத்தி அணைத்துப் படுத்திருந்தால், ஒரு பெரிய உலக்கையைப் போல் நெளியுவானாம். முத்தமிடக் கூடிய சமயம் சீத்தென்று கொத்துவானாம். அதுமட்டுமா! இன்னும் கேளுங்கள்...

(பாட்டு)

வரிவரியாய் இருக்குதடி
வாய்பிளந்து சீறுதடி
நாக்கை நாக்கை நீட்டுதடி
நச்சலிபோல் வெட்டுதடி
சொன்னதெல்லாம் கேட்டதற்கு(த்)
தோலுரித்த புள்ளியடி
பக்குவதி நானல்லவோ
பதினாறு வயதல்லவோ
முக்கு முக்கென்றிருந்தாலும்
முகக்குறிப்பு தெரியாதோ
தன்னை அறியாத பேருக்கு
சமுசாரம் தேடுவதேன் (24)

(வசனம்)

ஆனால் பெண்ணானவள் கணவனைப் பார்த்து உரைக்கின்றாள். "வரிவரியாய் இருக்கிறதே! முத்தமிடும் சமயத்திலே சீத்தென்று கொத்துகிறீர்கள். ஒரு புருஷன் பெண்சாதி என்றிருந்தால் ஒரு விளையாட்டு, ஒரு சரசம், ஒரு நளினம் பேசிக் கொண்டிருக்க வேண்டாமா. நானோ பதினாறு வயது வாலிபப் பெண்ணல்லவா! உங்களை என்னால் புரிந்து கொள்ளவே முடியல. உங்கள் உண்மையான வடிவைத்தான் காட்டுங்களேன்" என்றாள். உடனே பாம்பரசன் சொல்கிறான்...

(பாட்டு)

என்வடிவை கண்டதுண்டால்
ஏந்திழையே பயப்படுவாய்
வட்டிலிலே பால்பழமும்
மறய வைத்து பார்த்து நின்றால்
என்வடிவை(க்) காட்டுகிறேன்
ஏந்திழையே பாருமென்றான்
அந்த மொழி தனை(க்)கேட்ட
ஆயிழையும் ஏது செய்தாள் (25)

(வசனம்)

ஆனால் பெண்மணி சொன்ன வார்த்தையைக் கேட்ட பாம்பரசன் சொல்வான். "கண்மணி என் உண்மையான வடிவைக் கண்டால் பயந்திடுவாய். அப்படியே பார்க்க வேண்டுமானால் ஒரு வட்டிலில் பாலும் பழமும் மறய வைத்துப் பார்த்து நின்றால் என் வடிவைக் காட்டுகிறேன்" என்றான்.

உடனே பெண்ணானவள் வட்டிலையும் சட்டியையும் பறக்கிக் கொண்டு தெருவோடு ஓடுகிறாள். அந்தச் சமயத்தில் தெருவில் கண்ட பெண்கள் கேட்கின்றார்கள்...

(இடத்த வசனம்)

"ஏ! பிராமணி! உனக்குக் கலியாணம் ஆகிக் கொஞ்ச நாளாகி விட்டதல்லவா! உன் கணவனை வெளியே காணவே இல்லையே! நொண்டியா! சப்பாணியா! கூனா! குருடனா! என்று கேட்க, பிராமணி சொல்கிறாள்...

(வலத்த வசனம்)

"அம்மாமாரே! ஒன்றும் பேசாதீங்க. என் புருஷன் அப்படி ஒன்றுமில்லை. அவருக்குப் பால்பழம் வாங்கப் போகிறேன்" என்றாள்.

(பாட்டு)

பால்பழமும் வாங்கிவந்து
பாவையரும் ஏதுசெய்வாள்
வட்டிலிலே பால்பழமும்

மறயவைத்து(ப்) பார்த்துநின்றாள்
பார்த்து நிற்கும் வேளையிலே
பாம்புவடிவு எடுத்தானே பவி
முகடு தனில் வாலை சுற்றி
முதுகுதனை நேர்நீட்டி
ஒருராஞ்சி தலைதனிலே
ஒளிவீசும் நாகமணி
பாரநல்ல சுளகது போல்
படம் விரித்து ஆடுவானாம்
பார்த்து நின்ற பெண் கொடியாள்
பாம்(பெ)பனவே அபாயமிட்டாள் (26)

(வசனம்)

ஆனால், பெண்ணானவள் வட்டிலிலே பால் பழமும் வைத்து மறைந்து நின்று பார்க்கக் கூடிய சமயத்தில், பாம்பரசன் பாலைக் குடிப்பதற்காக முகட்டிலே வாலைச் சுற்றித் தலைகீழாகத் தூங்கி, தன் படத்தை விரித்து ஆடுகிறார். அதைக்கண்ட பெண்ணானவள் பயந்து சத்தமிடுகிறாள். எவ்விதமானால்...

(பாட்டு)

அக்கா அக்கா என்புருஷன்
ஆள்கடுவான் பாம்பல்லவோ
மாப்பிள்ளைக்கு முகம்வீங்கி
மலம்பாம்பை வைத்திருந்தேன்
கணவனுக்கு ஆசைகொண்டு
கரும்பாம்பை வைத்திருந்தேன்
சாப்பிடப்பால் வாங்குதடி
தலைகீழாய் தொங்குதடி
நஞ்சிருந்து காவுதடி
நாகமிருந்து இலங்குதடி (27)

(வசனம்)

“ஏ அக்காமாரே! அடுத்த வீட்டு பெண்களே! அழகான கணவன் என்று ஆணவமாய் நானிருந்தேன். சண்டாளன் ஆள் கடுவான் பாம்பாக இருந்திருக்கிறான். மாப்பிள்ளைக்கு ஆசை கொண்டு மலப்பாம்பை வைத்து இருக்கிறேன். நான்

கணவனுக்கு ஆசை கொண்டு கரும்பாம்பை வைத்திருக்கிறேன்," என்று மீண்டும் சொல்கிறாள்...

(பாட்டு)

*தூட்டையிலே கறியேற*
*சோறுபோட்டு வளத்தேனே*
*காடுவெட்டி முறிந்தவன்போல்*
*கண்முழியா தூங்குகிறான்*
*சண்டாள பாம்பனுக்கு*
*என்னை(த்) தாலிகட்டி வைத்தாரே*
*திண்ணமுடன் தாலிகட்டி*
*தேடிவிட வந்தவனோ*
*கன்னமிட வந்தவண்டி*
*கற்பழித்த சர்ப்பமடி*
*மாப்பிள்ளை பாம்பாச்சுதடி*
*வலக்காரம் போச்சுதடி* (28)

(வசனம்)

ஆனால், அந்தப் பெண்ணானவள் சொல்கிறாள். நான் தூட்டையிலே கறியேற சோறு போட்டு வளர்த்தேனே. இவன் எனக்குத் தேடிவிட வந்தவன் இல்லை; தீண்டி விட வந்தவன். இவன் என்னைக் கன்னமிட வந்தவன்; கற்பழித்த பாவி என்று மீண்டும் சொல்கிறாள்...

(பாட்டு)

*கூட்டிலடை பாம்போடே*
*குடியிருந்தும் கெட்டேனே*
*பெட்டிலடை பாம்போடே*
*பெண்டிருந்தும் கெட்டேனே*
*வீட்டெலியை(க்) கருவறுத்த*
*வெறும்பாம்பை நம்பிவிட்டேன்*
*ஆண்பிள்ளையாய் கம்புகொண்டு*
*அடிவாருங்கோ மலம்பாம்பை*
*கருங்காலி உலக்கை கொண்டு*
*கண்தவிர போடுங்கடி*
*முள்முருங்கை(க்)கம்பு கொண்டு*
*முதுகடியாய் அடிவாருங்கோ*

ஆமணக்கன் கம்பு கொண்டு
அடிவாருங்கோ பறப்பாம்பை* (29)

(அ-கு) *பறப்பாம்பு - இகழ்வுபடுத்திச் சொல்லுதல்.

(வசனம்)

ஆனால் பெண்ணானவள் அழுது புலம்பி, பரிதவித்து சொல்கிறாள். "நான் வீட்டெலியைக் கருவறுத்த வெறும் பாம்பை நம்பி விட்டேன். ஏ ஆண் பிள்ளைகளே! அடுத்த வீட்டு அண்ணன் தம்பிமாரே! இங்கே வாருங்கள். இந்தப் பாம்பைக் கருங்காலி உலக்கை கொண்டு கண் தவிர போடுங்கள். முள்முருங்கைக் கம்பு கொண்டு முதுகடியாய்ப் போடுங்கோ" என்றுரைத்த சத்தம் கேட்டு எல்லோரும் கம்பு தடிகளைப் பறக்கிக் கொண்டு வந்து பார்க்கக் கூடிய சமயத்தில், சண்டாளன் பாலும் பழத்தையும் தின்று வீடு நிறைய ஒரே பாம்பாகக் கிடக்கிறான். இதைக் கண்டவர்கள் பெண்மணியைப் பார்த்துச் சொல்லுகின்றார்கள். "ஏ பிராமணி! உன் புருசனைக் கூப்பிட்டுத்தான் அடிக்கக் கூடாதா" என்று கேட்க, "அந்தச் சண்டாளன் தான் இப்படிப் பாம்பாகக் கிடக்கிறான்" என்று சொல்ல, எல்லோரும் பாம்பு பாம்பு என்று சத்தமிட, அங்கே யார் வருகிறார் என்று பார்த்தால்...

(பாட்டு)

பாம்பென்ற சத்தம் கேட்டு
பறந்து வாறான் கருடாழ்வான்
அழியாத பகைவன் வந்து
அகப்பட்டான் என்று சொல்லி
கரும்பாம்பின் தன்மேலே
கண்போட்டான் கருடையாழ்வான்
திரும்பியே பாராமல்
சிறகடி கொண்டு பறந்தானே. (30)

(வசனம்)

ஆனால், பெண்களெல்லாம் சேர்ந்து, "பாம்பு! பாம்பு!" என்று சத்தமிட்டதை அந்தக் கெருடையாழ்வான் காதில் கேட்டு, ஒரு நாளும் அகப்படாத பகைவன் இன்று அகப்

பட்டான் என்று சொல்லி, பறந்து வருகிறான் கெருடையாழ்வான்.

(பாட்டு)

*சிறகடியுடனே அலைகடலதிர*
*திசை விளி அரவம் பருதலை குழைய*
*கமுருறு தலையை குடியாய் விரித்து*
*காலால் நகங்கொண்டு கீறிய உடலை*
*பல்லுடையும்படி கல்லிலே மோதி*
*பண்பொடு வைரகண்கள் பிதுங்க*
*நல்லதோர் வெள்ளயை மறைத்ததும் நீயோ*
*நாககன்னிக் குபகாரியும் நீயோ*
*தனயனும் ஆனாய் சத்துருவானாய்*
*தாயாரை(ச்) சிறை வைத்ததினால்*
*கமுருறு தலையைக் குடயாய் விரித்து*
*காலால் நகங்கொண்டு கீறிய உடலை*
*பிளந்து வெள்ளை சாரதயாக்கி*
*பின்போடு தாயார் சிறையதை நீக்கி*
*விளங்கிய அந்தரம் மீதில் பறந்து*
*வேணி அரனார் வெள்ளி கைலாஷம் அடைந்தாரே. (31)*

(வேறு சந்தம்)

*கார்கோடன் தனை வதைத்து கைலையிலே சொல்லுவாராம்*
*கீர்த்தியுள்ள ஈஸ்பரனை கெருடையாழ்வான் தான் வணங்கி*
*எல்லோர்க்கும் பொதுவாக ஏழைபங்கில் இருப்பவரே*
*வல்லமையாய் பிறவிசெய்து வரவழைத்த காரணமேன்*
*சொல்வதுகேள் கருடையாழ்வான் துலங்கும் முப்புராதியர்கள்*
*செல்வத்தின் முடுக்காலே தெரியாத படிதானோ*
*தெரியாத படிதானோ தெய்வாரை(ச்) சிறை(ப்)பிடித்தான்*
*அந்தரத்து தெய்வாரை அநியாயம் பண்ணுகிறான்*
*என்னுடைய பார்வதியே யானுமே அல்லாது*
*அன்னவர்கள் கையாலே அடிபடாத தேவரில்லை*
*இப்படியே பார்த்திருக்க எண்ணமுண்டோ கெருடையாழ்வான்*
*கோரணியால் எந்தனக்கு கூத்தாடவோ வேலை*
*அப்படியே முப்புரத்தை அழிப்பதற்கு ஒருவரில்லை*
*நாரணனார் அல்லாது நம்மாலே செல்லாது*
*அச்சுதரை விரைவாக அழைத்து வாடா கெருடைய(ா)ழ்வான்*
*தோளிலே எடுத்தவரை சுமந்து கொண்டாயிலும் வருவாய்*

செப்பமுள்ள கெருடையாழ்வான் சிவன் ஏவல் தட்டாமல்
பறந்து சென்று பால்கடலில் பரப்பை எல்லாம் தேடுவானாம்
காலதுதான் வடக்காக கனகமுடி தெக்காக
மேல் திசைக்கு முகமாக மெத்தையொரு பாம்பாக
உசந்த திரைகடலிலே ஊஞ்சலிலே அசைந்தாப்போல்
அறிந்தும் அறியாதவர் போல் அவருறங்கும் வேளையிலே
தேவருட பூங்காவிலே சிறகாலே பூவெடுத்து
கோவிந்தனார் மேல்தூவி கும்பிட்டானே கெருடையாழ்வான்
அரிநெடுமால் முழித்திளகி அச்சமர கைகாயகாட்டி
வரலாறும் இப்போது வருவானே கெருடையாழ்வான்
கடல் பொங்கி வந்ததுண்டோ கனகமலை நகண்டதுண்டோ
அடலுலகம் பதினாலும் அழகுலைந்து போனதுண்டோ
சந்திரர்கள் சூரியர்கள் தவம் குலைந்து போனதுண்டோ
கலகமிட்ட முப்புராதி காரணங்கள் தானேதோ
அதுகளொன்றும் நானறியேன் அச்சுதரை(க்) கூப்(பி)ட
வந்தேன்
எனக்கேதும் வாகனங்கள் இல்லையடா கெருடையாழ்வான்
உமக்கேனும் வாகனமாய் ஓடிஇங்கே வந்தேனென்றான்
எப்படி(த்)தான் எனை(ச்) சுமப்பாய் ஏற்றமுள்ள
கெருடையாழ்வான்
ஓரிறகால் உமை(ச்)சுமப்பேன் ஓரிறகால் குடைபிடிப்பேன்
நடையிலே தூங்கிடுவீர் நமக்குமுன்னே வரமாட்டீர்
இடவழியில் அலையாமல் என்முதுகில் ஏறுமென்றார்
கெருடனுட வார்த்தை(க்) கேட்டு கெட்டி கெட்டி என
சிரித்தார்
ஓரிறகில் அவர் ஏற ஓரிறகால் குடைபிடிக்க
வரமுடைய திருக்கெருடன் வாகனத்தில் ஏறி
பள்ளிகொண்டாரே.
(32)

(வேறு சந்தம்)

பச்சவர்ணனுங் கெருடபச்சில் ஏறவே
பாவயர்கள் வெண்குரவை பாடி ஆடவே
வச்சிர வேல்விழியாள் லெட்சுமி பாகன்
மார்பினில் கவுத்துவ மணி கலங்கவே
வெண்ணையுண்ட வாயினாலே
மிக்க எடுத்தார் கெருட புரவிமீதிலே
மண்ணை எல்லாம் ஓரடியாய் அளக்கவே வேண்டி

*வணங்கிட்டே சென்று பிச்சை வாங்கினகள்வா*
*வெள்ளி கைலாச மலைக்குள்ளவே சென்று*
*வெண்டலை போட்டாண்டி தன்னை தெண்டனிட்டாராம்*
*வள்ளலே என் மைத்துனரே வாரும் வாரும்*
*வறட்டாட்டு கோனாரே கிட்டவே வாரும்*
*கூண்டு துருமாமுனியை கொல்லவே வேண்டி*
*கொண்ட கோலம் காட்டுகின்ற கோமானே வாரும்*
*ஆண்ட புகழ் முப்புராதி வைரவநாதன்*
*வாழ்வழிக்க கோள் சொல்லி மந்திரிவாரும்*
*குண்டுரலில் கட்டுபட்ட மோதிரக் கையால்*
*குட்டுபட்ட மாப்பிள்ளையே கிட்டவே வாரும்*
*இத்தேஷ காலம்வரை நித்திரை பண்ணி*
*இன்றைக்கு முழித்தவரே இங்கே வாரும்*
*சித்தமற உத்தேஷம் சொல்லி*
*திருமாலும் திருக்கூட்டம்தனில் இருந்தாரே.* (33)

(வேறு சந்தம்)

*ஏற்றக் கைலையில் வீற்றிருக்கும் சிவனாரே*
*என்னைக் கெருடனை விட்டங்கழைப் பித்ததேது*
*மாற்றமில்லா ஒரு வாசகம் கேள்முகில்வர்ணா*
*மங்கையர்க்கரசி உலகளந்தான் முத்து மாலை*
*வேத வைரவ நாதனோடு முப்புராதி*
*மிக்கான வண்டி மலையனும் முத்துகுமார்பன்*
*ஆரணம் ஓதிய கூடையில் மாலை சுமந்தோன்*
*அன்றைக்கு தெய்வாரை கும்பிடச் சொல்லி அடித்தாய்*
*பால்குடம் கட்டி நமக்கென்று வந்தமுனிவன்*
*பாட்டெழுத பனஓலை நாட்டுக்குள் இல்லே*
*கேள்வி கேளாமல் நீயும் கடலில் துயின்றாய்*
*கேளாத பேச்சும் வகையும் செவிதனில் கேட்டம்*
*சாகத் துணிந்தவர் போலே தலைகீழாய்(ச்) சாடி*
*சாதிக்கிறார் நமக்குப் பெரிய சளந்தான்*
*தோழமை மைத்துனனே முப்புராதியை(த்) தொட்டு*
*சூடக்குடியோடே ஓடச்சொல்லி அடித்த செய்தியை(ச்) சொல்லு*
*என்றைக்கும் இந்த மலைமேலே சும்மா இருங்கோ*
*என்னைப்போலே எத்தனைத் தேவர் இருக்கிறார் இங்கே*
*மன்றிலிருக்கின்ற பூத்தான மூத்த மகனை*
*வல்லமை பார்க்க வரச்சொல்லி ஆள்விடுமென்றார்*

விந்தைக்கு மூத்த கிணபதியாகிய வீரர்
வேட்டை(ப்) புலிபோலே கோட்டையை(ச்) சுட்டுவாறாய்
சுத்த கிணபதி புத்தியினா லேதோ சொல்வார்
தோணியவற்றை சுமந்திட(த்)தான் வெகுசோலி
பூசையைதின்று வய்று கனங்கொண்டு போச்சே
புண்ணியோனே நானும் போருக்கு எப்படி(ப்) போவேன்
பாஷத்து கல்லணை வாகனம் ஒப்பிட்டுத் தந்தால்
பாதகன் கோட்டையை மையமெள்ள சென்றெட்டி(ப்)
பார்ப்பேன்
கொன்ற சடைக்குள்ளே வெள்ளி கைலாஷ(க்)
கோமான்
கோலப் பெருச்சாளி வாகனம் ஒன்று கொடுத்தார்
வெள்ளி கடுவாளம் கல்லணை மேல்சகலாற்று
வீறிட்ட மாணிக்க வீரப்பட்டங்களும் கட்டி
பூத்தான வண்ண சதங்கை கழுத்திலே பூட்டி
பூத்தண்டையுமிட்டு கஸ்தூரி பொட்டுமிட்டார்
பிள்ளையாரங்கே பெருவயிற்றோடு போய் ஏற
பிட்டி கனத்து பெருமூச்சமிடும் பெருச்சாளி
நல்லசவுக்காலே பொல்லாப்பு கட்டின போது
நகண்டு நகண்டு விரைந்து புரண்டு நடக்க
வல்லமை பிள்ளையார் மந்திரத்தால் பெருச்சாளி
வாகனத்தின் செவிதன்னில் உபதேச வைத்தார்
கூடிவருகின்ற தெய்வக்கண்ணாளர்கள் சேர
கூடி(ப்)பிடியாமல் ஓடியே கோட்டை குறுக
கோடாத முத்து தம்பியும் முத்து குமார்பன்
கொண்ட கிணபதி கோலத்தை கண்டேதோ சொல்வார்
ஏழை பெருச்சாளி மீதில் யானையன் ஏறி
இன்னா வருவதைப் பாருங்கோ என்றுரைத்தார்
தீனமில்லாத பெரியவரோடே சினத்தால்
திட்டினத்தார்கள் பிழையாமல் சாவது திட்டம்
இச்சயுடனே எள்பொரியும் பலகாரம்
இட்டதோர் தேங்காய் இளநீர் வாழை(ப்) பழமும்
அப்பம் கொழுவடை தோசை நெய்பலகாரம்
ஆனையுருட்டி தரும்படி சேர உண்டாக்கி
பத்தெட்டு வண்டியில் வாழையிலையை(ப்) பரப்பி
பாவித்துக் கொண்டு கிணபதிமேலே படைத்தார்
தந்திரமாக எல்லோர்க்கும் மூத்த தமயன்
தக்கதோர் பூசயை உண்டவர் கோபம் தணிந்தார்

*என்னளவாகிலும் தந்தவர் மேல் சண்டையிட்டால்*
*எங்கே போனாலும் அவருக்கு கரையேற்றம் இல்லை*
*முட்டுபடாமலே அவரிட்ட பூசயை உகந்து*
*முப்புராதி கோட்டையில் பிள்ளையார் வீற்று இருந்தாரே.*
(34)

(வேறு சந்தம்)

*பிள்ளையார் அங்கிருக்க பிறைசூடி அவருரைப்பார்*
*எள்ளுருண்டை(ப்) பலகாரம் இடும் பூசை உகந்துகொண்டு*
*சைவமுள்ள கிணபதியும் சந்தியிலே போயிருந்தார்*
*வாகனத்தின் முன்போன மருமகனார் சிவத்தைக் கண்டு*
*இனிமேலும் கோட்டையிலே ஏகிடுவோம் இளையோனே*
*குமரகுரு பரமுருகா கோட்டை தன்னை சுட்டுவாறாய்*
*அமர் பொருவதல்லாது அண்ணரைபோல் நினையாதே*
*என்றுரைத்த ஈஸ்பரர்க்கு எடுத்துரைப்பார் வடிவேலர்*
*கும்பிட்டு வருவாரை கொல்லவும் கூடாது*
*நம்மோடே எதுத்ததுண்டால் நாமவரை விடுவோமா*
*மயிலுடன் முதுகேறி வடிவேலும் கைபிடித்தார்*
*பதில்வெல்ல முகமாறும் பன்னிருகை(க்) கோலமுடன்*
*வரமுடய கோட்டையிலே வாராரே வடிவேலர்*
*பார்த்தானே முப்புராதி பாவியவன் ஏது சொல்வான்*
*இப்பவாற வேலவர்க்கு ஏதுவகை இச்சையுண்டு*
*பொன்பணங்கள் விருப்பமில்லை பொருள்காசு*
*விருப்பமில்லை*
*பண்புடய துயிலாடை பணங்காசு விருப்பமில்லை*
*பெண்களோட விளையாட பிரியமுண்டு வேலவர்க்கு*
*கொண்டுவாடா நம்முடய குலத்திலுள்ள அரக்கியரை*
*வண்டிமலை அவனோடி மாதருடன் ஏது சொல்வான்*
*மெல்லியரே எங்கள்கிட்டே வேறு பிடிமானமில்லை*
*தட்டத்தில் வெற்றிலையும் சந்தணமும் கைவேந்தி*
*கொட்டுதர்க்கு இதமாக கூத்தாடி வருவாராம்*
*கண்ணோட்டம் போட்டிடுவார் கைவிளக்கு தானெடுப்பார்*
*மச்சாவி வாருமென்று மடிபிடிப்பாள் ஒரு(த்)தி வந்து*
*கொளுந்தா நீர்வாருமென்று கூப்பிடுவாள் ஒரு(த்)தி வந்து*
*மச்சாவி மச்சாவி என்மனையில் வந்தால் ஆகாதோ*
*பெண்ணாரை கண்டபோது பெருங்கோபம்தான் போச்சே*
*எண்ணமில்லா கோட்டையிலே எப்படிபோய் கலகம்*
*செய்வோம்*

வாறதெல்லாம் வரட்(டு)டனவே மாதரோடே விளையாடி
தருமமில்லா தமயனைப்போல் தம்பியும் போய்
அங்கிருந்தார்
மூத்தவரும் இளயவரும் முப்புராதி பங்கானாரே (35)

(வேறு சந்தம்)

இனிமேலும் கோட்டையிலே இனியாரை விடப்போறோம்
புனிதரிந்த சூரியனை போகவிட்டார் கோட்டயிலே
காலில்லா சாரதியும் கடுங்குதிரை ஓரேறாம்
கோல்வர்ண(த்) தேரேறி கொண்டு சென்றாரே பகவான்
தாடாள்வான் முப்புராதி சந்தன குமார்பனே கேள்
கோடாத சூரியன்தான் கோட்டைதன்னை(ச்) சுடவாற(ா)ன்
காத்திடவே போகாது கனல் பொறுக்க முடியாது
ஏத்தவட வால்முகத்தை எண்மடங்காய்(ச்) சுடவாற(ா)ன்
பெரியவரை(ப்) பேணாவிட்டால் பிழை மோஷம் வந்திடுமே
உலகளந்தான் திருமாலை ஓதியே படிக்க வேணும்
பால்கடலில் நீர்கோரி பானை தன்னை உலையேற்றி
சாத்தரிசி அமுதுமிட்டு சம்பாநெல் அரிசி குத்தி
ஞாயிற்றுக் கிழமையிலே நாலுதெரு வீதிஎங்கும்
எல்லோரும் பொங்கலிட்டு இலைதனிலே படையுமென்றார்
வீதிநல்ல தெருதோறும் விழுந்து கும்பிட்டு எழுந்தார்
ஆதித்தன் மேல்பாடி ஆடியே குரவையிட்டார்
பாச்சலுள்ள தேர்நிறுத்தி பார்த்தாரே பகவானும்
ஏச்சானே முப்புராதி ஏழையிலும் இடும்பனல்லோ
பொங்கலிட்ட பூசையிலும் பூத்தானமோ கோபம்
திரும்பியே போனாலும் சிரிப்பார்கள் நம்மை என்று
விரும்பி அந்த(க்) கோட்டையிலே வீற்றிருந்தாரே
பகவானும் (36)

(வேறு சந்தம்)

போன சூரியன் அங்கிருக்க
பூமி இருள்மூடி(ப்) போனதென்ன
வாய்த்த மனுசனும் மிருகங்களும்
மட்டை மரங்களும் தானுறங்க
மேகம் தனிலுள்ள மழைவறண்டு
வித்து விதைகள் முழைகருகி
மோகமாகிய பிள்ளைகளுக்கு
முலைக்கண் திறக்காமல் சுரப்புவத்தி

கோழி பறவைகளும் குரலமைந்து
கொடிய தோரணம் குலுங்கக்கண்டார்
ஏழு நாளொரு ராத்திரியில்
எல்லா தேவரும் தலைசாய்ந்தார்
எல்லா தேவருக்கும் பொதுவாக
இருந்த சிவனாரும் மறைந்து கொண்டார்
அரியும் பிரம்மாவும் பார்வதியும்
அரனை(த்) தேடியே அலமறந்தார்
மண்ணை ஒவ்வொன்றாய் எண்ணியல்லோ
வளைந்த கடலெல்லாம் சேறாக்கி
பெரிய முத்துனி உலகம் தன்னில்
பிறந்த வள்ளுவரும் எதிரே வந்தார்
அரனைஒரு இடமும் காணவில்லை
ஐயனே நாங்கள் என்னசெய்வோம்
வல்ல நெல்லில் கனிபறித்து
மாலும் பிரம்மாவும் பார்த்தனராம்
பார்த்த இடமெல்லாம் சிவமயமாய்
பரந்து கிடக்குதே திருஉருவம்
ஏத்த அடிமுடி எல்லையது
என்ன இடமென்று தெரியவில்லை'
தாணுவாகிய சிவன் பேரில்
தமிழ்பாடியே தூதுப் போமென்றால்
இந்த படியவர் துதித்திடவே
ஈசன்வடிவு கொண்டு எதிரேவந்தார்
ஆண்ட பெருமானே மறைந்த செய்தி
அறியும் படிக்கென உரையுமென்றார்
ஆன மக்களும் ஆதித்தனும்
அவன் பங்காய் போயிருந்தார்
ஏத்த தெய்வார் படும்பாடெல்லாம்
என்னால் பொறுத்தங்கே இருக்கரிது
தமக்குப் பார்வதி உமக்குமாக
தானே பறந்தோடிவந்தேன் என்றாரே (37)

*(அ-கு) 1. பிரம்மனும், திருமாலும் அடிமுடி தேடிய கதை.*

(வேறு சந்தம்)

மைத்துனரே உந்தமக்கு வயதிருந்தும் புத்தியில்லை
எத்தனைபேர். போனாலும் யாரொருவன் போராதோ

தாடகையை கொப்பளித்த சமர்த்தறிய மாட்டீரோ
ஓடிவந்த பெண்மானை உயிரோடு விட்டேனோ
பலிக்கவந்த சூர்பனகை பண்புகெட்டு(ப்) போகலையோ
குரங்குதன்னை விட்டிலங்கை கோட்டைசுட்டு
அழிக்கலையோ
இருபதுகை ராவணனை இரண்டுகையால்
கொல்லலையோ
என்பேரை(ச்) சொல்லாத இரணியனும் பிழைத்தானோ
வலுவுடைய கஞ்சனையும் மாமன் என்று பார்த்தேனோ
மண்ணுலகில் நான் பிறந்து வந்தருளும் விளையாட்டை
எண்ணுதற்கு கடக்கரையில் இளமணலும் போராது
உம்முடைய மக்களல்லோ உத்தநல்ல மூபேரும்
ஆசாரம் இருப்பதுவும் அதிமதங்கள் இருப்பதுவும்
குதிபோட்டு ஆத்துருவாய் கொண்டறிய
வேணும்மென்றார்
கோவிந்தனார் பாலாறாய் கூண்டரனார் நெய்யாறாய்
தேவிஉமை மஞ்சணயாய் சிவந்ததண்ணீர் ஆறோட
கடலுடைத்து வருவதுபோல் காட்டில்வெள்ளம்
வருகுதல்லோ
கண்டு முப்புராதியவன் கடியவெள்ளம் தனை(ச்)செறுத்து
தெளிந்துவரும் வெள்ளத்திலே சீலைதப்பி விளையாட
கண்டுநின்று உலகுசக்தி கண்காட்டி யாதோசொல்வாள்
கடந்துவந்த வெள்ளமது சோதனைக்கு வருகுதப்பா
அடர்ந்தவெள்ளம் ஆனதிலே விளையாடதே முப்புராதி
தீனமில்லை எங்களுக்கு சிவனுமில்லை குருவுமில்லை
ஆனதெல்லாம் நானெனவே ஆடினார் தீர்(த்)தமது
சினமிருக்கு என்றுசொல்லி சிவனாரும் பார்வதியும்
கைலையிலே போயிருந்து காரணங்கள் பேசுவாராம்
உம்முடைய மக்களல்லோ உத்தநல்ல மூபேரும்
அவரை இங்கே கூட்டிவர ஆளனுப்ப வேண்டுமென்றார்
ஒப்பமுள்ள சேவகர்கள் உண்டானால் அனுப்புமென்றாரே
(38)

(வேறு சந்தம்)

பச்சமால் சொல்லை கேட்டரனாருந்தான்
பாவித்து வெகுவாகவே கோவித்தார்
இச்சையாகவே எள்பொரி அப்பமும்
வேணுமென் றந்த கொம்பனிருக்கிறான்

பூறண பொங்கசோத்துக்கா சைபட்டு
பூரிப்பாய் இருந்தார் முப்புரத்திலே
சீரிணங்கியிருந்த மூபேரையும்
சீக்கிரத்திலே கூட்டி யிங்கேவா
ஆரை(ச்) சொல்லி அனுப்பிவிடப் போறோம்
அரனாரும் வெகுவாகவே கோவித்தார்
கோவித்து அரன்வேகித்து நிற்கவே
கூறும் வேர்வைவந்து உதிக்குமாம்
விபூதிவாரி அணியும் நெத்தியிலே
வேர்வை புத்திரன்வந்து பிறப்பானாம்
பிறந்த நல்லஇணை வேர்வைபுத்திரன்
பெரிய பொன்னாங்குருவி போலோடினான்
சென்று நாடக(க்) கூத்துகள் ஆடியே
திரிபுர(க்) கோட்டையை(ச்) சென்று பார்ப்பானாம்
பொரி அவலும் பழமும் அருந்தின
பேழை வயிற்றிலே காயப்படுத்தினான்
குன்றுபோலே இருந்த கதிரோனை
கோவித்தடித்தொரு பல்லை பிடிங்கினான்
வென்றியான வடிவேலர் கண்டுதான்
வெள்ளி கைலாஷமலையைப் பார்த்தோடினார்
ஓடி(ப்)போன வடிவேலரை(க்) கண்டு
உமைபங்கனும் ஏதுரை சொல்வார்
நாடி முப்புர(க்) கோட்டையை அழிக்க
நல்ல பாலகா உன்னை அனுப்பினேன்
முன்பிறந்த கிணபதியும் நீயும்
முப்புராதி பங்கா இருந்தியாடா
என்பிள்ளையானால் இப்படி செய்யுமாடா
இருக்குமோ முப்புர கோட்டையதுதான்
அதிமதக்காரன் முப்புராதி பங்கள்
அய்யனே மூன்றுபேரும் வந்தார்களே
விதியினாலே சிவலிங்கம் பறிக்கவே
வேணிஅரனார் கும்பப்பன் வேஷம் கொண்டாரே. (39)

குறிப்பு : சிவன் கும்பப்பன் வேஷம் பூண்டு சென்று முப்புராதியர்களையும் முப்புரக்கோட்டைகளை எரித்து சாம்பலாக்குவதுடன் கதைப் பாடல் முடியவேண்டும். ஆனால் பாடல்கள் கிடைக்கவில்லை.

